# சங்கத் தமிழ் மாலை

ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவைக்கு ஓர் அனுபவ உரை


தார்மிக ரத்ன ப்ரதீப

ஸ்ரீ உ.வே. N.R. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்

B.A.B.L., அட்வகேட், மதுரை





வெளியீடு

ஸ்ரீ N.R.K குடும்பத்தினர்

ஸ்ரீ:



# சங்கத் தமிழ் மாலை

## ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவைக்கு ஓர் அனுபவ உரை


ஆசிரியர்

தார்மிக ரத்ன ப்ரதீப

ஸ்ரீ உ.வே. N.R. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்

B.A.B.L., அட்வகேட்,

மதுரை



வெளியீடு

ஸ்ரீ N.R.K. குடும்பத்தினர்

First Edition



| | |
|---|---|
| Title | : Sangath Thamiz Maalai |
| Author | : Sri N.R.Krishnaswamy Iyengar |
| Language | : Tamil |
| Subject | : Spiritual |
| Number of Copies | : 500 |
| Number of Pages | : 160 |
| Date of Publication | : April 2006 |
| Size of the Book: | : 1/8 Demi |
| | |
| Price | : Rs. |

Copies available with the following persons :

1. **Dr. Hema Rajagopalan**
   Chennai : 044-2434 2478
   Bangalore : 080-2656 8527
2. **Mrs. Vijayalakshmi Gosakan**
   Chennai : 044-2474 6155

Printed at : Impressions India
Chennai - 600 033.
Ph : 98842 83268

## நூன்முகம்

திருமகள் கேள்வனாகிய எம்பெருமானின் திருவருளாலும் ஆசார்யப் பெருந்தகையோரின் அருள் நோக்கினாலும் 'சங்கத் தமிழ் மாலை' என்னும் இவ்வுரைநூல் வெளியாகிறது. இது ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவைக்கு வரையப்பட்ட ஒரு சிறு உரை நூலாகும். மதுரையில் பிரபல வழக்குரைஞராக எழுந்தருளி யிருந்த ஸ்ரீ **N.R.K.** என்று பலராலும் அன்புடன் அழைக்கப்பட்ட ஸ்ரீ N.R. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் (அடியே-னுடைய பாட்டனார், மாதாமஹர்) அவர்களால் வரையப்பட்ட ஒரு அனுபவ உரையாகும்.

செந்தமிழும், வடகலையும் திகழ்ந்த நாவினராய் விளங்கிய இவர் ஆங்கிலத்திலும் நல்ல புலமை பெற்றிருந்தார். 'கண்டது கற்கப் பண்டிதனாவான்' என்று அடிக்கடி கூறுவார். தம் கூற்றுப்படியே இம்மும்மொழிகளிலும் எண்ணிறந்த நூல்களைக் கற்றறிந்ததுடன் அவற்றை ஒன்றுடன் ஒன்று இணைத்துச் சிந்தித்து, ஆராய்ந்து, பல அரிய விளக்கங்களை அவ்வப்போது தமக்கே உரிய நகைச் சுவையுடன், சுருங்கக்கூறி விளங்க வைக்கும் பொழுது இவருடன் நட்புக் கொண்டு, இவருடன் உரையாடி மகிழவென்றே இவரை நாடி வரும் அறிஞர்கள் பலரும் கேட்டு, மகிழ்ந்து, வியந்து நிற்பர். புலவர்கள், பல சமயத்தைச் சார்ந்த பெரியோர்கள் மேலும் சாமானி-யோர் எனப் பலரும் பாகுபாடின்றி வந்து இவருடன் கலந்துரையாடி மகிழ்வதுண்டு.

சொற்பொழிவாற்றுங்கால், குறிப்பாகத் தமிழில் உரையாற்று கையில் கம்பராமாயணமும், திருக்குறளும், தமிழ்ப்புலவர்களின் தனிப்பாடல்களும், ஆழ்வார்களின் பாசுரங்களும், ஸ்வாமி தேசிகனின் தமிழ்ப் படைப்புகளும் மடை திறந்த வெள்ளமெனப் பெருகிவந்து கேட்போரை வியப்பிலாழ்த்தச் செய்யும்.

சிறுவயதிலேயே கம்பராமாயணம் முழுவதையும் மனனம் செய்திருந்தார். தம் வாழ்நாள் முழுவதும் கம்பனையும் அவன் படைப்பையுமே சிந்தனையாய் கழித்தவர் என்றால் மிகையாகாது. கம்பனின் பாடல்களை ஆராய்ந்து அவற்றின் ஆழ்பொருளையும், கம்பனின் கவி நயத்தையும் பாராட்டி எண்ணிறந்த கட்டுரைகள் 'செந்தமிழ்' என்னும் மதுரை தமிழ் சங்க மாத இதழில் வெளியிட்டுள்ளார்.

ஆழ்வார்களின் அருளிச்செயல்களில் ஆழங்காற்பட்டிருந்தவர். குறிப்பாக ஆண்டாளின் திருப்பாவையை மிகவும் போற்றி, வணங்கி, உகந்து, ரஸித்து, அனுபவித்து அவர் கூறாத நாளே இல்லையெனலாம். "திருப்பாவை என்பது மார்கழி மாதத்தில் மட்டும் போற்றிப் பாடவேண்டிய நூலல்ல. தினந்தோறும் 'முப்பதும் தப்பாமே' பெருமாள் ஸந்நிதியிலே பாராயணம் செய்யப்பட வேண்டியதாகும், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் போலே" என்பது இவர் கருத்து.

குழந்தைகள் எல்லோருக்கும் சின்னஞ்சிறு வயதினிலேயே (மூன்று வயதிலேயே) திருப்பாவையைக் கற்றுக் கொடுக்க வேண்டும். அது அவர்கள் மனதில் பதிந்து என்றும் அழியாதிருந்து அவர்களுக்கு அனைத்து மங்களங்களையும் அளிக்கும் என்று அடிக்கடி வற்புறுத்திக் கூறுவார்.

திருப்பாவை சங்க கால வைணவ இலக்கியங்களுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. ஸ்ரீ ஆண்டாளும் அவளுடைய திருத்தகப்பனா-ராகிய ஸ்ரீ பெரியாழ்வாரும் சங்கம் அமைத்து தமிழ் வளர்த்த பாண்டிய நாட்டில் அவதரித்தவர்கள். எனவே இயல்பாகவே அவர்கள் இலக்கிய நயத்துடன் கூடிய, யாப்பு வழுவா இலக்கண நெறியுடன் கூடிய தமிழ்ப் பாடல்களைப் படைத்தனர். சங்க காலத் தமிழர்களின் வாழ்வு, பக்திநெறி, பண்பாடு, வைணவர்களின் வாழ்க்கை நெறிமுறைகள் போன்ற அனைத்தையும் திருப்பாவையில் காட்டியுள்ள ஸ்ரீ ஆண்டாளும் தன் நூலை 'சங்கத் தமிழ் மாலை முப்பது' என்றருளிச் செய்துள்ளாள்.

எனவே இது ஒரு சங்கத்தமிழில் அமைந்த வைணவ இலக்கியம் என்ற கண்ணோட்டத்தில் ஆராய்ந்து இவ்வுரையை ஸ்ரீ N.R.K. ஸ்வாமி வரைந்தருளியுள்ளார். அறுபது ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டு, கையெழுத்துப் பிரதியாக இருந்த இவ்வுரையை அச்சிட்டு வெளியிடவேண்டுமென்ற நெடுநாளைய அவா எம்பெருமானின் திருவருளால் அவர் பிறந்த விய வருடத்திலேயே இப்பொழுது நிறைவேறியுள்ளது. திருப்பாவைக்கு இதுவரை அறிவிற் சிறந்த ஆன்றோர்களாகிய நம் முன்னோர்கள் பலரும் அற்புதமாகப் பல உரைகள் அருளிச் செய்திருப்பினும், இது ஒரு சங்கத்தமிழ் இலக்கியம் என்னும் புதிய கண்ணோட்டத்துடன் இவ்வுரை வரையப்பட்டிருப்பதால் தமிழின் பெருமையையும், சுவையையும் நன்குணர்ந்த தமிழ் நல்லோரும், அவற்றை அறிய விரும்பும் இக்கால இளைய தலைமுறையினரும் இதை விரும்பி ஏற்று படித்து மகிழ்வர் என்று கருதி இந்நூலை மகிழ்வுடன் வெளியிடுகிறோம்.

இந்நூலில், திருப்பாவை உரையின் தொடர்ச்சியாக ஸ்ரீ N.R.K. ஸ்வாமியால் 1955ஆம் ஆண்டு வரையப்பட்ட 'மார்கழி நோன்பு' மற்றும் 'நாச்சியார் திருமொழி' ஆகிய கட்டுரைகளும் இடம் பெறுகின்றன. ஸ்ரீ ஆண்டாளின் அருளிச்செயலாகிய இவ்விரண்டு பிரபந்தங்களிலுமுள்ள சிறப்புகளை விளக்கும் வகையில் இக்கட்டுரைகள் அமைந்திருப்பதால் படிப்போருக்குப் பயன் தரும் என்னும் நோக்கத்துடன் இவையும் இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளன.

மதிப்புக்கும், மரியாதைக்கும் உரிய வித்வான் உயர்திரு Dr. V.N. வேதாந்ததேசிகன் அவர்களிடம் இவ்வுரையை அச்சிட்டு வெளியிட வேண்டுமென்னும் எங்கள் எண்ணத்தைத் தெரிவித்-ததும், அதைப்பாராட்டி, ஊக்குவித்ததுடன் தன்னுடைய இடை-விடாத எழுத்துப்பணிகளுக்கிடையில், இவ்வுரையை வரியடைவே

வாசித்து, மேற்கோள்களின் இடம்கண்டுரைத்து, மேலும் உரையின் சிறப்புகளையுணர்ந்து, அடுத்து இந்நூலைப் படிப்போர்களும் அவற்றை அனுபவித்து இன்புற வேண்டுமென்னும் உயரிய நோக்கத்துடன் ஒவ்வொரு பாசுரத்துக்கும் 'விசேஷக் குறிப்புகள்' வழங்கியுள்ளார். அது ஒவ்வொரு பாசுரத்தின் கருத்துரையையும் தொடர்ந்து 'விசேஷக் குறிப்பு' என்று அச்சிடப் பட்டுள்ளது. வாசகர்கள் இவ்வுரையை உணர்ந்து அனுபவிக்க இக்குறிப்பு பெரிதும் உதவும் என நம்புகிறோம். இதுமட்டுமன்றி ஸ்ரீ N.R.K. ஸ்வாமியினிடத்தில் தன் மதிப்பையும் மரியாதையையும் செலுத்தும் வகையில் தான் அவரோடு நெருங்கிப் பழகிய அனுபவங்களையும் நினைவுகூர்ந்து, அவருடைய அறிவாற்றல், நற்பண்புகள் ஆகியவற்றை விளக்கி அணிந்துரை அளித்துள்ளார். உயர்திரு Dr. V.N. வேதாந்ததேசிகன் அவர்களுடைய அறிவு, அனுபவம் ஆகியவற்றுக்கு எதிரே இவை எதுவுமற்ற அறியாத பிள்ளைகளாகிய எங்களுக்கு மேற்கண்ட உதவிகளைப் புரிந்ததுடன், தம்மையும் ஸ்ரீ N.R.K. ஸ்வாமியின் குடும்பத்தில் ஒருவராக இணைத்துக் கொண்ட அவர்தம் பெருந்தன்மைக்குத் தலையல்லால் கைமாறில்லை.

பெறற்கரிய 'பெருநிதி'யாகக் கிடைத்த இவ்வுரையை காலத்தால் அழிந்துவிடாதபடி பாதுகாத்துக் கொடுத்துதவிய அடியேனுடைய மாமாவும் ஸ்ரீ N.R.K. ஸ்வாமி அவர்களுடைய குமாரருமான (ஸமீபத்தில் மறைந்த) ஸ்ரீ N.K. ராமஸ்வாமி ஐயங்கார் அவர்களுக்கு நாங்கள் மிகவும் கடமைப்பட்டுள்ளோம்.

இந்நூலை அச்சிட்டு வெளியிடவேண்டுமென்ற அவாவைத் தெரிவித்தவுடன் ஸ்ரீ N.R.K. குடும்பத்தினர் பலரும் மகிழ்வுடன், மனமுவந்து வழங்கிய நிதியுதவியுடன் இந்நூல் வெளியிடப் படுகிறது. அந்நல்லோர் யாவர்க்கும் நன்றி.

இந்நூலை சிறப்பாக அச்சிட்டுத்தந்த திரு. V. மாதவன் (இம்ப்ரஷன்ஸ் இண்டியா) அவர்களுக்கும் எங்கள் நன்றி.

நிறைந்த ஞானமும், சீரிய அனுஷ்டானங்களும், உயர்ந்த பக்தியும் பெற்று நிறை வாழ்வு வாழ்ந்திருந்த வைணவ செம்மலாகிய ஸ்ரீ N.R.K. ஸ்வாமி தம் ஆசார்யராகிய ஸ்ரீஅஹோபிலமடம் 42-ம் பட்டம் ஸ்ரீமத் அழகியசிங்கரிடம் தம்மைப் பூரணமாக ஸமர்ப்பித்து, அவர் திருவடி நிழலையே தமக்கு எல்லாமாகக் கொண்டு வாழ்ந்திருந்தார். எனவே இச்சிறுநூலை அவருடைய திருவுள்ளம் உகக்குமாறு அவர் ஆசார்யராகிய ஸ்ரீமத் அழகியசிங்கரின் ஸந்நிதியில் சமர்ப்பணம் செய்து தன்யராகிறோம்.

பணிவுடன்

ஹேமா ராஜகோபாலன்,<br>
ஸ்ரீ N.R.K. ஸ்வாமி குடும்பத்தினர் ஸார்பாக,<br>
ஏப்ரல் 2006



தார்மிக ரத்ன ப்ரதீப

**ஸ்ரீ உ.வே. N.R. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்**

(1886-1966)

B.A.B.L., அட்வகேட், மதுரை

ஸ்ரீ:

# அணிந்துரை

## இந்நூலாசிரியரைப் பற்றி

இந்த நூலை அறிமுகம் செய்யும்போது, தற்கால வாசகர்களுக்கு, ஆசிரியர் ஸ்ரீ உப. வே. N.R. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி (1886-1966) பற்றிச் சிறு குறிப்பு வரையவேண்டியுள்ளது. அவருடைய பெருமையை நேரடியாக அறிந்தவர் தற்காலம் அதிகம்பேர் இருக்கமாட்டார் என்று கருதுகிறேன். அதனால் இது அவசியமாகிறது.

ஸ்ரீ N.R.K. ஸ்வாமி - அப்படித்தான் அவர் வெகுவாகப் பரவப்பட்டவர். நீடாமங்கலத்தில் பெரிய ஜமீன்தார் குடும்பத்தில் பிறந்தவர். கப்பல் வைத்து வணிகம் செய்துவந்த குடும்பம். மெய்யாகவே கருவிலே திருவுடையார்! கைங்கர்யஸ்ரீயினாலும் பெரும்புகழ் அடைந்தார் என்பது பொருந்தும். ஆனால் ஒரு சூழலில் தனது உரிமைகளைத் தன் சகோதரரிடம் விட்டு விட்டு, கல்விகற்க முனைந்தார். சென்னையில் சட்டம் பயின்றுவிட்டு மதுரை நகரில் வக்கீல் தொழில் தொடங்கி ஐம்பதாண்டுகளுக்கு மேலாகக் கொடிகட்டிப் புகழுடன் வாழ்ந்தார்.

தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் நல்ல தேர்ச்சி; சிறப்பாக எழுதும் திறன்; சொற்பொழிவாற்றும் ஆற்றல்; நகைச்சுவையுடன், சிறப்புற, பொருள் செறிந்த பேச்சு வழங்கி மகிழ்விக்கும் இயல்பு - இதையெல்லாம் வளர்த்துக் கொண்டார்.

ஏழு வயதில் கம்பனுக்கு அறிமுகமாயிற்று. இராமகாதைப் பாட்டுக்கள் 'கண்ட பாடம்' ஆயிற்று. நினைவாற்றல் நம்ப முடியாதபடி வியப்புற அமைந்தது. கம்பனிடம் தெய்வத்-திடமேற்படுவது போன்ற ஆழ்ந்த பக்தி. ஒவ்வொரு நாளும் காலை எழுந்தவுடன் கம்பனின் திருவுருவத்தின் முன்பு காதலுடன், பக்தியுடன் ஈடுபட்டு, மெய்யுருகி தியானம் செய்வதை ஒரு வழக்கமாகக் கொண்டவர். 'தேரழுந்தூ'ரில் 'கம்பமேடு' கண்டு நினைவிடமாக்கியதிலும், ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாம ஸபை அமைத்-ததிலும் பெரும்பங்கு அவருடையது. காரைக்குடி கம்பன் கழகம் நிறுவியதிலும் அவர் தொண்டு சிறப்புற்று விளங்கியது.

மதுரையில் பிரபல வழக்குரைஞரான (திருப்புல்லாணி நடாதூர்) ஸ்ரீ T.C. ஸ்ரீநிவாஸ ஐயங்காருடைய உதவியாளர்

(Junior) ஆகத் தொழில் தொடங்கினார். முன்னவர், நாலாவது தமிழ்ச்சங்கத்தின் துணைத் தலைவராகவும் ஸ்ரீ N.R.K. செயலாளராகவும் கால் நூற்றாண்டுகளுக்குமேல் பணியாற்றினர். தமிழ்ச்சங்கம் நடத்திவந்த பண்டித, பால பண்டித வகுப்புகளுக்கு இயன்றபோது பாடம் நடத்தி மகிழ்வார். 'செந்தமிழ்' மாத இதழில் கட்டுரைகள் எழுதுவார். ஆனால் எழுதுவதிற் காட்டிலும் சொற்பொழிவாற்றுவதில்தான் அதிக ஈடுபாடு காட்டினார், அதிக புகழொளி பரப்பினார் என்று சொல்லவேண்டும்.

ஸ்ரீ T.C. தேசீய இயக்கத்தில் ஈடுபாடு கொண்டவர். இருபதாண்டுகள் சென்னை மாகாண மேல் சபை அங்கத்தினராயிருந்தவர். அதன் தாக்கத்தினால் போலும் ஸ்ரீ N.R.K. யும் காங்கிரஸ் இயக்கம், சமூகப்பணி இவற்றில் ஈடுபட்டார். ஆயினும் ஹிந்து தர்ம மார்கத்தில் கலங்காது நின்ற கலங்கரை விளக்கம். "தார்மிக ரத்ன ப்ரதீபம்" என்ற விருது அவருக்கு மிகப் பொருத்தமாய் அமைந்தது. ஸ்ரீ காஞ்சி மடாதிபதியுடன் நெருங்கிப் பழகியவர். ஸ்வாமிகள் இவர் இல்லத்திற்கு வந்து அளவளாவும்படியிருக்கும். ஸ்ரீமத் அழகியசிங்கர்கள் 40, 41, 42, 43, 44 - ஆம் பட்டம் ஆகியவர்களுடன் நெருங்கி ஸமாகமம் பெற்றுப் பரம கிருபைக்குப் பாத்திரமானவர் என்பது மிக முக்கிய குறிப்பு. அதிலும் ஸ்ரீ தேவனார்விளாகம் அழகியசிங்கர் பூர்வாச்ரமத்தில் ஸ்ரீ N.R.K. ஸ்வாமியின் உபன்யாஸச் சிறப்பை நன்கு அறிந்து சுவைத்தபடி. ஸ்வாமியின் திருமாளிகைத் தோட்டத்தில், திருவிண்ணகர் எம்பெருமான் உத்ஸவம் கண்டருளும் காலையில், தினம் தினம் ஸ்ரீ N.R.K. ஸ்வாமி உபந்யஸிப்பதும், அடியேன் பாட்டனார் ஸ்ரீ நவநீதம் கிருஷ்ணமாச்சார்ய ஸ்வாமி, ஸ்ரீ சின்னாமு பாட்ராச்சார்யார் ஸ்வாமி, ஸ்ரீ இளையவில்லி ஸ்ரீநிவாஸாச்சார் ஸ்வாமி போன்றோர் மூன்று மணி அவகாசம் அமர்ந்து ரஸித்து அனுபவித்த காட்சி என்றும் என் மனத்திரையை விட்டு அகலாது நிற்கும். என்னே நம் இழப்பு, ஒலிப்பதிவு வசதிகள் அக்காலத்தில் இல்லாதது.

ஸ்ரீ N.R.K. ஸ்வாமி பெருந் தமிழ்ப்புலவர். வடமொழியில் பரமரஸிகர். ஸம்பிரதாய நூல்களைக் 'குருமுகேந' க்ரமமாகக் கிரஹித்தவர். இப்படி ஒரு 'சேராச்சேர்த்தி' வேறெங்கும் காண்பது அரிது. அதுவும் பிரபல வழக்குரைஞரிடத்தில்! சென்னையில் பிரபல வக்கீலும் முன்னாள் நீதிபதியுமான ஸ்ரீ V.V.S. (ஸ்ரீ வி.வி. ஸ்ரீநிவாஸ ஐயங்கார்) நமது பண்டைய நூல்களில் அறிவும் ஈடுபாடும் கொண்ட வள்ளல். அவர் நமது ஸ்ரீ N.R.K.யின் இனிய நண்பரும்கூட. அவர் ஸ்ரீகாஞ்சியில் தேவப்பெருமாள் வைகாசிப் பெருவிழாவில் ஆண்டு தோறும் ஒன்பது நாட்கள் ஸதஸ் நடத்தி, தினம் ஒரு வித்வானின்

சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய்து வைத்திருப்பார். வித்வான்-களென்றால் ஸாமான்யரல்லர், அவர்கள் மாபெரும் அறிஞர்கள். 1943-ல் முதல் பேச்சு ஸ்ரீ N.R.K. ஸ்வாமியுடையதாக அமைந்தது. 'மார்கழித்திங்கள்' பாசுர விஷயம். மூன்று மணிகாலம் சொற்பெருக்கமுதம் பாய்ந்தது. முடிவில் ஸ்ரீ V.V.S. எழுந்து 'இந்த வருஷம் தொடர்ந்து எல்லா நாட்களிலும் N.R.K. அவர்களே பேசுவார்' என்று அறிவித்து விட்டார்!

ஸ்ரீ N.R.K.யின் எழுத்தோ, பேச்சோ வெகுகாலமாகத் தடம்பதிந்த பழைய பாதையாக இராது. புதிது வேண்டுமென்று கருத்தல்ல; புதிது உள்ளதே, அதைச் சொல்ல வேண்டாமோ ? என்ற பாரிப்புத்தான். இதை இந்த 'சங்கத் தமிழ்மாலை' நூலிலும் காணலாம். 'மார்கழி நோன்பு', 'நாச்சியார் திருமொழி' என்ற இணைப்புகளையும் ஆய்ந்து வாசிப்பவர்களுக்கு இது புரியும்.

இன்னொன்று சொல்லவேண்டும். ஸ்ரீஸ்வாமி தேசிகன் 'ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார' நூலில் மதுரகவிகளுக்கான துதிப்பாசுரம் ஒன்று பணித்துள்ளார். "இன்பத்தில் இறைஞ்சுதலில்...". இது கண்ணி-நுண்சிறுத்தாம்புப் பாசுரங்கள் ஒவ்வொன்றின் ஸாரக் கருத்தைக் குறிப்பிடுவதாகச் சுவைக்கக்கூடும். அவ்வளவில்தான் உரைகள் உள்ளன. ஸ்ரீ N.R.K. ஸ்வாமியின் நுண்ணிய ஆராய்ச்சியின் விளைவாக இப்பாசுரத்தில் சொல்லப்பட்ட பத்து குணங்களும் முறையே பத்து ஆழ்வார்களுக்கு ஸூசநம். இதை ஸ்ரீ N.R.K. ஸ்வாமி நிர்வஹித்த முறையில் விளக்கங்கள் சேர்த்துத் தந்து உதவிய (ஸமீபத்தில் மறைந்த அவர் குமாரர்) ஸ்ரீ N.K. ராமஸ்வாமியின் கட்டுரையை அடியேன் மலரொன்றில் இணைக்கக் கிடைத்து மகிழ்ந்தேன்.

தமிழ் எழுத்து சீர்திருத்தம் அவர் ஒப்பாதது. தமிழ் எழுத்துக்கள் மங்கலமாகப் பிரதக்ஷிணமாக வரையப்படுவது, இடமிருந்து வலமாக. அவை அப்படித்தான் நீடிக்கவேண்டும் ! 'தனித்தமிழ்' கூட அவர் ஏற்காதது. கருத்துத்தெளிவு, துயக்கின்றி (ஸம்சய - விபர்யயமற) உரைப்பது இவை முக்கியம். புதுக்கவிதைப்பக்கம் கண்வையார். உயர்ந்த கருத்துக்கள் எங்கிருந்தாலும் வரவேற்று பாராட்டுவார். எப்போதும் ஸஹ்ருதய அன்பர்களுடன் மாலைப் பொழுதைக் கழிப்பார். அன்றைய தமிழ்நாட்டின் ஆஸ்தானகவி மஹா மஹோபாத்யாய ஸ்ரீ K.S. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள், ஸம்ஸ்க்ருத மஹாகவி - பிரின்ஸிபால் ஸ்ரீ V. ஸுப்ரமண்ய ஐயர், தமிழ்சங்க வித்வான்கள் பலர், அவர் இல்லத்தில் மாலைப்பொழுதில்

அளவளாவும் வழக்கமுடையவர்களாவர். மதுரை ஆஸ்திக நிகழ்ச்சிகளில் முதற்பாகம் ஏற்பவர்.

மதுரையில் ஸ்ரீ வேதாந்ததேசிக பக்த ஸபையின் தலைவராகப் பல்லாண்டுகள் பணி செய்தார். ஆண்டு விழா நடத்திப் பல புலவர்களைக்கூட்டி, உரியவருக்கு விருதுகள் வழங்கி ஸம்ப்ரதாயப் பணி செய்தார்.

இஸ்லாமிய நண்பர்கள் பலர். தொழில்ரீதியில் கூட நட்பு ஏற்படும். ஆகையால் கவிஞர்கள் அவரைப் புகழ்ந்து பாட விழைவர். ஒருதடவை என்னிடம் 'இவரும் பஞ்சகால பராயணர். நமக்கு ஸந்நிஹிதர்' என்று ஒரு இஸ்லாமியரை அறிமுகப்படுத்தினார். சிறியவனாகிய எனக்குப் புரியவில்லை. அப்புறம் விளக்கினார்.

ஒருநாள் பல பண்டிதர்கள் புகழ்மாலைகள் பாடி அவருக்கு ஸமர்ப்பித்த நிகழ்ச்சி-பலவும் சித்திரகவி-நாகபந்தம், கமலபந்தம், ரதபந்தம் என்பன போல. அடக்கமாகப் புன்முறுவலுடன் கேட்டு உள்ளம் உகந்து நன்றிப்பெருக்கைக் கைகுவித்தும் காட்டுகிறார். ஒரு பெரும் புலவர் அவர் முதலெழுத்துக்களை (N.R.K) தன் புகழ்மாலையில் பயன்படுத்தி அவர் பெரும் பண்பாளர், கல்விக் கடல், புலவர்கோமான் என்றெல்லாம் வர்ணித்துக் கடைசிவரியில் 'என்னார் கிருட்டினசாமியை' (N.R!) என்று முடித்தார். உடனே

ஸ்ரீ N.R.K. ஸ்வாமி உள்ளே சென்று தட்டு நிறைய பழங்கள், தாம்பூலம், நிறைய சம்மானம், பரிவட்டம் எல்லாவற்றையும் கொண்டு வந்து அவருக்கு வழங்கினார். யாவரும் 'ஏன் இந்த வேற்றுமை' என வியந்து நிற்கையில், அவர் 'இந்தப் புலவர்தான் உண்மை கூறுகிறார். வெறும் புகழ்ச்சி இவருக்கும் பிடிக்காதது, நானும் வெறுப்பது. மேலும், இவரென்ன பாடினார்?' 'என்னார், என்று சொல்லமாட்டார் கிருட்டினசாமியை!' 'இதுதானே பாராட்டத்தக்க பாட்டு!' என விளக்கமளித்ததும் அனைவரும் பிரமிப்பில் வாயடைத்து நின்றனர்.

'இல்லை' என்ற சொல்லை வெறுத்தவர். இறைவன் கருணை-யின் மிகுதியால் வழங்கியுள்ளதை அனுபவித்துக் கடமைகளைச் செய்வதே நம் ஸ்வரூபம் என்று சொல்லுவார். செயலிலும் காட்டுவார். வழக்குரைஞர் தொழிலை நேசித்தார். தன் மூன்று குமாரர்களையும், தன் மாப்பிள்ளைகளையும் கூட வக்கீல்களாகவே பெறக்கிடைத்தது.

என் பாட்டனார் ஸ்ரீ நவநீதம் ஸ்வாமியிடம் அதீத பக்தி கொண்டு, அவர் திருவுருவசித்திரத்தைப் பூஜித்து வந்த பண்பாளர். "அவர் ஒரு ரிஷி, வஸிஷ்டாதிகள் போல. தற்காலப்போக்கில்,

'அவரையும் ஒரு ஸ்ரீவைஷ்ணவ வித்வான் பலரைப்போலே' எனக் கருதலாகாது'' என்று எனக்கு அறிவுறுத்தினார். அருளிச்செயல் உரைகள் வெளியிட எனக்கு உத்வேகம் ஏற்பட முதல்வித்து ஊன்றியவர் அவரே. இவ்விரு குடும்பங்களுக்குமிடையில் இந்த நெருக்கம் இன்னும் தொடர்வது நெகிழ்விக்கிறது.

இந்த சிறிய நூல் ரஸிகர் பாராட்டத்தக்கது. சிறியதாயிருப்பது சாமானியரும் சோம்பாமல் படிப்பார் என்று நம்பிக்கை தருகிறது. இந்த வாய்ப்பு எனக்குக் கிடைத்தது அந்த ஆத்மாவின் நித்ய ப்ரீதியாலே!

## இந்நூலைப்பற்றி

இது புதியதோர் உரை. ஸ்ரீ ஆண்டாளுடையவும் நம் ஆசார்யர்களு-டையவும் திருவுள்ளமுகக்குமாறு அமைந்திருப்பது. உரை சுருக்கமானதுதான். பொருட்செறிவு, விளக்கம் கோடி காட்டும் ரீதியில் அமைந்திருப்பது. இவை ஒரு தெளிவான விளக்கவுரை வேண்டுமென வலியுறுத்துகின்றன என்று ஒப்புக்கொள்ளும் அதே வேளையில், ஆர்வமிருந்தாலும் தன் குறை-நிறைகளை நன்-குணர்ந்த நான் நாணி, சுருக்கமாகவே குறிப்புகள் வழங்கி யுள்ளேன்.

நூலின் சிறப்புகள் சில :

1. ஸ்வாமி தன் இதயத்தில் ஸ்ரீ ஆண்டாள் அருளிச் செயல் விதைத்-திட்ட அனுபவங்களையே எழுதுகிறார்.

2. 'பாவை' - ஸ்ரீ ஆண்டாளின் ஹார்த விக்ரஹம், அது ஸ்ரீ ந்ருஸிம்ஹ மூர்த்தி என்று அவர் அனுபவம்.

3. 'பறை' - ரக்ஷணம், நாம் பெருமாளிடம் வேண்டும் பயன், கைங்-கர்யம் என்று கொள்ளலாம்.

4. சங்கத்தமிழ் என்ற 'உரைகல்'லில் உறைத்துப் பொலிய வைக்கிறார் 'திருப்பாவை'யை என்று கூறலாம். அதனால், ஸ்ரீ ஆண்டாள் திருவாக்கை அடிப்படையாகக்கொண்டு இந்த நூல் தலைப்பை 'சங்கத்தமிழ் மாலை' - ஓர் அனுபவ உரை என்று அமைத்துள்ளோம்.

5. நாச்சியாரின் ஸ்ரீஸூக்தியே முதல் நூல். எஞ்சிய 23 பிரபந்-தங்களும் (திருவாய்மொழி முதல் இராமானுச நூற்றந்தாதி ஈறாக) வழி நூல்கள் மற்றும் விரிவுரை என்று ஸ்ரீ N.R.K. ஸ்வாமி தீர்ப்பு.

6. உபநிஷத்துக்களும், பிரம்மஸூத்ரங்களும் 32 வித்யைகளை - பரம்பொருளை அடைய வழிகளாக - எடுத்துத்தருகின்றன. மது வித்யா, தஹரவித்யா, ந்யாஸவித்யா என்னும் பிரபத்தி மார்க்கம்

இவை முதலானவற்றுடன், ஸ்ரீ ஆண்டாளின் 'நோன்பு மார்க்கம்' 33-வது வித்யை என்னலாம் என்கிறார். 'அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணு பத்னீ' என்று வேதம் போற்றிய பிராட்டியே உபதேசித்த வித்யை என்பதால் இதன் பெருமை விளங்கும் என்கிறார்.

7. ஸ்ரீ பராசரபட்டரின் 'நீளாதுங்க' என்கிற தனியனில் 'நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய:' என்ற சொற்றொடருக்கு ஸ்வாமி தரும் சுவையான குறிப்பு நம் நினைவிலிருக்கத்தகும்.

**நூல் அமைப்பு**

முதல் ஐந்து பாசுரங்கள் பாயிரமாகும். பரவ்யூஹாதி பஞ்ச ரூபங்கள் வழிபாடு. நோன்பின் நியமங்கள், பலன் பற்றிய குறிப்பு.

6-15 பத்து பாசுரங்கள் - பிரகிருதி வசப்பட்ட தோழியர்களைத் துயிலெழுப்புதல்

16-25 பத்து பாசுரங்கள் - நோன்பின் விவரங்கள். திருமுக்குளமாகிய யமுனையில் நீராடி, சுத்தராய், கோயில் வந்து, பெருமாளைத் திருவோலக்கத்தில் எழுந்தருளி யிருக்கவேண்டி, பின் தன் பிரார்த்தனையைத் தெரிவிப்பது.

26 - இது முன்னோர் அனுஷ்டித்த கிரமம் என்று தெளிவு தருதல்.

27-30 நோன்பு நிறைவேறுதல், பயன் கூறல்.

அடியன்,
V.N. வேதாந்ததேசிகன்

# பொருளடக்கம்

# சங்கத் தமிழ் மாலை

## முன்னுரை

**ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்**

உள்ளமும், உயிரும் உயர்ந்த திறத்தனவாவதற்கு நோன்புகள் மிகப் பழமையாக நோற்கப் பெறுவன. வினை செய்யும் வகையில் ஒருவர் ஏற்றமுடையராவதற்கு இத்திறத்தின் உயர்வு இன்றியமையாதது. மனித உலகு முழுதும் நெடுங்காலமாக எல்லா தேயத்திலும் எல்லாப் பகுதியாரிடையும் நோன்புகள் பலபடியாக வழங்கி வருகின்றன என்பதும், அவைகளால் மக்கள் பெறும் பயன்களாகக் கருதப் படுவனவும், இந்த நோன்பின் பெருமைக்குச் சான்றாவன.

இவ்வித நோன்புகளை நோற்றலும் கல்வி கற்றலைப்போல் பல பிறப்பிலும் உயிர்த்துணையாய் நிற்கும் செல்வத்தை ஈட்டுவதாகும் என்பது குறளுடைத் தேவரின் கொள்கை:

*ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு*
*எழுமையும் ஏமாப்புடைத்து. [40.8]*

என்பதையும்

*இலர்பலராகிய காரணம் நோற்பார்*
*சிலர் பலர் நோலாதவர். [27.10]*

என்பதையும் உற்றுநோக்குமிடத்துக் 'கல்வி உயிர்ச்செல்வமாகி, பின்னேழ் பிறப்புகளுக்கும் உதவுகிறது. அது போல் 'முற்பிறப்பு-களில் முயன்று முற்றிய நோன்புகள் இப்பிறப்பில் உயிர்த் துணையாகி உதவுகின்றன' என்பதைத் தோற்றுவித்து, காணும் உலகில் நோன்புகளைக் கைக்கொண்டு தலைக்கட்டுவார் சிலரும், அஃதில்லாதார் பலரும் இருத்தலை எடுத்துக்காட்டி, ஆதலான் 'நோன்பும் உயிர்ச்செல்வம்' என்பதைத் தேவர் தன் குறளில் தலைக் கட்டுகிறார். "த்வம்" என்னும் அதிகாரத்திற்கு இக்குறள் தலையணியாய் நிற்பது. அத்தவத்தின் உருவத்தை

*உற்ற நோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை*
*அற்றே தவத்திற் குரு. [27.1]*

என்றுரைத்து, இத்

*தவமும் தவமுடையார்க்காகும் அவமதனை*
*அஃதிலார் மேற்கொள் வது [27.2]*

என்று அறுதியிடுதலின், இதற்கு விதையாக முற்றவமிருந்து முளைத்தாலன்றி நற்றவ முயலுதலும் கைகூடுதலும் அரிது

என்பதைத் தெளியக்காட்டுகிறார். ஆதலின், வாழ்க்கையில் ஈட்டும் செல்வங்களில் கல்வி நோன்பு இவைகளின் வழி எய்தும் உயிர்ச் செல்வங்கள் மற்றெல்லாச் செல்வங்களிலும் ஏற்றமுடையன என்பது வள்ளுவர் வாய்மொழி வழிப் பெற்றாம்.

இந்நோன்புகளின் வகைகளும் படிகளும் பலவாய் பரந்து விரிந்துள்ளன. பலகலை நூல்கள் இவைகளைப் பரக்கக் கூறுவன. ஆதலின் அவரவர் கருதும் பயனுக்கேற்ப நோற்பது நோக்கி அந்நோன்புகளைத் தக்க பெரியாரிடம் தெரிந்து கையாளுதல் மரபு.

பெரியாழ்வார் திருமகளாய் வளர்ந்த ஆண்டாள், பெருமாள் தனக்கு நாயகனாக வேண்டும் என்னும் உறுதி கொண்டாள். அதை நிறைவேற்றுவதற்கேற்ற நோன்பைத் தெளிந்தாள். 'கொளுத்தக் கொண்டு, கொண்டது விடாத' பேதைப் பிராயத்துப் பெண்தான் ஆதலின், தன்னையொத்த பேதைப்பெண்டிர் நோற்றவகை ஏதேனும் உண்டா என்று தேடினாள். ஸ்ரீ பாகவத புராணம் 10-வது ஸ்கந்தம் 22-வது அத்யாயத்தில் 'காத்யாயனீ வ்ரதம்' என்று பெயர் வழங்கிய ஒரு நோன்பை, 'கண்ணனைத் தங்களுக்குப் புருஷனாக அடைதற்பொருட்டு அறிவிலா இடைச்சிறுமியர்கள் நோற்று அவனை அடைந்தார்கள்' என்பதைத் தெரிந்தாள்.

இது வைதிக மத ஸம்மதமான நோன்பு. இதில் வழிபடு தெய்வம் காத்யாயனீ என்னும் நாமமுடைய பார்வதி தேவியாவாள். இப்-பெயரின் பெருமை என்னையோவெனின், 'கதி', 'அயன' என்னும் இரண்டு பதங்களால் மோக்ஷமார்கங்கள் எவையென்று விசாரிக்-கிறவர்களின் கூடஸ்தரான கத்யயனர் என்னும் ரிஷியின் குலத்தில் பிறந்தவள் காத்யாயனீ. ஆதலின் அதற்கேற்ப பகவத் ஸ்வரூபத்தை முற்றிலும் விசாரித்த பெரியாழ்வார் திருமகளாகிய இவள் மற்றொரு வழிபடு தெய்வத்தைக்கருதாது அந்தக் கண்ணனையே, அவனை அடைவதற்கு உபாயமாய்க் கொண்டு, அவனை அடைய நோற்கிறாள். ஆதலின், வைதிக மதத்தின் போக்கைப் பின்பற்றி கண்ணன் ஒருவனையே ஆறும் பயனுமாக உடைய ஆழ்வார்கள் உறுதிப்பாட்டைத் தலைக்கட்டும் வகையில் இவள் நோற்ற நோன்பும் அதன் பயனும் திருப்பாவை 30 பாக்களில் பொதிந்துள்ளன.

முதலாழ்வார் தொடக்கமாய் ஆழ்வார், எம்பெருமானார் ஸம்பிரதாயம் என்று நாட்டில் நலம் பெற்று வழங்கும் ஒரு கூட்டத்தாரின் கொள்கைக்கு இத் திருப்பாவை முதல் நூலாகவும், 143 செய்யுள்கள் கொண்ட நாச்சியார் திருமொழி இதன் குறிப்புரையாகவும், மாறன் சடகோபன் ஆக்கித்தந்துள்ள நான்கு நூல்களும் இவைகளின் விரிவுரையாகவும், மங்கையர்கோன் ஆறு நூல்களும் இவற்றின் விருத்தியுரையாகவும் அமைந்துள்ளன.

மற்றைய ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களும், இராமானுச நூற்றந்தாதியும் மேற்கண்டவைகளில் அவரவர் கண்டு தொகுத்த மாணிக்கக் குவியல்களாகவும் மிளிர்வது நாலாயிர திவ்ய-ப்ரபந்தத்தின் தனிச் சிறப்பு எனினும் அமையும்.

இத்திருப்பாவைக்கு உரை கண்டார் ஐவராவர். நால்வர் புறவுரையும் ஒருவர் அகவுரையும் வரைந்துள்ளார்.

மற்றைய ஆழ்வார்கள் அருளிச்செயல்களையும், வேத சாஸ்த்ர வசனங்களையும் அவ்வுரையாசிரியர்கள் தொகுத்துக் கூறும் திறத்தை நோக்குங்கால் அவரவர் கல்வி, அறிவு, ஆற்றல்களின் மேம்பாடு யாரும் வியக்கத் தக்கதே. தன் நூல் 'சங்கத்தமிழ்மாலை முப்பது' என்ற குறிப்பைப் பிற்காலத்தார் உணர்ந்து, உரை கொள்ளவேண்டும் என்பது ஆண்டாள் அன்பின் பணி. ஆதலின் அவ்வழி சற்று முயலுதலும் முறையேயாகும்.



## தனியன் - 1

*நீளாதுங்க ஸ்தநகிரி தடீஸுப்த முத்போத்ய க்ருஷ்ணம்*
*பாரார்த்யம் ஸ்வம் ச்ருதி சதசிரஸ்ஸித்த மத்யாபயந்தீ,*
*ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய*
*புங்க்தே*
*கோதாதஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்துபூய:*

### பதவுரை

- நீளா - நப்பின்னைப் பிராட்டியுடைய
- துங்க - உயரமான
- ஸ்தநகிரி - முலையாகிய மலையின்
- தடீ - தாழ்வாரத்தில்
- ஸுப்தம் - தூங்குகின்றவனான
- க்ருஷ்ணம் - கண்ணனை
- உத்ப்போத்ய - நன்றாக எழுப்பி
- சத - நூற்றுக்கணக்கான
- ச்ருதிசிரஸ் - வேதாந்தங்களில்
- ஸித்தம் - முடிந்தபொருளாகச் சொல்லியிருக்கிற
- ஸ்வம் - தன்னுடைய
- பாரார்த்யம் - பரத்வத்தை
- அத்யாபயந்தி - சொல்லிக்காட்டுகிறவளும்
- ஸ்வ - தன்னுடைய
- உச்சிஷ்டாயாம் - சூடிக்களைந்ததான
- ஸ்ரஜி - மாலையில்
- நிகளிதம் - நன்றாகக் கட்டுப்பட்டவனாயிருக்கின்ற அந்தக் கண்ணனை
- யா - எவள்
- பலாத்க்ருத்ய - பலவந்தப்படுத்தி
- புங்க்தே - அவனுடைய குணங்கள், செயல்களை அனுபவிக்கிறாளோ (அப்படிப்பட்ட)
- கோதா - கோதை யென்று ப்ரஸித்தமான
- தஸ்யை - அவள்பொருட்டு
- இதம் இதம் நம - இத்தகைய படிகளில் நமஸ்கரிக்கிறேன்
- பூய ஏவாஸ்து பூய - இவ்விதமே மறுபடியும் நமஸ்கரிக்கின்றேன்

## கருத்துரை

'நீளாதுங்கஸ்தனகிரிதடீஸுப்தம்' என்னும் முதல் வாக்யம் ''மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்'' என்னும் 23-வது பாடலின் கருத்தையும், ''கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர்மார்பா'' என்னும் 19-வது பாடலின் கருத்தையும் பின்பற்றுகிறது. ஆச்ரிதர்களுடைய, வளர்ந்து, பருத்து, உயர்ந்து, நிமிர்ந்து நிற்கும் பக்தியே மலை போன்ற முலையாக இங்கே உத்ப்ரேக்ஷிக்கப் பெறுகிறது. பகவான் ஒருவனே தனக்கு சேஷியென்றும், தன்னைச் சேஷனாகவும், நன்கறிந்து பக்தியிலீடுபட்டு வர்த்திக்கும் ஸாதுக்களான ஆச்ரிதர்களைப் பெண்களாகவும், பெண்களின் அங்கங்களிலெல்லாம் உத்தம அங்கமாகிய ஸ்தனமே இந்த ஆச்ரிதர்களின் பக்திப் பெருக்கின் அதிசயம் ஆகும் என்றும் கூறுவது திருவிருத்தம் முதலான நூல்களில் ஆழ்வார்களுடைய மதமாகும்.

23-வது பாசுரத்தின் புதை பொருளில், மாரியென்பது, ஆண்டாள் மாலை சூடிக்களைந்த கூந்தலும், மலையென்பது அவளுடைய ஸ்தனமும், முழைஞ்சு, அந்த மலையின் குகை என்பது அவளுடைய ஹ்ருதயகுஹரமுமாவன. அவள் அந்த ஹ்ருதய குஹரத்தில் ஸ்தாபித்து உபாஸித்து வந்த தெய்வம், அதாவது ஹார்த விக்ரஹம், '' யசோதை இளஞ்சிங்கம் '' என்று அவள் முதற் பாடலில் சொல்லுகிற நாரயணனுடைய ந்ருசிம்ஹகுட்டியாகும். இதே சிங்கம் தான் நப்பின்னை போன்ற ஆச்ரிதர்களின் பக்தியாகிய மலையின் அடிவாரத்தில் தன்னுடைய மலர்ந்த மார்பை வைத்துப் படுத்துறங்குகிறது என்கிறாள். இந்த பாவங்களைச் சேர்த்து முதலாவது வாக்கியத்தை ஸ்ரீ பராசர பட்டர் அமைத்துள்ளார்.

இவனுடைய தூக்கம் ஒரு பாவனை. இதைப் பையத்துயின்ற என்று இரண்டாம் பாசுரத்தில் விளக்குகிறாள். ஆனதால் இந்த எழுப்புதல் பாபமாகாது. மேலும் விசேஷ பக்திக்குப் பரவசனாகி அற்பபக்தி செய்யும் மற்ற சாதுஜனங்களுக்கு விமுகனாய் நிற்பவனை எழுப்பும் இவர்களுடைய பாரதந்திரியம் உபநிஷத்துக்களில் ப்ரஸித்தி. அதனால் அவன் இவர்களுக்கும் ஸுமுகனாகி, இவர்களுடைய பக்தியை வளர்க்க வேண்டும் என்று அவன் கடமையை வற்புறுத்த எழுப்புதலானபடியால், இந்த எழுப்புதல் ஆச்ரித லோகத்துக்கும், சரண்யனுக்குமே உபகாரமாகும். பெரியோர்களிடத்தில் ஆச்ரிதர்கள் பெரியோர் கடமையை விஞ்ஞாபனம் பண்ணும் போது ''க்ஞாபயே நது சிக்ஷயே'' - 'நினைவூட்டுகிறேன்,

கண்டிக்கிறேன் இல்லை' யென்னும் மரியாதை வாக்கியத்தை 'அத்யாபயந்தீ' என்று இந்த ச்லோகத்தில் பேசுகிறார்.

இவ்விதத்திலும் அவனை யெழுப்பத் தனக்கு அவனிடத்தில் ஒரு பாத்யமுண்டாகும்படி பூமிப் பிராட்டியாகிய தன்னுடைய திரு-மேனியில் சூடியதனால் பலமடங்கு மணம் அதிகப் பட்ட மாலைகளை அவன் சூடும்படி செய்து, அதனால் அவனைத் தன்னிடத்தில் ப்ரேமையுள்ளவனாக ஆக்கிக் கொண்டாள் என்றும், அவ்விதம் ப்ரேமபூதனாக இருக்கும் சரண்யனுடைய சகல குண வைபவங்களையும் இவள் நிர்ப்பந்தித்து அனுபவித்தாள் என்றும், இவளுக்கு வந்த துணிச்சலுக்குக் காரணம் காட்டுகிறார். அந்தக் கோதையை இதம் இதம் என்று இரண்டுதரமும், பூய ஏவாஸ்து பூய: என்று இன்னும் இரண்டுதரமுமாக நாலுதரம் சேவித்துக் கைகூப்பி நிற்கிறார் பட்டர். இந்த நாலு தரம் சேவித்தது கோதைக் கென்றாலும் தகும். இந்த ச்லோகத்திலுள்ள நாலு தத்வங்களுக்கும் ஒவ்வொன்றுக்கும் ஒரு ஸேவையாகத் தனித்தனியே சேவித்தார் என்றாலும் பொருந்தும்.



## தனியன் - 2

***அன்ன வயற் புதுவை யாண்டாள் அரங்கற்குப்***
***பன்னு திருப்பாவை பல்பதியம் – இன்னிசையால்***
***பாடிக்கொடுத்தாள் நற் பாமாலை, பூமாலை***
***சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.***

### பதவுரை

- அன்னவயல் - நீர்ப்பெருக்கினால் ஹம்ஸங்கள் விளையாடிக்கொண்டிருக்கின்ற, நன்செய் வயல்களையுடைய
- புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்த,
- ஆண்டாள்,
- அரங்கற்கு,
- பன்னு - அந்த அரங்கரின் குணசேஷ்டிதங்களை யெல்லாம் விரித்துப் பேசும்
- பல் - பல பாட்டுக்களையுடையதும்
- பதியம் - பதிகங்களாய் அமைந்ததுமான

- நற்பாமாலை - உயர்ந்த பொருள்களை வைத்து அமைந்துள்ள பாடல்களாலான வரிசை
- திருப்பாவை - திருப்பாவை யென்னும் நூலை
- இன்னிசையால் - இனிமையான இசைத்தமிழ்ப் பாட்டுக்களால்
- பாடி - செய்து, ஆக்கி
- கொடுத்தாள் - அர்ப்பணம் செய்தாள், சமர்ப்பித்தாள்
- மாலை - பெரியாழ்வார் தொடுத்த மாலைகளில் உள்ள
- பூ - புஷ்பங்கள் (பல மடங்கு அதிக மணமுடையவைகளாவதன் பொருட்டு)
- சூடிக்கொடுத்தாளை - தன் திருமேனியிலேற்றி வாசனையூட்டிக் கொடுத்தவளை
- சொல்லு - ஜபி.

## கருத்துரை

இந்தப்பாடல் அகாரவாச்யனான எம்பெருமானையே தன் பர்த்தாவாக வரித்து, அடைந்த ஆண்டாளைச் சொல்லுவதால் "அ" என்னும் எழுத்தில் தொடங்குகிறது. அடுத்த "ஆ" என்னும் எழுத்து லக்ஷ்மி வசனம் என்று வடமொழியிலக்கணத் துணிபும், வேதப்ரயோகமுமாகும். ஆண்டாளென்னும் பெயரும் இதில் தொடங்குகிறது.

இங்கே "அன்ன வயல்" என்றது சரீரத்தை வளர்க்கும் நெல் முதலான தானியங்கள் வளரும் இடத்தையும், ஆத்மாவை வளர்க்கும் உத்தமமான நினைவுகள் முளைத்தெழுந்து வளரும் மனத்தையும் ஒருங்கே குறிக்கிறது. அன்னம் நீரைப்பிரித்து பாலை மட்டும் பருகும் குணமுடையதாதலின் நினைவிலும், சொல்லிலும், செயலிலும் அஸாரமான (ஸாரமில்லாத) பொருள்களை நீக்கி ஸாரதமமான (உயர்ந்த ஸாரத்தையுடைய) பொருள்களையே கொள்ளவேண்டும் என்னும் பெரியோர்கள் துணிபை விளக்குகிறது.

புதுவை - வேத சாஸ்த்ரங்களில் பகவத்ப்ராப்தி ஹேதுவாக மத்வாதி 32 வித்தைகள் சொல்லப்பட்டுள்ளன. இவை பரதக் கண்டம் முழுதிலும் ப்ரஸித்தியாயும், பல பெரியோர்களால் அனுஷ்டேயமுமாயிருக்க, தமிழ்நாட்டில் கன்னியர்கள் நல்ல மழை பெய்ய வேண்டுமென்றும், தத்தமக்குத் தீர்க்காயுஸோடும், தங்களை யெந்நாளும் அன்போடு பரிபாலிப்பவருமாகிய பர்த்தாக்கள் வாய்க்க வேண்டுமென்றும், பல்லாயிரமாண்டுகளாக அனுஷ்டித்து வந்த மார்கழி நீராட்டமாகிய நோன்பை ஒவ்வொருதரம் நோற்குங்காலும் பகவத் ப்ரீதிகரமும், பகவத்முக உல்லாஸமும் உடையதாய், மோக்ஷ ப்ராப்தி பர்யந்தமான ச்ரேயஸ்ஸைக்

கொடுக்கும் 33-வது வித்யையாகச் சொல்லும் இந்த திருப்பாவை-யும் ஒரு மோக்ஷ வித்யை. ஆனதால் இது ஆண்டாள் அமைத்த ஒரு 'புது வித்யை' என்பதைக் குறிக்கிறது. "அஸ்யேசானா ஜகதோ விஷ்ணு பத்னீ" என்று வேதம் சொல்லுகிறபடி தன் குழந்தை-களாகிய ஆச்ரிதர்களுக்கு இப்படியொரு 33-வது வித்யையை ஆக்கித்தந்து அவர்களை நல்வழிப்படுத்தப் பூரணமான அதிகாரி இவள் என்பதையும், மனதில் கொள்ளவேண்டும்.

இங்கே அன்னவயல் என்பது இவளுடைய கிருபைக்கு அடைமொழியாகும். க்ருத யுகமுதலான முந்தின மூன்று யுகங்களில் வேத வித்யைகளில் அந்வயிக்கப் பூரணமான ஆயுளும், அரோக திடகாத்ரமும், யோகாதிகளால் அபிவிருத்தி செய்யப்பட்ட கர்மேந்-திரிய, ஞானேந்திரியங்களில் உயர்ந்த சக்தியும் செயல்களும், பூர்ணமான செல்வத்தினால் எல்லா உபகரணங்களும் உடைய-வர்களாக வேத மத ஆச்ரிதர்களான பெரியோர்கள் விளங்கி-னார்கள். கலியுகத்திலோ வென்றால் அற்ப ஆயுளும், பிணி, பசி, மூப்பு துன்பம் முதலான சரீர அவஸ்தைகளும் உடையவர்களாகவும், தூக்கம், சோம்பல் முதலான அவகுணங்களால் பீடிக்கபட்டவர்க-ளாகவும், தரித்திரர்களாயும் இருப்பதால், சொல்பகால அனுஷ்டானத்தில், யாதொரு பொருட் செலவும் இல்லாததாய், பகவத் ப்ரீதிகரமாயிருந்து, இந்த உலகத்தில் நல்வாழ்வும் பின்னால் மோக்ஷ பர்யந்தமான பயனையும் உண்டாக்கும்படியான ஒரு வித்யை யாகிய இதனை, பாலை, பரிபாடல் முதலான சங்க நூல்களிலுள்ள மற்றப் பொருள்களை விட்டுப் பிரித்து எடுத்து இந்த 33-வது வித்யையை, இவள் ஆக்கித்தந்தாளென்பது பொருள்.

இது புதிது. பல வித்யைகள் அடங்கிய சங்கத்தமிழிலிருந்து எடுக்கப்பட்டது. (இதை 30-வது பாட்டில் சங்கத்தமிழ்மாலையென்று வருவதையொட்டியுணர்க) இவைகளை நன்குணர பரிபாடல், நற்றிணை முதலிய சங்க நூல்களிற் காண்க. இது பகவதர்பண-மானால்தான் ஒரு 'வேதவித்யை' ஆகும். ஆதலால் இதை அரங்கற்குக் கொடுத்தாள். 'இன்னிசையால்' என்றதனால் இயற்-றமிழால் ஆக்கப்பட்டதுபோல் காணப்படும் இந்த நூல், 'ஜபிக்கத்-தக்கதாயும், எழுத்துக்களின் சக்தியால் உத்தமமான சித்திகளைக் கொடுக்கும் மந்திரங்களாலும் ஆகியிருக்கிறது' என்பதை விளக்கும். இதுவே இசைத்தமிழ்.

இங்கே 'பல்' என்ற சொல்லுக்கு வடமொழியில் பகுவசனம் ஆரம்பிக்கும் மூன்று என்று பொருள். மூன்று பதிகம், முப்பது பாட்டு என்று பொருள். இங்கே "பூ" என்றது அதன் வட மொழிப் பெயராகிய

ஸுமனஸ், (நற்சித்தம்) என்னும் பொருளிலும் கொள்ளக் கிடக்கிறது.

இவள் 'சூடிக்கொடுத்த பூமாலை'யில் பூமிக்குரிய மணங்கள் வீசுவன. அவை க்ராணேந்திரியத்துக்கு இன்பம் கொடுப்பன. இவள் 'பாடிக்கொடுத்த பாமாலை'யில் ஸகல வேத சாஸ்த்ரங்களின் முடிவுகளான உண்மைப் பொருள்களாய மணங்கள் வீசி, ஞானா-னுஷ்டான அபிவிருத்திக்கும், மோக்ஷப்ராப்தி பர்யந்தமான ஆத்ம ஸுகத்துக்கும் ஹேதுவாவன என்றபடி.

அவள் தாயினுடைய ஸ்தானமானதால், ஆத்மாக்களெல்லாம் குழந்தைகளாக, எதற்கும் தாயாரையே சொல்லுமாதலின் 'சூடிக்-கொடுத்தாளைச் சொல்லு' என்று முடித்தார். இது இரண்டாம் வேற்றுமைப் ப்ரயோகமாக இருந்தபோதிலும் 4, 7 வேற்றுமைப் பொருள்களும் கொள்ளத்தக்கது. ஏனெனில், "பொருள் சேர் மருங்கின் வேற்றுமை சாரும்", பொருள் போகும் வழியில் வேற்று-மையை மாற்றிக்கொள்ளலாமாதலின்.



## தனியன் - 3

***சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே! தொல்பாவை,***
***பாடி யருளவல்ல பல்வளையாய், – நாடிநீ***
***'வேங்கடவற் கென்னை விதி' என்ற இம்மாற்றம்***
***நாங்கடவா வண்ணமே நல்கு.***

### பதவுரை

- சூடிக்கொடுத்த - மலர்மாலையைத் தான்சூடிப் பின்னர் பகவான் மனமுவந்து அணிய ஸமர்ப்பித்த
- சுடர்க்கொடியே - தேஜோராசியாகிய கோதையே
- தொல்பாவை - பழமையான பாவைப்பாட்டை
- பாடியருள - பிற்காலத்தவர்க்கு விளங்கும்படி ஆக்கியருள் புரிய
- வல்ல - ஸங்கல்பித்த
- பல்வளையாய் - நித்யமான ஸௌமாங்கல்யஸ்ரீயோடு கூடியவளே
- நாடி - ஆராய்ந்து
- நீ - நீ

- என்னை வேங்கடவற்கு விதி - என்னை ஸ்ரீனிவாசனுக்குப் பத்தினியாக்கு என்றுரைத்த
- இம்மாற்றம் - இந்தச் சொல்லை
- நாம் - உன்னுடைய அடியவர்களாகிய நாங்கள்
- கடவாவண்ணம் - மீறாதவிதமாக
- நல்கு - செய்.

## கருத்துரை

"அநந்யா ராகவேணாஹம், பாஸ்கரேண ப்ரபாயதா" என்று ராவணனைப் பார்த்து சீதை சொல்லுகிறாள். வெளிச்சமில்லா விட்டால் சூரியன் தோசைக்கல்லு. ஒருவர் கண்ணிலும் புலப்படான். பிராட்டியில்லாவிட்டால் பெருமாளும் அதுபோல்தான். பேயாழ்வார், "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று லக்ஷ்மியைக் கண்டு பெருமாளை நிர்தேசிக்கிறார். இவைகளைத் திருவுள்ளத்திற் கொண்டு 'சுடர்க்கொடியே' யென்று பாடினார். கோதையின் வெளிச்சத்தால் ரங்கமன்னாரை சேவித்தபடி.

பாவையைத் 'தொல்பாவை'யென்றது பெண்கள் அனுஷ்டானத்தைச் சொல்லிவரும் பிங்கல நிகண்டு, கன்னிப் பெண்களுக்கு, "பனி நீர் தோய்தலும் பாவையாடலும்" என்று விதிக்கிறது. மேலும் இந்த 'பனிநீர் தோயும் மார்கழி நோன்பு' பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே தமிழ்நாட்டுக் கன்னியர்கள் அனுஷ்டித்து வந்த நோன்பென்பது பரிபாடலால் தெரிகிறது. இந்த நோன்பில் பாடும் பல பாவைப் பாட்டுக்கள் நெடுகிலும் இருந்திருக்கவேண்டும் என்று தெரிகிறது. ஜைனர்களும் ஒரு தமிழ்த் திருப்பாவைப் பாட்டுக்களைப் பாடிக்கொண்டு இந்த நோன்பை நோற்றார்கள் என்றும் தெரிகிறது. ஆனதால் இது மிகப்பழைமையான அனுஷ்டானம் என்பதைக்காட்ட "தொல்" என்றார்.

நாச்சியார் திருமொழியில், முதல் திருமொழி மூன்றாம் பாட்டில், தன்னை வேங்கடவனுக்கு உய்க்கும்படி ஆண்டாள் பாடுகிறாள். அவளுடைய திருவடியைப் பிடிக்கும் நாமெல்லாம் அவளுடைய அனுஷ்டானத்தையே பின்பற்றி அந்த வேங்கடவனைப் பக்தி பண்ணக்கடவோம். அந்த பக்தி ஸித்திக்க அவளுடைய திருவடிகளைப் பிரார்த்திக்கிறார். (நல்குதல் - மகிழ்ந்து கொடுத்தல்.)

## குறிப்பு

முப்பது பாட்டுக்களோடு கூடின இந்தப் பாவை நூலுக்கு முதல் ஐந்து பாட்டுக்கள் பாயிரமாக அமைந்துள்ளன. முதல் மூன்று

பாட்டுக்களால் பர, வ்யூக, விபவங்களின் சொரூபங்களைக் கடவுள் வாழ்த்தாகப் பாடி, இந்த நோன்பு, அதன் அங்கங்கள், அதன் அனுஷ்டானம், பயன் இவைகளையும் சொல்லி, நாலாவது பாடலில் வான் சிறப்பையும், அர்ச்சாவதாரத்தின் பெருமையையும் எடுத்து-ரைத்து, ஐந்தாவது பாடலில் இந்த நான்கு பாட்டுக்களின் பொருள்களையும் ஸங்க்ரஹித்து, இந்த அனுஷ்டானத்துடையவும், அதில் செய்யும் பல காரியங்களுடையவும் பயனை எடுத்துக்கூறிப் பாயிரம் முடிவடைகிறது.



## பாசுரம் - 1

*மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்,*
*நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்,*
*சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்,*
*கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்,*
*ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்,*
*கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்,*
*நாரா யணனே நமக்கே பறைதருவான்,*
*பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- சீர்மல்கும் - மேன்மை பெருகும்
- ஆய்பாடி - ஆய்பாடியில்
- செல்வச்சிறுமீர்காள் - சகல செல்வங்களும் நிறைந்த இளம்பெண்களே
- நேரிழையீர் - அந்தந்த அங்கத்துக்குத் தகுதியான ஆபரணங்களை அணிந்தவர்களே
- மார்கழித் திங்கள் - மார்கழிமாதம்
- மதிநிறைந்த - சந்திரன் பூர்ணமாயிருக்கின்ற
- ஆல் - கார்த்திகை நக்ஷத்திரம் கூடின
- நன்னாள் - இன்று சுபதினம்
- படிந்து - நன்றாக மூழ்கி
- நீராட - மார்கழி நீராட்டத்தைச் செய்ய
- போதுவீர் - வர இஷ்டமுடையவர்கள்
- போதுமினோ - வாருங்கள்
- கூர்வேல் - கூர்மையான ஆயுதங்களால்
- கொடும் - வெளிப் பார்வைக்குக் கோணலாகக் காணப்படும்
- தொழிலன் - செயலையுடையவன்
- நந்தகோபன் குமரன் - நம்மாயர்பாடிக்குத் தலைவரான நந்தகோபனுடைய மகன்
- ஏர் - அழகு
- ஆர்ந்த - நிரம்பிய
- கண்ணி - கண்களையுடையவளான யசோதையின்
- இளஞ்சிங்கம் - குழந்தை நரஸிம்ஹன்
- கார்மேனி - மேகம் போன்ற சரீரத்தையுடையவன்
- செங்கண் - சிவந்த கண்ணையுடையவன்
- கதிர் - சூரியனைப் போல் ஒளியும்

> மதியம் - சந்திரனைப் போல் குளுமையுமுடைய
> முகத்தான் - முகத்தையுடையவன்
> பாரோர் புகழ - அவனை ஆச்ரயித்தவர்கள் எப்போதும் உஜ்ஜீவிப்பார்கள் என்று பகவானை உலகத்தார் எல்லாரும் துதிக்குமாறு
> நமக்கே - இந்த நீராட்டத்தில் அந்வயிக்கும் நமக்கு
> பறை - தன்னுடைய ரக்ஷணத்தை
> தருவான் - கொடுப்பான்
> ஏல் - ஏற்றுக்கொள்
> ஓர் - உணர்
> எம்பாவாய் - என்னுடைய ஹார்த விக்ரஹமே.

## கருத்துரை

பாவை நோன்பென்பது அவரவர் வழிபடும் கடவுளுருவத்தைத் தத்தம் மனத்தால் பாவித்துக்கொண்டு அதன் ஆராதனமாக நோற்கும் நோன்பாகும். அந்த ஹார்த விக்ரஹம் ந்ருஸிம்ஹனோ, ராமனோ, க்ருஷ்ணனோ, ஆதியம் பரம்பொருளுடைய எந்த உருவமாகவும் இருக்கலாம். ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் இந்த ஹார்த விக்ரஹத்தை "பாவ:" என்று ஏழாவது நாமத்தால் சொல்லு-கிறோம். இந்த நோன்பில் செய்யும் மனமொழி செயல்களால் ஆகும் யாவற்றையும் இந்த ஹார்த விக்ரஹத்துக்கே நிவேதனம் செய்து அர்ப்பணம் செய்யவேண்டும். அவ்விதம் செய்தால் இதை அநுஷ்டிப்பவர்களுக்கு எல்லா ஸ்ரீயையும் அந்த ஹார்த விக்ரஹம் கொடுக்கும்.

இந்தப் பாசுரத்தின் தொடக்கத்தில் காலத்தையும் இடத்தையும் நிர்ணயிக்கிறாள். ஒவ்வொரு வருஷமும் அனுஷ்டிக்க வேண்டிய நோன்பாதலால் மார்கழித் திங்கள் என்று மாதத்தை மட்டில் குறிப்பிட்டாள்.

சந்திரன் பூர்ணமாயிருக்கும் காலத்தில் பகலும் இரவும் ஒருபடியாக வெளிச்சம் உடையதாக வைகுண்டம் போல் காண்கிறது. பூமியில் இந்த நோன்பை நோற்பது வைகுண்டத்தில் நோற்கும் நினைவோடு நோற்க வேண்டும். ஸ்ரீமத் பகவத்கீதை (10-35) யில் "மாஸானாம் மார்கஸீர்ஷோஹம்" என்று சரண்யன் பணிக்கிறான். ஆதலால் மார்கழி மாதமே சரண்யனுடைய ஸ்வரூப-மாகும். அதுகாலமாய் நிற்க, இடத்தில் பகலும் இரவும் வெளிச்சமாய் இருப்பதால் ஆய்ப்பாடி வைகுண்டமாகிறது. மதிநிறைந்ததன் அளவைக் காட்ட "ஆல்" என்று குறிப்பிடுகிறாள். ஆல் என்பது கார்த்திகை நக்ஷத்திரம். ஆதலால் அன்று சுக்லபக்ஷ த்ரயோதசி

என்பது வ்யக்தமாகிறது. அன்று இரவு சந்திரனுக்குப் பதிமூன்று கலைகள் நிறைந்து இரவு 26 நாழிகை வெளிச்சமுடையதாகும். மீத நாலு நாழிகை மறுநாளின் உஷ: காலத்தில் சேர்ந்ததாதலால் அன்று இரவு முழுவதும் வெளிச்சம் என்று பொருந்துகிறது. ஆனதால் இந்த த்ரயோதசி, சதுர்த்தசி, பௌர்ணமி இந்த மூன்று தினங்களில் இந்த நோன்பை நோற்பதற்காக மூன்று பதிகங்களை ஆண்டாள் பாடிக் கொடுத்தாள். ஆல் என்னும் கார்த்திகை நக்ஷத்திரத்தால் திதி த்ரயோதசி என்று கிடைக்கிறது.

இனி ஸ்ரீவில்லிபுத்தூரைத் திருவாய்ப்பாடியாக நிர்த்-தேசிக்கிறாள். பகவான் அங்கே அவதரித்துவிட்டபடியால் அது வைகுண்டமாகி விட்டது. நித்ய சூரிகள் "ஸாம காயந் ஆஸ்தே" என்று ஸாமங்களால் அவனைப்பாடிக் கொண்டு அவன் திருவுள்ளம் உகந்த சகல கைங்கர்யங்களையும் பண்ணிக் கொண்டு நிற்பதுபோல், இந்த மார்கழி நோன்பை பகவத் ப்ரீதிக்காக அனுஷ்டிக்க வேண்டியது கன்னியர்களின் கடமை. அவ்விதம் செய்தால் ஆய்ப்பாடியின் சீர் வைகுந்தத்தின் சீரைக்காட்டிலும் மல்கும். அங்கே சுத்த சித்தர்களான பரிசுத்தாத்மாக்கள் தங்கள் ஸ்வரூபமான கைங்கர்யத்தைச் செய்கிறார்கள். பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்த, இடக்கை வலக்கை அறியாத பெண்களாகிய நாம், இந்த நோன்பை நோற்று ஆயனுக்கு அர்ப்பித்தோமானால், அதைக்காட்டிலும் பன்மடங்கு அவனுக்கு உகப்பாகும் என்கிறாள். ஏற்கனவே பகவான் அவதரித்தது முதல் ஆய்ப்பாடி பசு செல்வம் இவற்றின் ஸம்ருத்தி நிறைந்துள்ளது. அதைச் செல்வச் சிறுமீர்காள் என்று குறிப்பிட்டாள். மேலும் வைதிகஸ்ரீயும் நாம் ஆத்மோத்கர்ஷத்தை யடையும் ஸ்ரீயும் இவ் வாராதனத்தால் மல்கும் என்று குறிப்பிடுகிறாள். சிறுமீர்காள் என்று விளித்ததின் பொருள் 'சிற்றஞ்சிறுகாலே' யென்ற 29-வது பாசுரத்தின் வ்யாக்யானத்தில் கண்டு கொள்க.

இனி தாம் உபாஸிக்கும் தெய்வத்தை நாராயணன் என்று பெயர் கூறி அவனுடைய லக்ஷணங்களை அக்குழந்தைகளுக்கு எடுத்துக் கூறுகிறாள்.

கூர்வேல் கொடுந்தொழிலன் - இங்கே 'வேல்' என்னும் சொல் 'வெல்' என்னும் பகுதியடியாக, பகை வெல்வதற்குச் சாதனமாக உள்ள 'ஸர்வப்ரஹரணாயுத:' என்னும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் கடைசி நாமத்தின் பொருளைக் குறிக்கும். கொடும் என்னும் பதம் 'குட் கௌடில்யே' என்னும் வடமொழி தாதுவிலிருந்து வருகிறது. வளைந்திருக்கும் தன்மையைக் குறிக்கும் தாது அது. குடை, குடம், கோடு எல்லாம் அதிலிருந்து வருவன. நாராயண-னுடைய ஸ்வரூபம் காப்பாற்றுதல். உடலை யழிக்காமல் உயிரைக் காப்பாற்ற முடியாது என்கிற நிர்பந்தம் வந்தபோது அந்த ஆத்மா இருக்கும் உடலை இவன் வெட்டிப் பிளந்து, அழித்து ஆத்மாவைக்

காப்பாற்றுகிறான். இந்த நாராயணனுடைய கொல்லுதல் எல்லாம் காப்பாற்றுதலே யென்பது ஆழ்வாரின் நிர்வாஹம். முதல் திருவந்தாதி 5-வது பாடலில் பொய்கையாழ்வார் "கருமம், அழிப்பு, அளிப்பு கையது வேல் நேமி" என்று சிவனுடையவும், நாராயணனு-டையவும், கர்மாக்களையும், அவைகளுக்கு உதவும் ஆயுதங்க-ளையும் பேசுகிறார். சிவன் அழிப்பதற்காக வேலைக் கொண்டி-ருக்கிறான். நாராயணன் காப்பதற்காகச் சக்கரத்தைக் கொண்டிருக்கிறான். கண்ணனாகிய அவதாரத்தில் பூதநாதி அசுர, ராக்ஷஸர்களைக் கொன்றது அவர்களின் ஆத்மாவைக் காப்பாற்று-வதற்காகவே. நேரான ரக்ஷண கார்யத்தைச் செய்பவன், கொல்வது போல் தோன்றும் வளைந்த கார்யத்தைச் செய்வதால் கூர்வேல் கொடுந்தொழிலன் என்றாள். நேரே நடக்கும் செங்கோல் வளைந்து நடக்குங்கால் கொடுங்கோல் எனப்படுவதையும் நோக்குக.

இனி நந்தகோபன் குமரன் என்றது கண்ணன் ஒளித்து வளர்ந்ததைக்காட்ட. ஆயர்குலத்தை பகவததீதனமாக்கத் திரு-வாய்ப்பாடியில் ஒளித்து வளர்ந்த உத்தமன் என்று அவன் ஸௌலப்யத்தை மெச்சி, அறியாத சிறுமியர்களான நம்மையும் அவன் காப்பாற்றுவான் என்று வற்புறுத்துகிறாள். இவன் அழகைப் பார்த்துப் பார்த்து யசோதையின் கண்ணும் அழகு நிறைந்தது என்கிறாள். இவளுக்கு உபாஸனா தெய்வம் ந்ருஸிம்ஹன். ஆகவே கண்ணனை இளஞ்சிங்கம் என்கிறாள்.

கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான் என்பதற்கு "வெள்ளியான் கரியான் மணிநிறவண்ணன்" என்று திருமங்கைமன்னன் வ்யாக்யானம் செய்து கொடுக்கிறார். மும்மூர்த்திகளும் ஒரே மூர்த்தியாக விளங்குபவன் என்று பொருள்.

(நமக்கே - இந்த ஆராதநத்தில் இழிபவர்க்கே. ஏ - தேற்றம், பிரிநிலையுமாம். நிச்சயமாக பறை தருவான், என்றபடி.) இந்த ஆராதனத்தைச் செய்த நமக்கு அவன் நிச்சயமாக ரக்ஷணத்தைத் தருவதால் நம்மைப் பார்த்து மற்றவர்களும் நாராயணனைப் புகழ நாம் வழிகாட்டிகளாவோம் என்கிறாள்.

இனி, நீராடுதல் என்பது பகவான் வகுத்த நீர்மையாகிற பாகவத அனுஷ்டேய மார்கத்தில் வர்த்தித்தலாகும். "ச்ருதி ஸ்ம்ருதிர் மமைவாக்ஞா யஸ்தான் உல்லங்க்ய வர்த்ததே | ஆக்ஞாச்சேதீ மமத்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ: ||" இது விஷ்ணு தர்ம ச்லோகம். எத்தகைய சுருதி ஸ்மிருதி விஹிதமான கர்மாக்களையும் அனுஷ்டித்தாலும், பகவந்நியமிதமும் பாகவதானுஷ்டேயமுமான வழி தவறி அனுஷ்டிக்கலாகாது. அவ்விதம் வழி தவறாது அனுஷ்டித்தலே நீர்மையில் ஆடுதல், நீராடுதல் ஆகும். இதை அடிப்படையாகக் கொண்டு செல்வச்சிறுமீர்காள் என்பதற்கு பக்தியாகிற செல்வம் இளவயதிலேயே உங்களுக்கு அமைந்திருக்கிறது என்றும்,

நீராடப்போதுவீர் என்பதற்கு பகவத் குணங்களாகிய பொருள்களில் விதி தவறாத நீர்மையோடு சரிக்க (நடக்க) வாருங்கள் என்று பொருள்.

நேரிழையீர் - (நேர் - நேர்மை). வேத சாஸ்த்ரங்கள் நேர்மை யுடையனவாக ஒப்புக்கொண்ட வழிகளில் (இழைதல்) நடத்தல். நீங்கள் ஏற்கனவே நடந்து கொண்டிருக்கிறவர்கள். தேவதாந்தர உபாஸனத்தால் கிடைக்கும் அற்ப பலன்களை மதியாமல் பகவத் குணங்களில் இழிந்தவர்களாய் நாம் விரதானுஷ்டானம் செய்வோம். அது பெரும் பயனைத்தரும் என்பதை உறுதிப்படுத்த முதல் தேவரும் மூவரும் இவன் ஒருவன் தான் என்று குறிப்பிடுகிறாள். படிந்து என்பது பரமைகாந்தித்வத்தைக் குறிக்கிறது. மறந்தும் புறம் தொழா மாந்தராய் சுத்தாந்த ஸித்தாந்திகளாய் நாராயணனுடைய குண ரூப சேஷ்டிதங்களில் மட்டுமே ஈடுபடுங்கள் என்று ஆக்ஞையிடுகிறாள்.

'ஏல் ஓர் எம்பாவாய்' என்று முப்பது பாசுரங்களின் முடிவிலும் கூறித் தங்கள் நோன்பினை 'உணர்ந்து ஏற்றுக் கொள்வாயாக' என்று ஹார்த விக்ரஹத்துக்கு அர்ப்பணிப்பதைக் காட்டுகிறாள்.

## *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

இளஞ்சிங்கம் என்பது குழந்தை நரஸிம்ஹன் என்கிறார். ஸ்ரீ ஆண்டாளின் ஹார்த விக்ரஹம் ! (உளம் கவர்ந்த, இதயத்தில் வீற்றிருக்கும் திவ்ய மங்கள விக்ரஹம்).

'நன்னாளால்' - ஆல் என்றால் கார்த்திகை நக்ஷத்திரத்திற்கு குறிப்பு. பகலும் இரவும் ஸமமாக வெளிச்சமாயிருக்கும் சுக்லபக்ஷ த்ரயோதசி நாள். திரயோதசி, சதுர்தசி, பௌர்ணமி - இம்மூன்று நாள் நோன்பு. அதற்காக மூன்று பதிகங்கள் (முப்பது பாசுரங்கள்).

நீராடுதல் - வெறும் தலை குளித்தல் மட்டுமன்று. பின், பகவான் வகுத்து வைத்த, நீர்மையாகிற பாகவத அனுஷ்டேய மார்கத்தில் நிலை நிற்பது.

படிந்து - அமிழ்ந்து என்பது சாதாரணக் கருத்து. புறந்தொழாமாந்தராய், 'சுத்தாந்த ஸித்தாந்தி'களாய் (இது ஸ்வாமி தேசிகன் பதம்). 'அந்தப்புரத்து மாதர்போல் நிலைநின்ற கற்புடையவர், மற்ற ஆடவரை மனத்தாலும் நினையாதவர்' என்பது. பார்க்க - ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம், புருஷார்த்த காஷ்டாதிகாரம்) அதே சொற்றொடரை இங்கு தந்து பக்தி நெறியைத் தெரிவிக்கிறார். 'பகவத் குண, ரூப, சேஷ்டிதங்களில் மட்டுமே ஈடுபடும் தன்மை-யினர்', அப்படிப் படிய வேண்டும் என்கிறார். இதில் 'பரம்' என்ற நிலை.



## பாசுரம் - 2

*வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்குச்,*
*செய்யும் கிரிசைகள் கேளீரோ, பாற்கடலுள்*
*பையத் துயின்ற பரம னடிபாடி,*
*நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி,*
*மையிட் டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம்,*
*செய்யா தனசெய்யோம் தீக்குறளை சென்றோதோம்,*
*ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி,*
*உய்யுமா றெண்ணி யுகந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- வையத்து - பூமியில், மனித சரீரத்தில்
- வாழ்வீர்காள் - இகத்திலும் பரத்திலும் ச்ரேயஸ்ஸையடைய வாழ்கிறவர்களே
- நாமும் - இந்த கோஷ்டியினராகிய நாம்
- உய்யும் - உஜ்ஜீவிக்கும்
- ஆறு - மார்கத்தை
- எண்ணி - மனத்தில்கொண்டு
- நம்பாவைக்கு - நம்மனத்தில் ஹார்த விக்ரஹமாக பாவித்துக் கொண்டிருக்கும் மூர்த்தி விசேஷத்திற்கு
- உகந்து - ஸந்தோஷத்தோடும் உற்சாகத்தோடும் கூடியவர்களாய்
- செய்யும் - ஆசரிக்கும்
- கிரிசைகள் - செயல்கள், அனுஷ்டானங்களை
- கேளீர் - கேட்பீர்களாக
- நாட்காலே - பொழுது புலரும் வேளையில்
- நீராடி - தண்ணீரில் குளித்து முழுகி
- பாற்கடலுள் - வியூக மூர்த்தியாக திருப்பாற்கடலில்
- பையத்துயின்ற - விழித்துக்கொண்டே தூங்குவதுபோல் பாவனை செய்கிற
- பரமன் - எல்லாவற்றுக்கும் மேம்பட்டவனான
- அடி - அடைந்தவர்களை உஜ்ஜீவிப்பிக்கும் நாராயணனுடைய திருவடிகளை
- பாடி - பாடி
- ஐயமும் - விதிவழி கொடுக்க வேண்டியவைகளையும்
- பிச்சையும் - இச்சைவழி கொடுக்க விரும்புகிறவைகளையும்
- ஆம்தனையும் - தனக்குள்ள பொருளளவில், சக்தியுள்ளமட்டில்
- கைகாட்டி - செயலில் அனுஷ்டித்து

- நெய் - உடம்புக்கு மஸ்தைக் கொடுக்கும் நெய்யையும்
- பால் - தாபத்தைத் தணிக்கும் பாலையும்
- உண்ணோம் - உட்கொள்ளாதவர்களாகவும்
- மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம் - உடலுக்கு அழகையும் மணத்தையும் தரக்கூடிய மையை இட்டுக்கொள்ளாதவர்களாயும், மலர் முடித்துக்கொள்ளாதவர்களாயும்
- செய்யாதன செய்யோம் - வேத சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்ட (விலக்கப்பட்ட) கர்மாக்களைச் செய்யாதவர்களாகவும்
- தீ - குற்றமான
- குறளை - பொய்யாகவும், கட்டுமானமுமான வார்த்தைகளை
- சென்று - ஒருவரைப்பற்றி மற்றொருவரிடம் போய்
- ஓதோம் - உண்மைபோல் சொல்லவும் மாட்டோம்
- ஏல் - ஏற்றுக்கொள்
- ஓர் - உணர்
- எம்பாவாய் - நான் பாவித்துக்கொண்டிருக்கிற ஹார்த விக்ரஹமே.

## கருத்துரை

வையமென்னும் சொல்லுக்கு 'மிக உயர்ந்த வண்டி' என்னும் சொற்பொருள். ஆத்மாக்கள் யாத்திரை செய்யும் பல்லாயிரக் கணக்கான சரீரங்களாகிய வண்டிகளுள் ஆறாவது அறிவோடு கூடிய மனித சரீரம் மிக உயர்ந்த வண்டியாதலால் அதை வையம் என்று குறித்து அதில் வாழ்கின்றவர்களாகிய ஆத்மாக்களைக் கூவி யழைக்கிறாள். அதனால் சரீரத்தையிட்டு உண்டான பேத புத்தியே இல்லாமல் அனைத்து ஆத்மாக்களும் உஜ்ஜீவிக்கும் வித்தையை இந்த நூல் போதிக்கின்றது என்பது பொருள். 'வாழ்வீர்காள்' என்ற சொல் "வாழாட்பட்டு நின்றீர் உள்ளீரேல், வந்து மண்ணும் மணமும் கொண்மின், கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள் குழுவினில் புகுதலொட்டோம்" என்ற திருப்பல்லாண்டு வாக்கியத்தை அனுவர்த்திக்கிறது. 'வாழ்' என்பதால் ஆத்மாவின் உஜ்ஜீவனமும், கூழ் என்பதனால் செல்வப்பொருளின் சம்பந்தமும் குறிக்கப் படுகிறது. 'கூழ்' என்னும் சொல்லுக்கு 'உணவுக்கு ஏது வாகிய பொருள்' என்பது பரிமேலழகர் உரை. கூழாட்பட்டு நின்றீர் - செல்வப் பொருளுக்குத் தொண்டுபட்டு ஆயுட்காலத்தை நடத்துகின்றவர்கள் என்பது பொருள். முந்தின பாட்டில் இவளுடைய பரம தயையைக் காட்டப் 'போதுவீர் போதுமின்' என்று "வருபவர்கள் எல்லோரும் வாருங்கள்" என்று கூப்பிட்டாள்.

வையம் உயர்ந்தவண்டி என்பது பரிபாடலில் மூன்று இடங்களிலும், பெருங்காதையில் 12 இடங்களிலும் ப்ரயோகம். பரிபாடலில் "பொன்னும் துகிரும் முத்துமல்லது, மரன் ஒன்றறியா மாணமை வையம்" என்று பேசுகிறார். அந்த உயர்ந்த வண்டி தங்கத்தாலே அமைந்து பவழத் தூண்களும் ஆரக் கால்களும் நுகத்தடி முதலியவற்றை யுடையதாய் முத்துக்களால் அலங்கரிக்கப் பெற்றது என்று பேசுகிறார். மற்றவையும் படித்தறிக.

பெருங்காதையில் "பூணியின்றிப் பொறியின் இயங்கும் மாணமை வையம்" என்கிறார். இங்கே பூணி என்பது பூட்டப்படும் மிருகமாகிய மாடு, குதிரை, யானை, ஒட்டகம் முதலியவற்றைக் கூறும். அந்த வண்டியில் இது ஒன்றும் பூட்டவில்லை யென்கிறார். பொறியின் - இயந்திர சக்தியால் இயங்கும், ஓடும். மாண்அமை - மாண்பு, பெருமை அமைந்த உயர்ந்த வண்டி. கிரிசை என்பது சைவ சித்தாந்தத்தில் சரியை, கிரியை, ஞானம், யோகம் என்ற நான்கில் குறிக்கப்பட்டுள்ள இரண்டாவதான கிரியையென்பது. காரணம் கேட்காமல் செய்யும் அனுஷ்டானத்துக்கு சரியையென்றும், பயனை மனத்திற்கொண்டு அது ஸித்திக்கும் பொருட்டுச் செய்யும் காரியத்தைக் கிரியையென்றும் கூறுவர். இவைகளின் விபரங்களை மெய்கண்ட தேவர் எழுதியுள்ள சிவஞான போதத்தின் பாடியத்திலும், அருணந்தி சிவாசாரியார் எழுதியுள்ள சிவஞான சித்தியாரிலும் பரக்கக் கண்டுகொள்க. இங்கே 'பையத்துயின்ற' என்பது விழிதுயில். இதை காளிதாசன் "ஸ்வபதோ ஜாகரூகஸ்ய", 'உன்னைப் போல் விழித்துக்கொண்டு தூங்குகிறவன் கிடையாது' என்றான்.

பரமன் - "நைவ கச்சித் வ்யபாச்ரய:", 'மனிதர்களும் தேவர்களும் ஆச்ரயிக்க இவனைக் காட்டிலும் உயர்ந்த தெய்வம் இல்லை' என்று ஸ்ரீபாகவதம் (6-வது ஸ்கந்தம், 17-வது அத்யாயம்) சித்ரகேது உபாக்யானத்தில் பரமேச்வரனால் பார்வதிக்கு உபதேசிக்கப் பெற்றவன் என்று பொருள். ஆச்ரிதர்கள் இழிய வேண்டிய இடம் பகவானுடைய திருவடி என்பதை த்வயத்தின் அர்த்தத்திலும் கண்டுகொள்க. கீதை-18-66 சரம ச்லோகத்திலும் கண்டுகொள்க.

பாடுதல் - அத்திருவடியினிடத்தில் இழிந்து, அதுவே ஆச்ரயமாக இழிந்து, அதன் ரக்ஷண சாமர்த்யத்தையும், சக்தியையும் வியத்தல். நாலு விதிகளையும், ஆறு நிஷேதங்களையும் சொல்லி பாடலைத் தலைக்கட்டுகிறாள். நிஷேதங்களினின்று விலக வேண்டியது, விரதம் பயன் தருவதற்கு அவசியமாதலால் அந்த ஆறையும் எதிர்மறையாலே பேசுகிறாள். நாலு விதிகளையும் உடன்பாட்டில் பேசுகிறாள்.

ஐயம் என்பது நித்யானுஷ்டேயமான வைச்வதேவாதி கர்மாக்களிலும், நைமித்திகமான தின சாந்தி, நக்ஷத்ர சாந்தி, கிரஹ, தசாபுக்தி சாந்தி, ச்ராத்தாதி கர்மாக்களிலும், இவற்றுக்குக் கொடுக்கும் தானியங்கள், வஸ்த்ரங்கள், அன்னம், பொருள் இவற்றைக் குறிக்கும். இவையே விதிவழி கொடுப்பன. இவை-களைக் கொடாமலிருத்தல் தோஷமாகும். பிச்சை என்பது நம்மிஷ்டப்படி, விருப்பம் இருந்தால் கொடுக்கலாம். கொடாவிட்டால் அதனால் தோஷமில்லை. தனை - அளவு. ஆம் தனையும் - அவர-வர்க்குச் சக்தியுள்ள அளவே கொடுக்க வேண்டுமென்று விதிவழி கொடுத்தலுக்கும் எல்லை கட்டுகிறாள்.

'கை' என்னும் சொல்லுக்கே 'செயல்' என்று பொருள். காட்டுதல் - அனுஷ்டித்தல். இவைகளைப் பாவைக்குச் சாற்ற வேண்டும் என்று மூன்றாவது பாட்டில் சொல்லுவதால் இந்த விரதத்தின் லக்ஷணங்களையும் தன் ஹார்த விக்ரஹத்துக்கு அர்ப்பணிக்கிறாள்.

ஒருவரைப்பற்றி மற்றொருவரிடத்தில் சொல்லும் பேச்சு 'கோள்' என்றும், 'குறளை' என்றும் இருவகைப்படும். இன்னவரிடத்தில் இருந்தோ, அவரைப்பற்றியோ தான் உண்மை யாகக் கண்ட பொருள்களை மற்றவரிடம் கூறுவது 'கோள் கூறுவது'. இன்னவரைப்பற்றிப் பொய்யாக மற்றொருவரிடம் புனைந்து கூறுவது 'குறளை'. அது தீமை என்பதைக்காட்ட 'தீக்குறளை' என்றாள்.

*வாய்மை எனப்படுவது யாதெனின்*
*யாதொன்றும் தீமையிலாத சொலல் (குறள்-30-1)*

என்று சொல்லுக்கு இலக்கணம் திருவள்ளுவர் கூறினார். இன்-னொருவரைப் பற்றித் தான் அறிந்த கெட்ட குணங்களும், கெட்ட செயல்களுமே கோளாவன என்று கொண்டாலும் அவைகளும் தீமை பயக்கும். ஆதலின் இன்னொருவரிடத்தில் சொல்லுங்கால் அவையும் குறளையாகுமென்று ஆண்டாள் திருவுள்ளம் கொள்ளக் கிடக்கிறது. 'நாட்காலே' யென்றது ஒரு உத்க்ருஷ்டமான கவிதா ப்ரயோகம். இருட்டை விரட்டும் கதிரவன் ஒளி சிறிது சிறிதாகப் பாய, இருட்டு விலகிப் பகல் பொழுது புலரும் ஸமயத்தை இந்த வெளிச்சத்தின் 'கால்' இருட்டில் புதைந்திருப்பதாக ஒரு கவித்வ உத்ப்ரேக்ஷை.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

- நம் பாவை - நம் அபிமானத்திற்குரிய ஹார்த விக்ரஹம்.
- வையம் - உயர்ந்த வண்டி; நம் சரீரம்

- வையத்து வாழ்வீர்காள் - உயர்ந்த மானுடப் பிறப்பு பெற்ற ஆத்மாக்களே ! என்றழைப்பது
- ‘வாழாட்பட்டு, கூழாழ்பட்டு’ - திருப்பல்லாண்டு பாசுரம் காண்க
- வாழ் - ஆத்மாவுக்கு வேண்டியதைச் செய்வது
- கூழாட்பட்டு - உணவுக்கு ஏதுவாக ஏதும் செய்வது (இப்பாசுரத்தில் நாலு விதிகள், ஆறு நிஷித்தங்கள் பட்டியலிடப்படுகின்றன.)
- கோள், குறளை - வேறுபடுத்தி அறியவேண்டும்.
- நாட்காலே - இச்சொல்லின் பெருமை நோக்குக. பொழுதுபுலரும் வேளை - நாள் கால் வைத்திடும் காலம் ! இது வ்யூஹாவதார அனுபவம்.



## பாசுரம் - 3

*ஓங்கி யுலகளந்த உத்தமன் பேர்பாடி,*
*நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்,*
*தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து,*
*ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயலுகளப்,*
*பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்,*
*தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி*
*வாங்கக், குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்,*
*நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- ஓங்கி - குட்டையாக இருந்த வாமனன் மிகப்பெரிய உருவமாக வளர்ந்து
- உலகளந்த - பூமியை திருவடியால் அளந்த
- உத்தமன் - வேதப்ரதிபாத்யங்களான எல்லா தெய்வங்களிலும் மேற்பட்டவன்
- பேர் - நாமத்தை
- பாடி - நாமும், கேட்பவரும், அவனும் ரஸிக்கும்படியாகக் கானம் செய்து
- நம் பாவைக்கு - நம் ஹார்த விக்ரஹத்துக்கு
- சாற்றி - நிவேதித்து, அர்ப்பணம் செய்து
- நீராடினால் - தண்ணீரில் குளித்தால், நீர்மையில் இழிந்தால்

- தீங்கின்றி - உலகத்திலுள்ள தீய சக்திகளெல்லாம் தொலைந்து போய்
- நாடெல்லாம் - தேசங்களெல்லாம் புனிதமாகி, அந்தப் புனித பூமியில்
- திங்கள் மும்மாரி பெய்து - மாதம் மும்மாரி பெய்து, அம்மாரியால்
- ஓங்கு - வளரும்
- பெரும் - உயர்ந்த
- செந்நெல் - உத்தமமான நெல்
- ஊடு - இடையே
- கயல் உகள - மீன்கள் நேரிலும் புரண்டும் ஓட
- பூம் - அழகிய
- குவளைப்போதில் - குவளை மொட்டுக்களில்
- பொறி - புள்ளிகளோடு கூடின
- வண்டு - வண்டுகள்
- கண்படுப்ப - தூங்க
- தேங்காதே - தயங்குதலின்றி
- புக்கு - கொட்டிலில் புகுந்து
- இருந்து - மாட்ட்ருகில் உட்கார்ந்து
- சீர்த்த - கறப்பதற்கு சுரந்திருக்கிற
- முலை - முலையை
- பற்றி - தொட்டு
- வாங்க - ஏந்த
- குடம் நிறைக்கும் - தானாகவே கொட்டிக் குடங்களை நிறைக்கும்
- வள்ளல் - வள்ளன்மையோடு கூடின
- பெரும் பசுக்கள் - பெரிய பசுக்கள் இருத்தலால்
- நிறைந்து - மேன்மேலும் கொட்டில் பெருகி
- செல்வம் நீங்காத - தன்னுடைய செல்வம் என்னாளும் தன்னை விட்டுப் பிரியாததாக இந்த ஆயர்பாடி ஆகும்
- ஏல் ஓர் எம்பவாய்.

## கருத்துரை

முதல் பாட்டில் பரமாகிய நாராயணனையும், அவன் பெருமையையும் சொல்லி சிறுமியர்களை யழைத்தாள். இரண்டாவது பாட்டில் வ்யூஹமூர்த்தியாகிய பாற்கடலில் பையத் துயின்றவனைச் சொல்லி விரதத்தின் ஸ்வரூபத்தைச் சொன்னாள். இந்தப் பாட்டில் விபவ மூர்த்தியாகிய வாமனன், திரிவிக்ரமனாகி மஹாபலியிடமிருந்து ஜகத்தை தன்னதாக்கிக் கொண்டு அதை ரக்ஷிக்கும் அவனுடைய ஆற்றலைச் சொல்கிறாள். எல்லா மூர்த்திகளையும் எல்லாப்

படிகளாலும் ஆராதித்து அந்த ஆராதனங்கள் எல்லாவற்றையும் அவரவர் உபாஸனா மூர்த்தியாகிய ஹார்த விக்ரஹத்துக்கு அர்ப்பணம் செய்து, இந்த விரதத்தை வைதிகமுறையில் அனுஷ்டிக்க வேண்டும் என்கிறாள்.

ஓங்கி - பருத்து, அகன்று, உயர்ந்து. 'உலகு அளந்த' என்பது வேற்றுமைத் தொகை. முதல் வேற்றுமையாகக் கொண்டால் 'உலகு ஓர் அடிக்கோலாக இருந்து அவனை அளந்தது; தான் பெரிதென்று நினைத்துக்கொண்டிருந்த உலகு, அவன் தன்னைக்காட்டிலும் எவ்வளவோ பெரியவன் என்று உணர்ந்தது' என்பது பொருள்.

உலகையளந்த என்ற 2-ம் வேற்றுமையாகக் கொண்டால் பலிச் சக்கரவர்த்தியின் தான வாக்கியப்படி இவன் கொள்ளுதற்கு உலகை அளந்தான். இவன் அளக்கும்போது, உலகும் அவனை அளந்து அவன் பெருமையைத் தெரிந்து கொண்டது என்ற நயம் முதலாம் வேற்றுமைத் தொகையில் விளங்குகிறது. உத்தமன் - தன் பரத்வத்தையும், சர்வசக்தனாக இருக்கும் நிலையையும், ஆக்ஞா மாத்திரத்தினாலே ஒன்றை யுண்டாக்கவும், அழிக்கவும், ஒன்றை மற்றொன்றாகச் செய்யவும் (கர்த்தும், அகர்த்தும், அந்யதாகர்த்தும்) சக்தனாயிருப்பவன், தன்னுடைய சர்வ சக்தியையும் மறைத்துக் கொண்டு, தன்னுடைய ஸௌலப்யத்தையும், ஸௌசீல்யத்தையும் உலகத்துக்குக் காட்டினாலாவது, ஜீவன்கள் தன்னிடத்தில் வந்தடையுமா என்கிற க்ருபையினாலே, மனிதர் நடுவே மனிதனாக, ராம, க்ருஷ்ணாதி அவதாரங்களை எடுத்தான்; ஸாதாரண மனிதர் படும் இடர்ப்பாடுகள் அவ்வளவும் தானும் பட்டான்; தர்மத்தையும், நம்மையும் ரக்ஷிக்கவும், அசுர, ராக்ஷஸ சக்திகளை அழிக்கவும், வேஷந்தரித்தும் பாடுபடுகிறான்; ஆனதால் அவனை உத்தமன் என்று அழைத்தாள்.

கண்ணனிடத்தில் இவளுக்கு உள்ள ஈடுபாடு காரணமாக வ்யூகத்துக்கும் பரத்துக்கும் மேல் விபவம் உயர்ந்து நிற்கிறது. யோகிகளுக்கல்லது அவையிரண்டும் புலப்படா. கன்றுக்குட்டி மேய்க்கும் இடைப்பையன்களைத் தனக்குச் சரிசமமாகக் கொண்டு தானும் அவர்களுடன் போய், கூட மேய்த்த ஸௌலப்யமும், ஸௌசீல்யமும் இவனை எல்லாவற்றிற்கும் மேலாக்கியது.

'பேர்பாடி' யென்பதைக் காரணமாகவும், 'தீங்கின்றி' யென்பதைக் காரியமாகவும் பொருத்தி பொருள் கொள்ள வேண்டும். ஸ்ரீமத் பகவத்கீதை 11-ம் அத்யாயம் 36-வது ச்லோகார்த்தத்தை இது உட்கொண்டது.

*ஸ்தானே ஹ்ருஷீகேஸ தவப்ரகீர்த்யா*
*ஜகத் ப்ரஹ்ருஷ்யத்யநுரஜ்யதே ச |*

*ரக்ஷாம்ஸி பீதானி திஸோத்ரவந்தி*
*ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்கா: ||*

'ஹ்ருதய குஹரமாகிய ஹ்ருஷீகத்துக்கு ஈசனே, உன்னுடைய நாமத்தைப் பாடுதலினால், அப்படிப் பாடப்பெறும் இடத்தில் ஜகத்து சந்தோஷப்படுகிறது. நல்ல சக்திகளையெல்லாம் அங்கே இழுக்கிறது. தீய சக்திகளெல்லாம் பயந்து பத்து திக்குகளிலும் ஓடுகின்றன. நித்ய சூரிகளின் கூட்டங்களெல்லாம் அங்கே வந்து நமஸ்கரிக்கின்றனர். விபவத்தின் நாமங்களான ராம, க்ருஷ்ணாதி சப்தங்களைப் பாடுமிடத்தைவிட்டு ஸகல தீமைகளும் விலகுவன. எல்லா மங்களங்களும் அங்கே வந்து பொருந்துவன' என்ற பொருளை அந்வர்த்தித்து, 'பேர்பாடி தீங்கின்றி' என்கிறாள்.

அசுர, ராக்ஷஸ வர்கங்கள் தொலைந்துபோய், பரிசுத்தப்படுத்தப்பட்ட பூமி என்று சொல்வது, பகவான் நித்யவாஸம் செய்யும் ஆச்ரிதர்கள் திருவுள்ளத்திற்கும் லக்ஷணையாய் ஆகும். பூமியில் மழை பெய்வது போல், இவர்கள் திருவுள்ளத்தில் அவனுடைய அருள் பொழிந்தால், அங்கே செந்நெல் விளைவது போல் பக்தி, ப்ரபத்தியாகிய உபாயங்கள் இங்கேயும் விளைவன. இந்த ஆராதனமும் ஹ்ருஷீகேசனாகிய ஹார்த விக்ரஹத்துக்கே.

இங்கே 'ஊடுகயலுகள' என்றது பூமியின் நீர்வளத்தினால் மீன்களின் வர்கங்கள், விளையும் பயிர்களுக்கிடையே ஓடிக் கொண்டிருப்பது போல, பகவானுடைய சொரூப, ரூப, குண சேஷ்டிதங்கள் இவர்கள் மனதிலும் ஓடிக்கொண்டு ஒளி வீசிக் கொண்டிருப்பன என்கிறாள்.

'குவளைப்போது' - மலராத மனது. 'பொறி வண்டு' - கோயிற்பொறி ஒற்றிக்கொண்ட ஆசார்யர்கள். சிஷ்யன் மனது மலர்ந்தவுடன் தாங்கள் உபதேசம் செய்ய வேண்டுமென்று காத்திருப்பதைக் 'கண்படுப்ப' என்றாள். ஆசார்ய கோஷ்டியைப் பசுக்கள் என்றே ஆண்டாள் நிர்வாஹம். அவர்களுக்கு ஞான, அனுஷ்டான, வைராக்யங்களும் நிறைந்து, உலகத்தாரை உஜ்ஜீவிப்பிக்க வேண்டிய க்ருபையும் சுரந்து, சிஷ்யன் போய்த் திருவடியைப் பற்றியவுடன், சகல சாஸ்த்ரார்த்தங்களையும் பொழிந்து, அர்த்தபஞ்சக ஞானத்தையும் இவன் வாங்க வாங்கக் கொடுத்து, உபாயானுஷ்டானத்தையும் பண்ணி வைத்து, உபேயமான பகவத் பாதாரவிந்தத்தில் கொண்டு சேர்ப்பவர்கள்.

இந்தச் செல்வம் ஆத்மாவில் அந்வயித்து, ஐஹிகமான பொருட்செல்வம் போல் பூமியில் தங்கி விடாது, மோக்ஷ-பர்யந்தமாகக் கூடவரும் என்பதால் அதை 'நீங்காத செல்வம்' என்று முடிவு கட்டினாள். கொட்டில் பசுக்களால் வரும் உலகச்செல்வங்கள்

உடல் விழுந்தவுடன் கழல்வன. இது உயிர்ச்செல்வம். ஆத்மாவை விட்டு நீங்காது என்கிறாள்.

தேங்காதே - "மோக்ஷச்செல்வத்தை அடைவது மிகக் கடினமாயிற்றே, அதற்கு வேண்டிய சாதனங்கள் நமக்கு சித்திக்-குமா என்று கவலைப்படவேண்டாம்; தகுந்த அதிகாரிகளான ஆசார்யர்களைத் தேடிப் போங்கள்" என்று ஆற்றுப்படுத்துகிறாள்.

'புக்கு' என்பது "ஐஹிக வியாபாரங்களில் புகுந்து, பொன்னும், பெண்ணும் இன்பம் தருவன என்று இருக்கும் நீங்கள் இதை விட்டு அத்யாத்ம பூசையில் புகுங்கள்" என்று அழைக்கிறாள். 'இருந்து' என்பது "பழைய ஞாபகம் வந்து திரும்பிவிடாதீர்கள், அங்கேயே நிலைத்து நில்லுங்கள்" என்று சொல்லிக் கொடுக்கிறாள். இந்த ஆசாரியர்களுடைய க்ருபையையே 'முலை' என்கிறாள். அது எப்போதும் பால் கொடுக்கத்தயாராகச் சுரந்து இருப்பதால் 'சீர்த்த' என்கிறாள். இங்கே 'பற்றுதல்' என்பது அன்வயித்தல்; 'ஸதாசார்யர் திருவடி சம்பந்தம் மட்டுமே' என்னும் பொருள் கொள்ளத்தக்கது. பற்றுதல் இவனுடைய விசுவாஸத்திற்கு அளவாகும். இவனுடைய கார்யம் வாங்க வேண்டியதுதான் என்பது தோன்ற 'பற்றி வாங்க' என்றாள். இவன் க்ரகிக்கும் சக்தி குடமாகும். அதை ஆசார்ய-க்ருபை வெகு சீக்கிரத்தில் நிறைத்துவிடும் என்கிறாள். அதற்கு ஹேது அந்த ஆசாரியரிடத்தில் இருக்கும் வள்ளன்மை என்று பாடுகிறாள். இவ்விதம் உயிரை விட்டு நீங்காத ஞான, அனுஷ்டான, வைராக்கிய செல்வங்கள் இந்த ஜீவனுக்கு சித்திக்கும் என்று தலைக்கட்டுகிறாள். இந்தப் பாட்டின் மேற்கண்ட புதை பொருளை ஸ்ரீ நிகமாந்த மஹா தேசிகன்,

*பரக்கும் புகழ் வரும் பைம்பொருள் வாய்த்திடும்*
*பத்தர்களாய்*
*இரக்கின் றவர்கிவை ஈந்தால் அறமுள தென்றியம்பார்*
*சுரக்கும் கருத்துடைத் தேசிகர் கன்றென*
*நம்மையெண்ணிச்*
*சுரக்கும் சுரபிகள் போல் சொரிகின்றனர் சொல்லமுதே.*

என்று அம்ருதாசுவாதினி 14-வது பாசுரத்தில் விரித்துரைக்கும் பெருமையும் கண்டறியக்கிடக்கிறது.

இனி, 'பேர்பாடி' என்பதில், பேர் என்பதை பெயர் என்னும் சொல்லின் திரிபாகக்கொண்டால், 'நாம சங்கீர்த்தனம் செய்ய' என்றும், பேர் - கீர்த்தி என்னும் பொருள் கொண்டால் 'அவன் குண சேஷ்டிதங்களைப் பாட' என்றும் பொருளாகும். ஆதலால், இவ்விரண்டு பொருள்களிலும் நூல் முழுவதிலும் ப்ரயோகம்.

### விசேஷக் குறிப்பு (Dr. VNV)

'உலகை அளந்த உத்தமன்' என்று சாமான்யமாக இரண்டாம் வேற்றுமைத் தொகையில் நிர்வஹிப்பர். முதல் வேற்றுமைத் தொகையாக, 'உத்தமனின் ஓங்கிய வடிவை உலகமே அளந்தது' என்னும் அர்த்தம் காணலாம்.

பேர்பாடி, தீங்கின்றி - இரண்டையும் இணைத்துப் பொருள் காண வேண்டும். முதலாமது, காரணம் (முதற்செயல்). இரண்டாமது, காரியம் (பயன், விளைவு). எம்பெருமான் திருநாமங்களைப் பாடி நம் தீங்குகளை ஒழித்துக்கொள்ள இயலும். ஸகல மங்களங்களும் பெறக்கூடும். குவளைப்போது - மொட்டு; மலராதது, இது சிஷ்யன் மனம். இது மலரும் வரை காத்திருப்பது பொறிவண்டு, அதாவது ஆசார்யன் என்கிறார். கோயிற் பொறி ஒற்றிக்கொண்ட ஆசாரியர் என்றது அழகு.

கண்படுப்ப - காத்துக்கிடந்து, அந்தச் சூழலில் உறங்குவது போலுள்ள நிலை.

வள்ளல் பெரும்பசுக்கள் - இதுவும் ஆசார்யனுக்குக் குறிப்பு என்கிறார். ஜ்ஞான, வைராக்ய அனுஷ்டானச் செல்வம் மிக்கவர், வள்ளல்கள். ஆனால் வள்ளல்தன்மை பசுவின் மடிகளுக்கே அடைமொழி ! காத்து நிற்கும் பசுக்கள், மடி கறக்கிறது. எதை ? நீங்காத செல்வமான மோக்ஷச் செல்வத்தை, ஞானப்பாலை. கன்றுகள் முலையைப் பற்றுமளவில் குடம் நிறைப்பது போல் (பசுக்களும், ஆசார்யர்களும்) ஆசார்ய ஸம்ச்ரயணம் ஏற்பட்டது-தான் தாமதம், சிஷ்யராகிய கன்றுகளுக்குச் சுரபிகள் போல சுரக்குமாம் விளக்கங்கள்.

பேர்பாடி - 1. பெயர்பாடி என்று கொண்டு, திருநாம ஸங்-கீர்த்தனம் என்க. 2. புகழ்பாடி என்றும் கொள்ளக்கூடும். பெரு-மாளின் குணம், சேஷ்டிதங்கள் இவற்றைப் பேசி, கலந்துரையாடி அனுபவம் பெறுவது. இவை இரண்டும் பொருந்தும் என்கிறார்.

இது விபவ அவதாரம் பற்றியது.



## பாசுரம் - 4

*ஆழி மழைக்கண்ணா ! ஒன்றுநீ கைகரவேல்,*
*ஆழியுள் புக்கு முகந்துகொ டார்த்தேறி,*
*ஊழி முதல்வ னுருவம்போல் மெய்கறுத்து,*
*பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்,*
*ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து,*
*தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்,*
*வாழ வுலகினிற் பெய்திடாய், நாங்களும்*
*மார்கழிநீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

> ஆழி - கடல் நீரானது மழை நீராக மாறுவதற்கு
> கண்ணா - இடமாக உள்ள மேகமே
> நீ, ஒன்றும் - ஒறு சிறிதும்
> கை - உன்னுடைய செயலில்
> கரவேல் - ஒளிக்காதே
> ஆழியுட்புக்கு - சமுத்திரத்திலிறங்கி
> முகந்து கொடு - நீரை மொண்டுகொண்டு
> ஆர்த்து - முகந்த நீரை உன்னிடத்தில் கட்டிப் பிடித்துக்கொண்டு
> ஏறி - மேலே கிளம்பி
> ஊழி - நெடுங் காலத்துக்கு
> முதல்வன் - ச்ருஷ்டிக்கும் ஆதியம்பொருளாயிருக்கும் நாராயணனுடைய
> உருவம் போல் - தோற்றம் போல்
> மெய் கறுத்து - சரீரம் கறுப்பு நிறமாகி
> பாழி - வலிமையுடைய
> அம் - அழகிய
> தோளுடை - தோளையுடைய
> பத்மனாபன் - ச்ருஷ்டிகர்த்தாவான நாராயணனின்
> கையில் - வலக்கையில்
> ஆழிபோல் - சக்ராயுதத்தைப்போல்
> மின்னி - ஒளி வீசி
> வலம்புரிபோல் - இடக்கையிலுள்ள பாஞ்சசன்னியத்தைப் போல
> நின்றதிர்ந்து - பெரும் ஓசையைக் கிளப்பி
> தாழாதே - சிறிதும் குறைவில்லாமல்
> சார்ங்கமுதைத்த - அவன் கை வில் தெறித்த
> சரமழைபோல் - அம்புகளின் மழைபோல

> வாழ - உலகத்தார் வாழ்வடையும் பொருட்டும்
> நாங்களும் - இந்த நோன்பை நோற்கும் சிறுமியர்களும்
> மகிழ்ந்து - சந்தோஷத்தையுடைவர்களாகி
> மார்கழி நீராட - மார்கழி நீராட்டத்தைச் செய்ய
> உலகினில் பெய்திடாய் - பூமியில் பெய்யக்கடவை
> ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

முதல் மூன்று பாட்டுக்களில் பரம், வ்யூஹம், விபவம் ஆகிய நிலைகளிலிருக்கும் லோகோஜ்ஜீவன ஹேதுவாக சரண்யனைப் பாடி கடவுள் வாழ்த்துச் சொன்னாள். அநாதிகாலமாக தமிழ் கவிகளின் மரபு கடவுள் வாழ்த்தைப் பாடியவுடன் வான் சிறப்பைப் பாடுவர். ஆனால் இவள் கவிதா சாமர்த்தியத்தால் அந்த மேகமே நாராயணன் என்று பாடுகிறாள். அவன் ஆச்ரிதர் விரும்பித்தொழும் மூர்த்திகளாக விரும்பியவிடமெல்லாம் திருக்கோவில் கொண்டு எழுந்தருளியிருப்பதுபோல் இந்த மேகமும் நீர் வேட்கையுள்ள எல்லாவிடங்களிலும் போய் பெய்கிறது என்கிறாள். அர்ச்சா விக்ர-ஹங்களின் மேன்மையைச் சேதநர்களுக்கு வற்புறுத்தி, இந்த மேகத்தினிடத்தில் அவனுடைய ஸ்வரூப வைலக்ஷண்யங்க ளெல்லாம் இருக்கின்றன என்பதையும் எடுத்துக்காட்டி, மேகம் அதைப் போற்றுபவர்களுக்கு மழை பொழிந்து எல்லா நற்பயனையும் விளைவிப்பதுபோல, அர்ச்சையும் அருள்புரியக் காத்திருக்கிறது என்கிறாள்.

*தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவந்தானே*
*தமருகந்த தெப்பேர் மற்றப்பேர், தமருகந்து*
*எவ்வண்ணஞ் சிந்தித்திமையாதிருப்பரே*
*அவ்வண்ணம் ஆழியானாம். (முதல் திருவந்தாதி – 44)*

நாமும் அந்த மேகம் பொழிந்த மழை நீரில் குளித்து முழுகி, உடலை சுத்தி செய்து கொண்டு, இவனுடைய நீர்மையில் ஆடுதலால் ஆத்ம சுத்தியை அடைவோமாக என்று பாசுரத்தைத் தலைக்கட்டுகிறாள். இங்கே,

*புறந்தூய்மை நீரானமையும் அகந்தூய்மை*
*வாய்மையாற் காணப்படும். (30.8)*

என்ற குறளின் பொருள் ஆராயத்தக்கது. வடமொழி நூலுடையார் ஸத்யம், சௌசம் என்று திரும்பத் திரும்பச் சொல்லுவார்கள். ஸத்யம் - அகந்தூய்மை, சௌசம் - புறந்தூய்மை. மேகம் பொழிந்த நீரால் புறந்தூய்மை யமையும். மனத்துக்கண் மாசிலனாகி அவனை

ஆராதித்தல் என்பது பகவத் குணமான நீர்மையில் ஆடுதல் (அவகாஹித்தல்).

*மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்*
*ஆகுல நீர பிற.* (4.4)

ஒரு பாசுரத்தால் ஐந்து கார்யங்களைச் சாதித்தது - 1. வான் சிறப்பு, 2. அர்ச்சாமுர்த்தி, 3. அது மேகத்திலுள்ளது என்பது, 4. அதை சேவிக்க வேண்டும், 5. அதனால் சகல ச்ரேயஸுும் உண்டாகும் என்பன - இவள் கவித்வத்தின் திறம்.

ஆழி, மழை என்னும் முதற் பொருள்களின் பெயரால் அவ்வவற்றிலுள்ள சினையாகிய நீரைக் குறித்தது முதல் ஆகு பெயர். (முதல் சினையைக் குறித்தது) கண் - இடம். ஒன்று - சிறிது; கை - செயல். கரத்தல் - ஒளித்தல். கைகரவேல் - செயலில் ஒளிக்-காதே என்று சொன்னது இந்திரனுடைய கார்யமான மழை பெய்-தலை நீ தவறாதே என்ற வேத வாக்கியத்தை அவனுக்கு நினைவூட்டியவாறு.

ஆர்த்தல் - கட்டுதல். தன்னிடத்திலுள்ள வித்யுத் சக்தியால் ஆவி ரூபமாக இருக்கும் நீரைத் தான் கட்டி எடுத்துக்கொண்டு மேலே எழுகிறது என்ற விஞ்ஞான ஆராய்ச்சியாளர்கள் கண்டுள்ள உண்மையை, 'கட்டுதல்' என்னும் பொருளுள்ள ஆர்த்தல் என்ற சொல்லால் விளக்குகிறாள். ஏறி - பல தேசங்களில் ஸஞ்சாரம் செய்யும் பொருட்டு மேலே செல்லுதல். பகவான் திருவுள்ளம் குளிர்ந்து அருள் பொழிதலை மேகம் நன்றாகக் கறுத்து மழை பொழிதலுக்கு உவமையாக்கினாள் என்பதை, "போல்" என்னும் உவமையுருபு காட்டுகிறது. ஊழிமுதல்வன் உருவத்தில் நெருங்-கியும், அதிகமும் பரிச்சயமானதால் ஆண்டாளுக்கு இந்த நிறஸாம்யம் மனத்திலெழுகிறது.

உபஸம்ஹாரத்துக்கும், ஸ்ருஷ்டிக்கும் ஹேதுவாக, அவன் முதலாக நிற்பதற்குரியவன் என்பது 'ஊழிமுதல்வன்' என்று காட்டப்படுகிறது. இரண்டுக்கும் உடையவன் என்பதை 'அன்' என்னும் விகுதியால் குறிப்பிட்டாள். 'ஊழியான்', 'முதல்வன்' என்று பொருள் கொள்ள வேண்டும். நிக்ரஹம், அனுக்ரஹம் இரண்டையும் செய்வது வலக்கை யாதலால் 'பாழியந்தோள்' என்று அதைக் கூறினாள். 'பற்பனாபன்' என்பதை முதல்வனோடு கூட்டிப்பொருள் கொள்க. நாபீ பத்மத்தில் பிரம்மா தோன்றியதைக் குறிப்பால் உணர்த்துகிறாள். விதை முளைத்து வளர்வதற்கு முன் உள்ள நிலையை நாம் 'முதல்' என்னும் பெயரால் குறிப்பிடுகிறோம். 'கையில்' என்பதற்குச் செயலில் என்றும் பொருள் கொள்ள வேண்டும். பகவானுடைய பஞ்சாயுதங்கள் ஆச்ரிதர்கள் ஸேவிக்குங்கால் ஆபரணங்களாகவும், சரண்யன் அசுர

ராக்ஷஸர்களைப் பொருது அழிக்குங்கால் ஆயுதங்களாகவும் விளங்குகின்றன. பாழியந்தோளுடை என்னும் லக்ஷணத்தால் அவன் உத்யுக்தனாகி அசுர ராக்ஷஸர்களை வெல்லச் செயல் புரிபவன் என்பதும், அவ்விதம் செயல் புரியும்போது ஆபரணமாகிய சக்ரம் ப்ரயோக சக்ரமாகி நிமிரும் என்பதும், அப்போது அதனுடைய பூர்ண ப்ரகாசமும் விளங்கும் என்பதும் காட்டி, மின்னல் அந்த ப்ரகாசத்தைப்போலிருக்கிறது என்று மின்னலுக்கு ப்ரயோகச் சக்ரத்தை உவமை கூறுகிறாள்.

'வலம்புரிபோல் நின்றதிர்ந்து' என்பதின் பொருளை "ஞாலத்தையெல்லாம் நடுங்க முரல்வன பாலன்ன வண்ணத்துன் பாஞ்சசன்னியம்" என்று• 26-வது பாடலில் கூறுகிறாள்.

*ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி*
*வ்யதாரயத்*
*நப:ச ப்ருதிவீம் சைவ துமுலோப்யநுநாதயந்*
*(பகவத்கீதை 1-19)*

என்று இதிஹாசத்தையும் கண்டு கொள்க.

சார்ங்கமுதைத்த மட்டில் உவமையை நிறுத்திக்கொண்டு, அது சாகப் பெய்வது போல் பெய்யாமல் நீ உன் நீர்த்துளிகளாகிய மழையை 'வாழப் பெய்' என்று பயனை மாற்றிப் பேசுகிறாள். இங்கே இந்த வாழப்பெய்யும் மழைநீரும் எச்சில், துப்பல் முதலான அசுத்தங்களைக் கழுவிவிட்டு ஸ்தலங்களைப் பரிசுத்தமாக்குதலால் அஸுர ராக்ஷஸ சக்திகளைச் சாகச் செய்யும் அஸ்த்ர சஸ்த்ரங்களின் கார்யங்களைச் செய்து, உயிர்களுக்கெல்லாம் உபஜீவ்யமான கதிர்களையும் விளைவிக்கிறது. இவை இரண்டையும் அநிஷ்ட நிவாரணம், இஷ்டப்ராப்தி என்ற பொருள்பட "வாழ" என்று குறிப்பிடுகிறாள்.

## *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

கடவுள் வாழ்த்து மூன்று பாசுரங்களில் ஆயிற்று. வான் சிறப்பு சொல்ல, மேகத்தைக் கூவியழைத்து உடனே ரஸமாக, நாராயணனே மேகமாக (அர்ச்சாரூபத்தில்) ஆங்காங்கே கருணை மழை பொழிகிறான் என்று போற்றுகிறாள் என்கிறார்.

ஊழி முதல்வன் - ஊழியான், முதல்வன் (ஸம்ஹாரகர்த்தா, ஸ்ருஷ்டிகர்த்தா கூட).

மேகத்துக்கும் பெருமாளுக்கும் மட்டும் ஒப்புமை என்றில்லாது, மேகம் அர்ச்சாவதாரத்திற்கும் உவமை என்பது உணர்க.



## பாசுரம் - 5

*மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்,*
*தூய பெருநீர் யமுனைத் துறைவனை,*
*ஆயர் குலத்தினில் தோன்று மணிவிளக்கைத்,*
*தாயைக் குடல்விளக்கஞ் செய்தகா மோதரனைத்,*
*தூயோமாய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது,*
*வாயினாற் பாடி மனத்தினாற் சிந்திக்கப்,*
*போய பிழையும் புகுதருவான் நின்றனவும்,*
*தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

> மாயனை - மாயையைத் தன் சொத்தாகவும் அதீனமாகவும் உடையவனை
> வடமதுரை - வடமதுரையில்
> மன்னு - வந்து பொருந்திய
> மைந்தனை - பல பராக்ரமங்கள் உடையவனை
> தூய - பரிசுத்தமான
> பெருநீர் - அகன்ற, ஆழ்ந்த, நீளமான ஓட்டத்தையுடைய நீரையுடைய கடல் போன்ற
> யமுனை - யமுனை நதியின்
> துறைவனை - வெள்ளத்தைக் கடத்தி அக்கரையில் சேர்ப்பவனை
> ஆயர் குலத்தில் - இடையர் வகுப்பில்
> தோன்றும் - அவதரிக்கும்
> மணிவிளக்கை - மாணிக்க (அழகிய ப்ரகாசத்தையுடைய) தீபத்தை
> தாயை - தேவகியை (யசோதையையும் கூட)
> குடல்விளக்கஞ் செய்த - குடலை சத்தையுடையதாகச் செய்த
> தாமோதரனை - வயிற்றில் கயிற்றினால் கட்டுண்டவனை
> நாம் - மார்கழி நோன்பை நோற்கும் நாம்
> தூயோமாய் வந்து - மன மொழி செயல்களால் பரிசுத்தர்களாக வந்து
> தூமலர் - பரிசுத்தமான பூக்களை
> தூவி - சொரிந்து
> தொழுது - வழிபட்டு
> வாயினால் - பகவானுக்கு ஏற்பனவுஞ், சத்தியமுமான பதங்களால்

- பாடி - கானஞ்செய்து
- மனத்தினால் சிந்திக்க - மனசு புத்திகளினால் நினைக்கவும், சாக்ஷாத்கரிக்கவும்
- போயபிழையும் - பல ஜன்மங்களில் செய்த பாபமூட்டைகளும்
- புகுதருவான் நின்றனவும் - எதிர்காலத்தில் நம்மை வந்தடையும் பொருட்டு காத்திருப்பவைகளான பாபங்களும்
- தீயினில் - நெருப்பில்
- தூசு - ஒரு தூசியாக
- ஆகும் - ஆவன
- எம்பாவாய் - என்னுடைய ஹ்ருதயத்திலிருக்கிற உபாஸனா தெய்வமே
- செப்பு - சொல்
- ஏல் - ஏற்றுக்கொள்
- ஓர் - உணர்.

## கருத்துரை

ஆண்டாளுடைய திருப்பாவை அபிப்ராயங்களின் உயர்வில் இமய மலையினும் மேலானதாகவும், பொருள்களின் ஆழத்தில் பசிபிக் மஹாசமுத்ரத்தினும் ஆழமானதாகவும் அமைந்துள்ளது. முப்பது பாட்டுக்களையும் ஆறைந்துகளாகப் பெரியோர் பிரித்துள்ளார். "ஐயைந்துமைந்தும்" என்பதை நோக்குக. அவைகளில் முதல் ஐந்து பாடல்கள் இந்த நூலுக்குப் பாயிரமாவன. இப்போது எடுத்துக் கொண்ட பாடல் பாயிரத்தின் கடைசிப்பாட்டு

முதற்பாட்டில் "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று பரத்வத்தையும், "ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்" என்று கண்ணனின் சௌலப்யத்தையும், ந்ருஸிம்ஹன் வடிவமான தன் ஹ்ருதயத்தில் உபாஸனா தெய்வமாகக் கிடைக்கும் ஹார்த விக்ரஹத்தையும் சொன்னாள். இரண்டாவது பாட்டில் 'பாற்கடலில் பையத்துயின்ற' வ்யூஹ மூர்த்தியைச் சொன்னாள். மூன்றாம் பாட்டில் "ஓங்கியுலகளந்த உத்தமன்" என்று, வாமனனாய் வந்து த்ரிவிக்ரமனாய் நீண்ட விபவ மூர்த்தியைச் சொன்னாள். நாலாம் பாட்டில் அர்ச்சாமூர்த்தியை மேகத்தில் காட்டிக் கொடுக்கிறாள். பரம், வ்யூகம் என்ற மூர்த்திகள் தேச வேறுபாட்டால் இந்திரியங்களுக்குப் புலப்படாமலும், விபவம் ஒரு குறிப்பிட்ட காலத்தில் மட்டும் தோன்றி மறைந்தும், ஹார்தமூர்த்தி மனக்கண்ணுக்கு மட்டுமே யன்றி உடற்கண்ணுக்குப் புலப் படாமையாலும், இந்த நாலு மூர்த்திகளையும் வ்யாவிருத்தி செய்து, கடல் நீரில் இருக்கும் உப்பு, கைப்பு, துவர்ப்புகளைப் போல் இந்த நாலு மூர்த்திகளிலும் தோஷங்கள் இருக்கின்றன வென்றும் அந்தக் கடலிலிருந்து சுத்த

ஜலத்தைப் பிரித்தெடுத்துக் குன்றில் பெய்து, அது ஐந்து நிலங்-களிலும் ஓடி, சர்வ ஜீவன்களுக்கும் உபஜீவியாய் விளங்குவதுபோல் அர்ச்சை அனுக்ரஹ சாமர்த்யத்தில் அவ்விதம் விளங்குகிறது என்பதும் ஆண்டாளுடைய திருவுள்ளம். அதனால் அர்ச்சை மேகம் போன்றது என்று ''ஆழி மழைக்கண்ணா'' யென்று தொடங்குகிறாள்.

உப்பினால் ஒன்றுக்கு முதவாத கடல்நீர், சர்வ ஜகத்துக்கும் ஜீவனைக் கொடுக்கும்படியான மழை நீராக மாறுதலுக்கு, கண் - இடமாகவுள்ள, ஏ! மேகமே! என்றழைக்கிறாள். இந்த ஐந்து மூர்த்திகளுக்கும் அங்கங்கே வழிபாட்டு க்ரமங்களைக் கற்பித்த-வள், இந்த ஐந்தாவது பாசுரத்தில் பகவதாராதன க்ரமத்தை எவ்வித மன மொழி செயல்களோடு அனுஷ்டிக்க வேண்டுமென்பதைச் சொல்லிக் கொடுக்கிறாள். நம்முடைய ஆராதனீயமான தெய்வம் கண்ணன் என்கிறாள். அவனுடைய லக்ஷணத்தை ஐந்து படியாக வர்ணிக்கிறாள்.

1. மாயனை - கண்ணன் பரப்ரம்மமானதால் அவனுக்கு அவசிய-மானதும், அடங்கி நடப்பதாகவுமுள்ளது மாயை.

*தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா!*
*மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம் ஏதாம் தரந்தி தே*
*(கீதை 7-14)*

'ஹே! அர்ஜுனா! ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் மயமாக உள்ள என்னுடையதான மாயை கடக்கமுடியாதவள். என்னையே யார் வந்து அடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டு-கிறார்கள்.' மாயையைக் கடந்து பகவான் திருவடியை அடைவதற்கு பகவான் ஒருவனே உபாயம். அவனைத்தவிர வேறு உபாயம் கிடையாது என்கிற வேத சாஸ்த்ரங்களின் முடிவை மாயனை என்னும் ஒரு பதத்தால் குறிப்பிட்டாள். அதைத் தாண்டுவிக்கும் தெய்வமே எல்லோருக்கும் உபாஸனீயமான தெய்வம் என்று சுட்டிக் காட்டுகிறாள்.

2. அடுத்து, 'மன்னு வடமதுரை மைந்தன்' என்று கூறி, 'கண்ணனே நம் பக்திக்குரியவன், மோக்ஷ உபாயமாகிய பக்தியை அந்தக் கண்ணனிடத்தில் பண்ண வேண்டும்' என்கிறாள். அவன் இயற்கை யழகு நிரம்பியவனாயிருத்தலோடு வடமதுரைக்கு வந்து கம்ஸ-னுடைய அரண்மனைக்குப் போகும்போது வழியிலே வந்த ரஜகன் (வண்ணான்) கொண்டு வந்த கம்ஸனுடைய உயர்ந்த ஆடை-களையும், மாலாகாரன் (பூக்காரன்) கம்ஸனுக்காகக் கொண்டு போன மாலைகள், புஷ்பங்களையும், குப்ஜையை நேரே நிமிர்த்து அவள் கொண்டு போன மணமிகுந்த சந்தனத்தையும், எல்லா-வற்றையும் வாங்கியணிந்துகொண்டு செயற்கையழகும் நிரம்பி

மணமகனாக விளங்கியிருப்பவனை மனத்தினாற் சிந்திக்க வேணுமென்று பக்திக்கு அவனது திவ்யமங்கள விக்ரஹமே லக்ஷியம் என்று சுட்டிக் காட்டுகிறாள். வால்மீகி ராமனை குணவான், வீர்யவான் என்று அடுத்தடுத்து எடுத்தாற்போல, இவன் மணமகன் போன்ற அழகியவன்` என்றும், பல பராக்ரமங்களால் பெரியவன் என்றும் குறிக்க 'மைந்தனை' என்கிறாள். "மைந்தே வலிமை" என்னும் தொல்காப்பியப் பொருளதிகார சூத்ரத்தை நோக்குக.

3. மூன்றாவதாக, ப்ரபத்தி உபாயத்தையும், அதன் பயனையும் அருளிச்செய்கிறாள். 'பெருநீர் யமுனை' யென்றது கடல் போன்று அகழ்ந்து, அகன்று, நீண்டிருக்கும் யமுனையென்று பொருள். இதற்குத் தூயவென்னும் அடைமொழி உப்பு, துவர்ப்பு, முதலான கடல்நீரின் துர்க்குணங்கள் இல்லாதது என்பதைக் குறிப்பிட்டு லக்ஷணையாக வேதம் குறிப்பிடும் மத்வாதி 32 வித்யைகளிலுள்ள காயக்லேசம், வ்ரதானுஷ்டானம் முதலிய துன்பங்களொன்றும் கலக்காமல், சுகமாகவும், ஸ்வாதுவாகவும் அனுஷ்டிக்கத் தக்க ப்ரபத்தியைக் குறிப்பிடுகிறாள்.

மேலும், இல்வாழ்கையிலிருப்பவர்களுக்கு சம்சாரத்தை அர்ணவமென்றும், சாகரமென்றும் நூல்கள் குறிப்பிடுகின்றன. அவைகளுக்குச் சரியான தமிழ்ச்சொல் பெருநீர் என்பது. மற்ற ஆழ்வார்கள், ஆசார்யர்களெல்லாரும் பெண்டிரோடு நடத்தும் குடும்ப வாழ்க்கையை நிஷேதித்தும், நிந்தித்தும் அது 'தன் பகவன் நிஷ்டையைக் கெடுத்துவிட்டது' என்றும் பாடி வருந்த, இவள் ஒருத்திதான் இல்வாழ்க்கை பரிசுத்தமானதென்று குறிப்பிட்டுக் காட்டுகிறாள். "ப்ரஜயா ஹிப் புருஷ: பூர்ண:" என்னும் வேத வாக்கியத்தையும், "தர்மப் ப்ரஜாபிவ்ருத்யர்த்தம் விவாஹம் விதினா குரு" என்னும் மனு வாக்யத்தையும், "மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம் நன்மக்கட்பேறு" என்னும் திருக்குறளையும், "வாயு நன்மக்களைப் பெற்று மகிழ்வாரே" என்ற ஆண்டாள் அருளிச் செயலையும் நோக்குக. இவளுடைய அருளிச்செயலில் நன்-மக்கட்பேறு மனைமாட்சிக்கு நல்லவாபரணம் (நன்கலம்) என்பதை அடியொற்றி இவள் 'நன்மக்களைப் பெற்று' என்று பாடியிருப்பதை நோக்குக. இதிலுள்ள மகிழ்ச்சி ஒவ்வொரு க்ருஹஸ்தனுக்கும் நன்மக்கள் பிறந்தவுடன் வேத சாஸ்த்ர விஹிதங்களாகவும், அனாதியாக அவரவர் குலத்தில் அனுஷ்டிக்கத் தக்க தர்மங்களும் இனியும் நிலைத்து நிற்கும் என்னும் பெருமிதமாகும். இஃது இல்லாவிட்டால் குலக்ஷயம் ஏற்படும்.

*குலக்ஷயே ப்ரணஸ்யந்தி குலதர்மாஸ் ஸனாதனா:*
*தர்மேநஷ்டே குலம் க்ருதஸ்னம், அதர்மோஷிபிபத்யுத*
*(பகவத்கீதை 1-40)*

என்னும் அர்ஜுன விஷாதமும் நோக்கத்தக்கது.

தூயவென்னும் சொல்லில் இந்த தெய்வகவி இவ்வளவையும் அடக்குகிறாள். இன்னுமுள்ளவைகளை அபிக்ஞர்கள் உய்த்துணர்க.

நீரோட்டம் அல்லது நீர்நிலைக்குப் பக்கத்திலிருந்து அக்கரை போகவேண்டியவர்களைப் படகிலேற்றிக் கடத்தி வைப்பவன் 'துறைவன்'. இந்த ஒரு சொல்லில் சரம ச்லோகத்தின் அர்த்தத்தை முற்றிலும் க்ரஹிக்கிறாள். அங்கே "மோக்ஷயிஷ்யாமி" என்னும் பதத்தில், 'விடுவிக்கிறேனெ'ன்னும் பொருளை, ஸங்கல்பமட்டில் போதாது "தாரயிஷ்யாமி" 'கடத்தி வைக்கிறேனெ'ன்னும் ஸங்கல்பமுமுண்டு என்று திருத்தியமைத்துக் காட்டி, வராஹ சரமச்லோகத்தில், "நயாமி பரமாம் கதிம்" என்றிவளுக்குச் செய்து கொடுத்த வாக்குறுதியையும் கண்ணனுக்கு ஞாபகப்படுத்தித் துறைவனென்று அவனை குறிப்பிடுகிறாள். இந்தச் சொல்லினால் ப்ரபத்தியும் அதன் பயனாகிய மோக்ஷப்ராப்தியும் சொல்லப்பெற்றது.

நாலாவதாக, 'ஆயர் குலத்தினில் தோன்று மணிவிளக்கு' என்று உத்தர க்ருத்யாதிகாரத்தின் பொருளை விளக்குகிறாள். இப்பொருள் திருப்பாவை 28-வது பாசுரத்தில் நன்கு விளக்கப்பட்டுள்ளதாதலின், அதுவே இதற்கு வ்யாக்யானமாகும். இங்கே மணிவிளக்கென்பது விசேஷம். "வெய்யோனொளிதன் மேனியில் விரிசோதியின் மறைய..." கம்பராமாயணம் - கங்கைப் படலம் (6-1) என்பதுபோல் ஸ்வயம் ப்ரகாசத்தால் வழிகாட்டும் விளக்கு இது. எனவே மாணிக்கச்சுடர் என்னும் பொருள்பட மணிவிளக் கென்றாள். இது கலங்கரை விளக்கு. சம்சார அர்ணவத்தில் காற்றினாலும், அலைகளாலும், அலைக்கப்பட்டுத் தவிக்கும் சிறு படகுகள் இந்த விளக்கையே குறிக்கோளாகக் கொண்டு அதை நோக்கியே படகைச்செலுத்தி அதன் பக்கல் ஒதுங்கித் திருவடி நிழலில் வர்த்திக்கவேண்டும் என்பதைக் குறிப்பிடுகிறாள். இந்த விளக்குத் தகழியும் நெய்யும் வேண்டுமென்று முதல் ஆழ்வார்கள் இருவரும் உபாயத்தைச் சொன்னதையும் ஒத்துக்கொண்டு அதனால் அடையும் உபேயமானது இவை இரண்டையும் வேண்டாத மாணிக்கச்சுடர் என்று காட்டும் அழகு ரசிக்கத்தக்கது.

5. இனி கடைசியாக இந்த தெய்வம் தாயைக்குடல் விளக்கம் செய்ததென்கிறாள். அவதார தசையில் ஒரு தாய் வேண்டும். அந்தத் தாயின் குடல் இவனைப் பெற்றதனால் விளங்கும். மனை மாட்சியுள்ள இடத்தில் தான் இவனும் அவதரிப்பான். தூணில்லாமல்

உத்திரமும் கூரையும் இல்லையாதலின் வீடுமில்லை, மனை-மாட்சியுமில்லை. எனவே அந்தத் தூணின் பெருமையைக் குறித்துக்காட்ட அதையே தன் தாயாக்கிக் கொண்டு அதில் அவதரித்தவன். நெடுங்காலம் குழந்தையில்லாத கௌஸல்யை வயிறு வாய்த்தான். "மன்னு புகழ் கோசலை தன் மணி வயிறு வாய்த்தவனே" என்பதையும் நோக்குக.

இந்த அவதாரத்தில் ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர்ந்தான். இரண்டு தாய்மார்கள் குடலினையும் விளங்கச்செய்தான். பெற்ற தாய் முதல் ஆறு குழந்தைகளைப் பறிகொடுத்து ஏழாவது கர்ப்பம் விச்சின்னமாகப் போனவள். இந்தக் குழந்தை தான் அவளுக்குத் தக்கி அவள் குடல் விளங்கிற்று. யசோதைக்குக் குழந்தையேயில்லாமல் கிழ வயது ஆயிற்று. இவனுக்குப் பதில் போவதற்காக மாயை அவள் வயிற்றில் பிறந்ததாலும், இவனே தன் மகன் என்று அவள் ஏழு வயதுவரை வளர்த்ததாலும் அவள் குடலும் விளங்கிற்று. ஆனால் இவ்-வளவையும் செய்துவிட்டு அந்த யசோதையும் மற்ற இடைச்சிமாரும் இவன் வயிற்றில் கயிறுகளைக் கட்ட, ஒன்றும் ஆக்ஷேபிக்காமல் அதையும் பொறுத்திருந்தான் என்று அவனுடைய சௌலப்-யத்தையும், சௌசீல்யத்தையும் குறித்துக்காட்டி தாமோதரன் என்று அவனைக் குறிப்பிட்டு, நாம் சிறிதும் பயமில்லாமல் அவனை அண்டி வாழலாம், அவன் நிச்சயம் காப்பாற்றுவான் என்று பொருள் படப் பாடுகிறாள்.

இனி இத்தகைய லக்ஷணங்களால் அலங்க்ருதனான அந்த மஹாபுருஷனை எவ்விதம் ஆராதிக்கவேண்டும் என்பதைக் குறிப்பிட்டு பாட்டை முடிக்கிறாள். இங்கே தூயோம் என்றதற்கு 'மனம், மொழி, செயல்களின் பரிசுத்தம்' என்பது சாஸ்திரங்கள் திட்டமிட்டவை.

*தஸ்மாச் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யா கார்ய*
*வ்யவஸ்திதௌ |*
*ஜ்ஞாத்வாசாஸ்த்ர விதானோக்த கர்ம கர்த்தும்*
*இஹார்ஹஸி ||*

பகவத் கீதை 16-24-வது ச்லோகத்தை இங்கே அன்வயித்துக் கொள்க.

இதுவும் போதாதென்று நம்முடைய சிந்தனையும், வாயினாற் பாடுவதும், தொழுதலும், மலர்சூடுதலுமெல்லாம் எப்படி இருக்க வேண்டுமென்பதற்கு ஆண்டாளுடைய சூத்திரம் இது. இந்த

சூத்திரத்திற்கு வ்யாக்யானமாக மன, மொழி, செயல்களை வரிசைப்படுத்தி பெரியதிருமொழி 1-6-வது பதிகமாகிய நைமிசாரண்ய பதிகத்தில் 7, 8, 9 பாசுரங்களில் முறையே திருமங்கைமன்னன் சாதித்திருப்பதையும் காணலாம். அதில் முக்கியமாக கவனிக்க வேண்டியது மரம், செடி, கொடிகளில் பூக்கும் மலர்கள் காயிகமான செயலில் தூவும் மலர்களாயிருக்க, வாயினால் பாடும் வாக்கியங்களும் ப்ரம்ம நிஷ்டர்களாகிய பூர்வ சூரிகளுடைய ஸ்தோத்ரபாடல்களாய் இருக்கவேண்டும் என்பதைக் குறிப்பிட்டு "பாவினார் இன் சொல் பன் மலர் கொண்டு" என்று பூர்வ சூரிகளுடைய ஸ்தோத்ர சொற்களை வாசிகமான மலர் (சுமனஸ்) என்று 8-ஆம் பாசுரத்தில் குறிப்பிடுவதை நோக்குக. இவற்றை இன்னும் ஆராய்ந்தால் மிகமிகப் பெருகுமாதலின் இத்துடன் விரமிக்கப் ப்ராப்தம்.

## *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

பகவதாராதன க்ரமத்தைக் குறிப்பாகக் காட்டும் பாசுரம். அதுவும் கண்ணன் விஷயமாக.

**1.** மாயாதரணம் அவன் மூலம் தான் இயலும். அவன் மாயன்.

**2.** மைந்தன் - கண்ணன் லீலைகளும் சாதனைகளும் நம் மனத்தில் நிழலாட வைக்கிறார்.

**3.** தூய பெருநீர் யமுனைத்துறைவன் - யமுனை கடல்போலப் பெருநீர், ஸம்ஸாரார்ணவம் போல்.

இல்வாழ்க்கையை பரிசுத்தமானது என்பது ஆண்டாளின் திருவுள்ளமாகக் காட்டுகிறார்.

அக்கரை சேர உதவும் 'போதம்' (மரக்கலம், படகு) யமுனைத்துறைவன் ஆகும். மோக்ஷயிஷ்யாமி, 'நயாமி பரமாம் கதிம்' என்று நம்பிக்கை ஏற்படுத்திச் சொன்னவன் கண்ணனே ! ஈண்டு பிரபத்தி நெறிக்குக் குறிப்பு.

**4.** மணிவிளக்கு - கலங்கரை விளக்கம். ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸார நூலில் உத்தர க்ருத்யாதிகாரத்தில் கலங்கரை விளக்கு என்பது குறிப்பு.

**5.** தாயைக் குடல் விளக்கம் செய்த பெருமை நினத்து, நினைத்து உருகும்படி இருக்கிறது.

**6.** தூயோமாய் வந்து நாம் தூமலர்தூவித்தொழுது - திருவாராதனம் செய்ய வேண்டிய முறையைக் காட்டுவது போல் தெரிகிறது.

கீழ்கண்ட ஐந்து பாசுரங்களும் முறையே பரம், வ்யூகம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமிக்குக் குறிப்புகள்.



## பாசுரம் - 6

*புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்,*
*வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ,*
*பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு,*
*கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி,*
*வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை,*
*உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்,*
*மெள்ள வெழுந் தரியென்ற பேரரவம்,*
*உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- புள்ளும் - பறவைகளும்
- சிலம்பின - சப்தித்தன
- காண் - அறிவாய்
- புள்ளரையன் - கருடனுக்கு மன்னனான பெருமாளுடைய
- கோயில் - கோயிலில்
- வெள்ளை - வெண்ணிறமானதும்
- விளி - உறக்கக் கூவுவதுமான
- சங்கின் - சங்கத்தின்
- பேரரவம் - பெரிய சப்தத்தை
- கேட்டிலையோ - நீகேட்கவில்லையோ
- முனிவர்களும் - மனன சீலர்களும்
- யோகிகளும் - சித்தி பெற்றவர்களும்
- பேய்முலை நஞ்சுண்டு - பூதனை விஷத்தைப் பூசிக்கொண்டுவந்த முலையின் பாலையுண்டு
- சகடம் - சகடாசுரனுடைய
- கள்ளக்கலக்கு - வஞ்சனையோடு கூடிய ஓட்டம்
- அழிய - அழியும்படி
- காலோச்சி - காலாலுதைத்து

- வெள்ளத்து - திருப்பாற்கடலில்
- அரவில் - ஆதிசேஷன் மேல்
- துயில் - தூங்குபவன் போல்
- அமர்ந்த - சயனித்திருக்கும்
- வித்தினை - தன்னிடத்திலிருந்து ப்ரம்மாவும், சகல ஜகத்தும் முளைத்தெழுவதற்கு ஆதி விதையாக உள்ள சரண்யனை
- மெள்ளஎழுந்து - தங்கள் நித்திரையை விட்டு ஸாவதானமாக எழுந்து உட்கார்ந்து
- ஹரியென்ற - ஸ்ரீஹரி: ஸ்ரீஹரி: ஸ்ரீஹரி: என்று ஆஹ்நிஹங்கள் நியமித்த ப்ரகாரம் ஒலித்த
- பேரரவம் - பெரிய ஓசை
- உள்ளம் புகுந்து குளிர்ந்து - உன்னுடைய மனத்திலும் புகுந்து, மனம் முதலியன சாந்தியடைந்து
- பிள்ளாய் - குழந்தையே
- எழுந்திராய் - எழுந்திருக்கக்கடவை
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

ஐந்து பாடல்களோடு பாயிரம் முடிய, ஆறு முதல் பதினைந்து முடிய பத்துப்பாட்டுக்களால், பகவானை நினையாமல் ப்ரக்ருதி வசப் பட்டிருக்கும் சேதனர்களை அவர்கள் தூக்கத்திலிருந்து எழுப்புகிறாள்.

"ப்ராஹ்மே முகூர்த்தே உத்தாய". சேதனர்கள் ப்ராஹ்ம முகூர்த்தத்தில் தூக்கத்தை விட்டு எழுந்திருக்கவேண்டும் என்று ஆஹ்நிகம் விதிக்கிறது. சூர்யோதயத்திற்கு முந்திய 2 ஹோரை 5 நாழிகைப் பொழுதுக்குப் ப்ராஹ்ம முகூர்த்தம் என்று பெயர். அந்தப் பொழுது வந்து விட்டது என்பதற்கு மூன்று சாக்ஷிகள் காட்டுகிறாள்.

பறவைகளெல்லாம் தங்கள் பிறப்பின் பயனாகவே பொழுது-களை உணர்கின்றன. கோழி கூவி பொழுது விடிகிறது என்பதும், புலரும் பொழுதைப் புள்ளோசை காட்டுவதும் இயற்கையின் சாக்ஷியம். அதைப் பறவைகள் சப்தித்தன வென்றாள். கோயிலில் ஆராதனம் தொடக்கமாகுங் காலத்தில் சங்கு ஊதுவதும், திருச்சின்னமூதுவதும் உலக ப்ரசித்தமான சாக்ஷி. அந்த ஒலி உன் காதில் விழவில்லையா என்று இரண்டாவது சாக்ஷியத்தைக் கூறுகிறாள். முனிவர்கள் மனன சீலர்களாய் ஸாதன, ஸாத்ய பாதங்களில் இருப்பவர்கள். யோகியர்கள் ஸித்த பாதத்தில் தலைக்கட்டி விளங்குபவர்கள். இவர்களெல்லாருமே பகவத் குண சேஷ்டிதங்களை மனத்தில் கொண்டு, அவைகளை அனுபவித்தே

காலத்தைப் போக்குகிறவர்கள். அவர்கள் ஆஹ்நிக ப்ரகாரம் உஷக்காலத்தில் துயிலுணர்ந்து எழுந்ததை மூன்றாவது சாக்ஷியாகக்காட்டுகிறாள்.

'வித்து' என்னும் சொல்லினால் ஆதிகாரண வஸ்துவாகிய ஹரியென்ற நாமத்துக்கு உரியவராயும், ஓம் என்னும் வ்யாஹ்ருதி-க்குத் தெய்வமாயும் உள்ள பரமாத்மாவைக் குறிப்பிடுகிறாள்.

*பீஜம்மாம் ஸர்வ பூதானாம் வித்தி பார்த்த ஸனாதனம்*
*(கீதை-7-10)*
*அகம் பீஜப்ரத:பிதா (கீதை-14-4)*

என்ற கீதா வாக்கியங்களையும் நோக்குக. "காணப்படுவனவான ச்ருஷ்டிப் பொருள்களுக்கெல்லாம் என்னையே நித்யமான விதை என்று அர்ச்சுனா நீ அறி. நானே விதைகளைக் கொடுப்பவனும் ப்ரபுவுமாவேன்". என்னும் பொருளன. இந்த வித்து முக்-குணங்களும், ஐம்பெரும் பூதங்களும் தன்னைத் தாங்கும் விதையாகப் பாற்கடலில் முளைத்து வளர்ந்தது என்று உத்ப்-ரேக்ஷிக்கிறாள். இது பரிணாமமின்றி முளைப்பது, நித்ய வஸ்துவாயிருப்பது. ஸம்ஸாரக் கவலைகளினால் துன்பம் விளைந்து கொதித்திருக்கும் மனித உள்ளங்கள், உடல் குளிர்ந்திருக்கும் பனி நாளில், விடியற்காலத்தில், பகவான் நாமாக்களைச் சொன்னாலும், கேட்டாலும் பகவத் சேஷ்டிதங்களை நினைத்தாலும், அத்தகைய கொதித்த உள்ளங்களும் குளிர்ந்து விடுமாதலால் பகவானை பஜிப்போம். உன் உள்ளமும் ஹரியென்ற பேரரவம் கேட்டுக் குளிர்ந்திருக்குமே, எழுந்திரு என்கிறாள்.

## விசேஷக் குறிப்பு (Dr. VNV)

இது முதல் 15-ம் பாசுரம் முடிய பத்துப் பாசுரங்கள், பெருமாளை நினையாமல், பிரகிருதி வசப்பட்டு உறக்கத்தில் ஆழ்ந்து கிடப்பவரை எழுப்புகிற பாவம்.

இவற்றை 'ஸ்வாபதேசம்' என்கிற ரீதியில் பத்து ஆழ்வார்களைத் துயிலெழுப்புவதாக நிர்வஹிப்பது ஸம்ப்ரதாயம். மிகப் பரவலாக நாம் கேட்டுப்பழகியது. ஸ்ரீ NRK ஸ்வாமி வேறு கருத்தில் நிர்வாஹம் செய்வது காண்க.

பொழுது புலர்ந்தது என்று காட்டப் பல சான்றுகளை உரைத்து 'நீயும் எழுந்திரு' என்கிறாள். பள்ளியெழும் போது ஹரி நாம ஸ்மரண்ம் விஹிதம். அது பேரரவமாகக் கேட்கிறதென்கிறார்.



## பாசுரம் - 07

*கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத் தன், கலந்து*
*பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப்பெண்ணே,*
*காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து,*
*வாச நறுங்குழ லாய்ச்சியர், மத்தினால்*
*ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ,*
*நாயகப் பெண்பிள்ளாய் ! நாரா யணன்மூர்த்தி,*
*கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ,*
*தேசமுடையாய் ! திறவேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

> பேய்ப்பெண்ணே - சேதனவர்கத்தில் சேராமல் பேயைப்போல் விலகி நிற்கும் பெண்ணே
> கீசு கீசென்று - கீசு கீசென்னும் ஒலியைச் செய்துகொண்டு
> ஆனைச்சாத்தன் - பூவைகள்
> கலந்து - ஓசைகள் ஒன்றோடொன்று கலக்கும்படியாய்
> பேசின - சொற்களைச்சொன்ன
> எங்கும் - எல்லாவிடங்களிலும் பரவியிருக்கும்
> பேச்சரவம் - சொற்களின் ஒலி
> கேட்டிலையோ - நீ கேட்கவில்லையா
> காசும் - பொன்னணிகளும்
> பிறப்பும் - தானாகவே விளைந்த முத்து, பவளம், நவரத்னங்களால் ஆன ஆபரணங்களும்
> கலகலப்பு - ஒன்றோடொன்று உராய்ந்து ஒலிக்க
> கைபேர்த்து - கையை முன்னும் பின்னுமாக நீட்டியும் சுருக்கியும்
> வாச நறுங்குழல் - நன் மணத்தையுடைய கூந்தலையுடையவர்களான
> ஆய்ச்சியர் - இடைச்சியர்
> ஓசைபடுத்த - ஒலி செய்த
> தயிரரவம் - தயிர் கடையும் சப்தத்தை
> கேட்டிலையோ - கேட்கவில்லையோ
> நாயகப்பெண்பிள்ளாய் - முதன்மையான ஸ்த்ரீ லக்ஷணங்களை உடையவளே
> நாராயணன் மூர்த்தி - நாராயணனெடுத்த பலவித ஸ்வரூபங்களையும்
> கேசவனை - கேசவன் முதலான நாமங்களையும்
> பாடவும் - பிறர் பாடிக்கொண்டிருக்கும் போதும்

- கேட்டே கிடத்தியோ - கேட்டுக்கொண்டும் இன்னும் படுத்திருப்பாயோ
- தேசம் - தேஜஸை
- உடையாய் - உடையவளே
- திற - வீட்டைத் திறந்து வெளியே வா
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

தமிழ்நாட்டில் பேசும் பறவைகள் இரண்டு வகையாகும். அவை கிளியும், பூவையுமாகும். பூவை என்பது நாகணவாய்ப்புள் ளென்று செந்தமிழ்ச் சொல்லிலும், நார்த்தாம்பிள்ளை யென்று நாட்டுப் பேச்சிலும் வழங்குவது. அது கறுப்பும் மஞ்சளும் உள்ள இறக்கைகள் உடையதாய் குருவிகளைக் காட்டிலும் பெரிதாய் விடியற்காலத்தில் கீச் என்னும் சப்தத்தைச் செய்வது. அதனை ஆனைச்சாத்தன் என்று ஆண்டாள் கூறுகிறாள். கீச்சென்பது இந்த சப்தம். அதைக் கீசு என்று ஆண்டாள் நிர்வாஹம். கீசு என்னும் சொல்லை க+ஈசு என்று இரண்டு சொற்களாகப் பிரித்து ஈசாவாஸ்ய உபநிஷத்தால் நிர்ணயிக்கப்படும் தெய்வம் எவன் என்று விடியற்காலை இந்தப் பக்ஷிகள் கேட்பதாகவும், முனிவர்களும் யோகிகளும் ஹரியென்று பதில் சொல்வதாகவும் இந்தப் பாட்டின் கேள்வியையும் முன் பாட்டில் ஹரியென்ற பதிலையும் சேர்த்துப் பொருள் கொள்ளவேண்டுமென்று பெரியவர்கள் நிர்வாஹமாகும். வேதங்களின் இலக்கணப்படி, க+ஈசு இரண்டும் புணருங்கால், அ, தொக்கு, கீசு என்று சேருமென்பர். இந்தப் பாடலிலும் இந்தப் புள்ளின் சப்தத்தையும் ஆய்ச்சியர் தயிர் கடையும் ஓசையையும் மற்றவர்கள் ஏற்கனவே எழுந்து பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹங்களின் பெருமைகளைப் பாடுவதையும், நாம பஜனை செய்வதையும், இந்த ஓசைகளை யெல்லாம் கேட்டும் நீ விழித்துக் கொண்டே படுத்திருக்கின்றாயோ என்று கூறுகிறாள். இதன் பாவத்தையுணர 85.10-ம் குறள் நமக்குதவுகிறது.

*உலகத்தாருண்டென்பதில்லென்பான் வையத்*
*தலகையா வைக்கப்படும்*

இது புல்லறிவாண்மையென்னும் 85-வது அதிகாரத்தின் கடைசிக்குறள். இதன் பரிமேலழகருரை:

பதவுரை : உலகத்தார் உண்டு என்பது இல் என்பான் - உயர்ந்தோர் பலரும் உண்டென்பதோர் பொருளைத் தன் புல்லறிவால் இல்லையென்று சொல்லுவான்; வையத்து அலகை

ஆவைக்கப்படும் - மகனென்று கருதப்படான், வையத்து காணப்படுவதோர் பேயென்று கருதப்படும்.

கருத்து : கடவுளும், மறுபிறப்பும், இரு வினைப்பயனும் முதலாக அவர் உளவென்பன பலவேனுஞ் சாதிபற்றி உண்டென்பதென்றும், தானே வேண்டிய கூறலால், ஒப்பும் வடிவால் ஒவ்வாமையுமுடைமையின் தன் யாக்கை கரந்து மக்கள் யாக்கையுள் தோன்றுதல் வல்ல அலகையென்றுங் கூறினார்.

இந்தக் குறளின் பொருள் முழுவதையும் தன் சொல்லிலடக்கிப் பேய்ப் பெண்ணே என்று விளிக்கிறாள். இதன் பொருள் - மனிதர்க்கு, விடியற்காலையில் எழுந்து பகவானை பஜிப்பது நன்மை தரத்தக்கது. மேலும் மார்கழி மாதத்தில் இது இன்னும் விசேஷம் என்று உலகத்தாரும், முனிவர்களும், யோகிகளும் கூட இந்த பஜனையைச் செய்ய, நீ இப்படிப் படுத்துறங்குகிறாயே. இவைகளையெல்லாம் இல்லையென்று சொல்லும் பேயாகவல்லவா உன்னைக் கருதவேணும் என்கிறாள். பக்ஷிகளும் மனிதர்களும் எல்லோரும் எழுந்திருந்து அவரவர் தொழிலையும் பகவத் பஜனையும் செய்யும் போதும் நீ ஏன் இப்படி விழித்துக் கொண்டும் படுத்துக் கிடக்கிறாய். அங்க வைலக்ஷண்யங்களாலும் புத்தி பரிபக்குவத்தாலும் உன்னை நாயகப் பெண்பிள்ளை யென்று நாங்கள் கருதுகிறோமே. நீ பேய்ப் பெண்ணாகலாமா என்கிறாள்.

மூர்த்திகளைப் பாடுதல், பகவத் குண சேஷ்டிதங்களை கான கீர்த்தனம் பண்ணுதல். கேசவனைப் பாடுதல், கேசவன் முதலான நாமங்களால் நாம பஜனை செய்தல் இவையெல்லாம் செய்யத் தக்கபோது இது.

தேஜஸ் என்னும் வட சொல் தேசம் என்று தமிழில் மருவி வந்தது. இங்கே திறப்பது வீட்டுக்கதவோடு பகவத் சங்கீர்த்தனத்தின் பொருட்டு இவள் வாயும் ஆகும். இந்தப் பாட்டிலும் மூன்று சப்தங்கள் பேசப் பெறுகின்றன. முன் பாட்டில் சொன்ன சப்தங்களுக்கு அடுத்தபடியாக அநேகர் விழித்துக் கொண்டுவிட்ட பிறகு இந்த சப்தங்கள் எழுவது அறியக்கிடக்கிறது. நாயகப் பெண்பிள்ளையாக நாங்களெல்லாம் நினைத்திருந்த நீ இப்படிப் பேய்ப்பெண்ணாக மாறினையே யென்று அனுதாபம் காட்டுகிறாள்.

காசும் பிறப்பும் - காசு என்றது பொன்னாலான அணிகளை. பிறப்பு என்றது, சிப்பிகளில் தானாக விளையும் முத்துக்களையும், கடலில் செடிபோல் உண்டாகும் பவளங்களையும், மலைகளிலும், சுரங்கங்களிலும், தானாக விளையும் ரத்தினங்கள், வைரம், வைடூரியம், கோமேதகம், பச்சை முதலான இயற்கைப் பொருள்-

களையும் கொண்டு செய்த ஆபரணங்கள். அவை இன்றும் தமிழ் நாட்டில் வழங்குவன. ஆய்ச்சியர் குழலின் நறுமணம் செல்வ ஸம்ருத்தியையும், ஒழுக்கத்தையும் குறிக்கும். தயிரரவமும் கீசு என்பது போலவே இருக்கும்.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

'கீச் கீச்' என்று நார்த்தாம்பிள்ளை (கரிக்குருவி, பரத்வாஜ பக்ஷி என்பர்) கத்தும். அதைக் 'கீசு கீசு' என்கிறாள் பிராட்டி. 'க, ஈசு' என்று கொண்டு 'ஈசாவாஸ்யத்தால் நிர்ணயிக்கப்பெறும் தெய்வம் எவன்?' என்று இவை கேட்பதாகக் கொண்டு, அதற்கு விடை முன்பாசுரத்தில் 'ஹரி' என்று காட்டப்பெற்றதாக சுவையாக உரை வழங்குகிறார்.

திருக்குறள் (85.10) பேயென்று கூறுவது (அலகை) இங்கு பேய்பெண்ணே என்று வருகிறது. உலகினர் யாவரும் உண்டென்பதை இல்லையென்பாயோ? பறவைகள், மானிடம் எல்லாம் எழுந்து பகவத் பஜனை செய்கிற வேளையில் நீ உறங்குவதோ என்று கேட்கிறாள்.

காசு என்பதற்கு 'தங்கத்தாலானவை' என்றும், பிறப்பு என்பதற்கு இயற்கையில் தாமாகவே உண்டான முத்து, பவழம் போன்றவை கொண்டு செய்யப்பட்ட நகைகள் என்றும் நிர்வஹித்திருப்பதைக் காண்க.



## பாசுரம் - 8

*கீழ்வானம் வெள்ளென் றெருமை சிறுவீடு,*
*மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்,*
*போவான்போ கின்றாரைப் போகாமல் காத்து, உன்னைக்*
*கூவுவான் வந்துநின்றோம், கோது கலமுடைய*
*பாவாய்! எழுந்திராய் பாடிப் பறைகொண்டு,*
*மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய,*
*தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்,*
*ஆவாவென் றாராய்ந் தருளேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

> கீழ்வானம் - வானத்தில் கிழக்குப்பக்கம்

- வெள்ளென்று - வெண்ணிறம் உடையதாகி
- எருமை - எருமை
- சிறுவீடு - அப்போது முளைத்த மென்மையான சிறு புற்களை
- மேய்வான் - மேயும் பொருட்டு
- பரந்தன காண் - நாற்புறமும் பரவி மேய்கின்றன பார்
- மிக்குள்ள பிள்ளைகளும் - நீராட்டத்தில் ஈடுபடும் அதிகமான சிறுமியர்களும்
- போவான் - நீராட்டத்துக்குப் போகும் பொருட்டு போகின்றாரைப் போகாமல்
- காத்து - தடுத்து
- உன்னை, கூவுவான் - அழைத்துப்போகும் பொருட்டு
- வந்து நின்றோம் - நாங்கள் போவதையும் நிறுத்தி இங்கே வந்தோம்
- கோதுகலமுடைய - இந்த நீராட்டத்தில் மிகுந்த உற்சாகத்தையுடைய
- பாவாய் - பதுமைபோன்ற அழகுடைய பெண்ணே
- எழுந்திராய்
- மாவாய் பிளந்தானை - குதிரை வடிவாய்த் தன்னைக் கொல்லவந்த கேசி என்னும் அசுரனை வாயைப்பிளந்து கொன்றவனாகிய கண்ணனை
- மல்லரை மாட்டிய - சாணூர முஷ்டிகர்களை வதைத்த
- தேவாதி தேவனை - எல்லா தெய்வங்களும் தங்களுக்கே அதிதெய்வமாகப் போற்றப்படுபவனை
- நாம், பாடி, பறை கொண்டு - அவன் ரக்ஷணத்தை வாங்கிக்கொண்டு
- சென்று சேவித்தால் - போய்க் கும்பிட்டால்
- ஆ ஆ வென்று - சிறுமியர்க்கு இந்த பக்தி வந்ததே என்று ஆச்சர்யப்பட்டு
- ஆராய்ந்து - நம் பக்தியை நன்கு பரிசீலனை செய்து
- அருள் - அருளக்கடவது
- ஏல் ஓர் எம்பாவாய்

## கருத்துரை

இந்த மூன்றாவது பாட்டில் இன்னும் கொஞ்சம் பொழுது புலர்ந்து கிழக்கு வெளுத்துவிட்டதைச் சொல்கிறாள். எருமைகளெல்லாம் கொட்டிலிலிருந்து அவிழ்த்து விடப்பட்டு புற்றரையில் பரவலாக மேய்கின்றன. இன்னும் அனேக சிறுமியர்களும் நீராட்டத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்களையும் நிறுத்தி, நாங்களும் போகாமல் நின்று உன்னை அழைத்துப் போகும்படி கூவுகிறோம்.

ஏனென்றால் இந்த நோன்பில் நீ மிகவும் உற்சாகமுடையவளாக இருக்கிறாய்.

'சிறுவீடு' என்னும் சொல் நேற்று மேய்ந்த புல்லில் ராத்திரி அப்போது விட்ட தளிர். பெரியாழ்வார் ஆத்மா 'எடுக்கும்' சரீரத்திற்கு 'ஏடு' (எடு - ஏடு) என்று பெயர் சொல்லி, "ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம்" என்று பாடினார். அவர் மகள் அவரை அடியொற்றிப் புல் 'விட்ட' தளிரை (விடு என்னும் பகுதியடியாக விடு-வீடு) வீடு என்று பாடுகிறாள்.

'கோதுகலம்' - குதூகலம் என்னும் வடமொழியின் சிதைவு. பதுமைகளுக்குப் பாவைகளென்று பெயர். பதுமைகளை அமைப்பவர் அவைகளை மிகுந்த அழகுடையவைகளாகவே அமைப்பார். ஆதலின், அழகுடைய பெண்களை 'பதுமை போல் இருக்கிறார்கள்' என்று சொல்வது தமிழ் மரபு. எனவே குதூகலமும் அழகும் நிறைந்த இப்பெண்ணை 'கோதுகலமுடைய பாவாய்' என்றழைக்கிறாள்.

கண்ணனுடைய பக்தியில் ஆண்டாள் நிலை கொண்டவள். ஆனதால் திருப்பாவை முழுதிலுமே கண்ணனுடைய எல்லா சேஷ்டிதங்களும் நிரம்பியிருத்தல் கருதத்தக்கது. பெரியாழ்வாரும் தன் திருமொழியில் கண்ணனுக்கே பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார். ஆனதால் கண்ணன் இவளுக்குப் பிதுரார்ஜித சொத்துமாவான். அவன் 'தான் தேவாதி தேவன்' என்று கீதையில் பல இடங்களிலும் பரக்கப் பேசியிருப்பதை சங்க்ரகித்து இங்கே அவனை தேவாதி தேவன் என்கிறாள். அவனை சேவிக்கப் போவதற்குமுன் அவனுடைய குண, ரூப சேஷ்டிதங்களைப்பாடி, அவனுடைய லக்ஷணத்தை நாம் அறிந்ததன் பின், அவனை நாம் சென்று சேவிப்போம் என்கிறாள். பக்தியின் பூர்த்திக்கும் மனதின் பரிபக்குவத்திற்கும் ஹேதுவான அனுஷ்டானத்தை முன்னால் அனுஷ்டித்துப், பின்னால் அவனை சேவித்தல் பொருந்தும் என்று வரிசைப் படுத்திக் காட்டுகிறாள்.

ஆ! ஆ!! என்பது ஆச்சர்யக்குறி. இப்படித் தன்னைப் பாடித் தன்னுடைய ரக்ஷண சங்கல்பத்தை முன்னமே பெற்றுக்கொண்டு விட்டவர்களை சரண்யனே எதிர்பார்த்திருந்து, இவர்கள் சென்று சேவித்தவுடன் ஆச்சர்யமடைந்து, அருள் புரிவான் என்றவாறு.

அருள் புரிய ஆராய்தலாவது, நாம் மன, மொழி, செயல்களால் சுத்தர்களாக, அவனையன்றி நமக்குத் தெய்வமில்லை என்ற ஒரே நம்பிக்கையுடன் இருக்கும் நிலையைச் சரண்யன் தேருதல்.

**விசேஷக் குறிப்பு (Dr. VNV)**

(பூமியில்) எடுத்த சரீரம் - ஏடு.

(அப்போது) விட்ட தளிர் - வீடு. எருமைகள் ராத்திரி மேய்ந்த புல்லில் புதிதாய் விட்ட சிறு தளிரை 'சிறுவீடு' என்று விளக்குகிறார்.

ஆராய்ந்து - 'தம் ரக்ஷணஸங்கல்பத்தை முன்னமே பெற்றவர்களான இவர்கள் வந்து நிற்கவும், ஆச்சர்யத்துடன் அருள்புரிய ஆராய்கின்றான் !' என்று ஸ்வாமி சொல்கிறார்.

நாம் மனம், மொழி, மெய் மூன்றாலும் அவனையன்றி ஒரு தெய்வமில்லை என்று ஒரே நம்பிக்கை யிலிருத்தலைக் கண்டு, சரண்யன் திருவுள்ளவுகப்பு அடைகின்றான் ! அவன் செய்கிற ஆராய்ச்சி இங்ஙனம் ! நமக்கு இது புரியவேண்டும் !



## பாசுரம் - 9

*தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரியத்,*
*தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்,*
*மாமான் மகளே ! மணிக்கதவம் தாள்திறவாய்,*
*மாமீர் ! அவளை யெழுப்பீரோ? உன்மகள்தான்,*
*ஊமையோ அன்றிச் செவிடோ அனந்தலோ,*
*ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ,*
*மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று,*
*நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய்.*

**பதவுரை**

- தூ - பரிசுத்தமானதும்
- மணி - அழகானதுமான
- மாடத்து - இருக்கையில்
- சுற்றும் - நாற்புறமும்
- விளக்கெரிய - விளக்குகள் எரிந்துகொண்டே இருக்கவும்
- தூபம் - வாசனைத் திரவியங்களாலான புகை
- கமழ - மணம் வீச
- துயில் - தூங்கும்
- அணை மேல் - படுக்கையின் மேல்
- கண் வளரும் - தூங்கிக்கொண்டிருக்கும்
- மாமான் மகளே - இன்னும் மணமாகாத பெண்ணே

- மணிக்கதவம் - மணிகள் கட்டின கதவை
- தாள் - தாழ்ப்பாளை
- திறவாய் - கழற்று
- மாமீர் - அவளுடைய தாய்மார்களே
- அவளை - அவளை
- மாமாயன் - மஹா மாயங்களைச் செய்து நமது ஹ்ருதயங்களையெல்லாம் அபகரித்தவன்
- மாதவன் - லக்ஷ்மிக்குப் பர்த்தாவாக உள்ளவன்
- வைகுந்தன் - வைகுண்ட பதியாகிய நாராயணன்
- என்று - என்று சொல்லியும்
- என்று - இதுபோல் அவனது இதர நாமங்களைச் சொல்லியும்
- நாமம் பலவும் - இப்படி அவனுடைய எல்லாப் பெயர்களையும்
- நவின்று - சொல்லி
- எழுப்பீரோ - எழுப்பமாட்டீர்களோ
- உம் - உம்முடைய
- மகள் தான் - மகளாகிய இவள்
- ஊமையோ - வாய் பேச முடியாததால் நாங்கள் கூவுதற்குப் பதிலளிக்காமலிருக்கிறாளோ
- அன்றி - இல்லாவிட்டால்
- செவிடோ - காது கேளாதோ
- அனந்தலோ - மயக்கமோ
- ஏமப்பெருந்துயில் - யோக சாஸ்த்ரங்களில் மிக உயர்ந்ததாக சொல்லியிருக்கிற யோகத்தின் 8-வது அங்கமான நிர்விகல்ப சமாதி நிஷ்டையில் இருக்கிறாளோ
- மந்திரப்பட்டாளோ - யாரேனும் மந்திர சக்தியில் அவளை மறக்கச்செய்ய, அவளும் அந்த மந்திர சக்தியில் அகப்பட்டுக்கொண்டாளோ
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

இந்தப் பாட்டின் தலைவி ஒரு பெரிய செல்வந்தனுடைய பெண். இவள் தூங்கும் அறையின் வர்ணனை அதைக் காட்டும். ஏற்கனவே கண்ணனுடைய ஜாரக்ருத்ய வித்தைகளில் ஈடுபட்டவள். இதனால் இவனோடு கூட நாம் செய்யும் மார்கழி நீராட்டத்தில் மிகவும் உத்யுக்தையாகக் கலந்து கொள்ளக்கூடியவள். நன்றாகப் பொழுது புலர்ந்தும் கூட இவள் இன்னும் தூங்குகிறாள்.

இங்கே 'ஊமையோ' என்பது மௌன விரதம் இருக்கிறாளோ என்றும் பொருள் கூறத்தக்கது. 'செவிடோ' என்பதும் யோக சாஸ்த்ரத்திலுள்ள ப்ரத்யாஹார க்ரமப்படி சுரோத்திரேந்திரியத்தின் சக்தியை உள்ளடக்கி இருக்கிறாளோ என்றபடி. இங்கே 'அனந்தல்'

என்பது "தானே தானே யானாலும்" என்று நம்மாழ்வார் நிர்வஹித்தபடி.

*யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத் ஆத்மத்ருப்தஸ்ச மாநவ:*
*ஆத்மந்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே:*
*(கீதை-3-17)*

என்று கண்ணன் கீதையில் சொன்னபடி ஆத்மநிஷ்டையாக ஜகத்தை மறந்திருக்கிறாளோ; 'மந்திரப்பட்டாளோ' - இது ஒருவர் தன்னுடைய ஆத்மசக்தியின் அதிகதையால், குறைந்த ஆத்ம சக்தியுள்ளவர்களைத் தன் வசப்படுத்தி, அப்படி வசப்பட்டவர் தமக்கென்று ஒரு நினைவும், சொல்லும் கர்மாவும், இல்லாதவராக, இவர் நியமித்தபடியே ஆடுதல். மாமாயன் - அவன்; மாயையாலே மயங்கினவள் இவள்; என்பதனால் 'மாமாயன்' என்று திருநாமத்தைச் சொல்லுங்கள். 'மாதவன்', ஸ்ரீய:பதி என்று 'நாமம் பலவும்' - சஹஸ்ரநாமம் சொல்லி அவளை எழுப்புங்கள்.

## *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

இது ஒரு பெரிய செல்வச் சீமான் மகளை எழுப்புவது. அவள் கண்ணனின் விடத்தனத்தில் ஈடுபட்டு மயங்கியவள். ஊமை, செவிடு, அனந்தல், மந்திரப்பட்டாள் - என்றவற்றிற்கு யோக சாஸ்த்ர ரீதியில் விளக்கம் செய்துள்ளதைக் காண்க.



## பாசுரம் - 10

***நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்,***
***மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்,***
***நாற்றத் துழாய்முடி நாரா யணன், நம்மால்***
***போற்றப் பறைதரும் புண்ணியனால், பண்டொருநாள்***
***கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகருணனும்,***
***தோற்று முனக்கே பெருந்துயில்தான் தந்தானோ,***
***ஆற்ற அனந்த லுடையாய்! அருங்கலமே,***
***தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய்.***

### பதவுரை

- நோற்று - தாந்திரிக நூல்களும், சமய நூல்களும் சொல்லிய வழியில் அனுஷ்டானங்களைச்செய்து

- சுவர்க்கம் புகுகின்ற - புண்ணிய லோகத்துக்குச் செல்ல யத்தனிக்கும்
- அம்மனாய் - எல்லோருடைய மதிப்புக்கும் உரியவளே
- வாசல் - தங்கள் லக்ஷியத்தை
- திறவாதார் - பிறருக்குக் காட்டாதவர்
- மாற்றமும் - பதிலும்
- தாராரோ ? - சொல்லமாட்டார்களோ ?
- நம்மால் போற்ற - நாம் வாய் திறந்து துதிக்க
- பறை - ரக்ஷணத்தை
- தரும் - நமக்குக் கொடுக்கும்
- புண்ணியன் - புண்ணியத்தைஅடைபவன்
- நாற்ற - நன்மணம் வீசும்
- துழாய் - திருத்துழாயை
- முடி - திருமுடியிலே - தலை மாலையாக அணிந்த
- நாராயணன் - நாராயணனானவன்
- பண்டு - முற்காலத்தில்
- ஒரு நாள் - ஒரு நல்ல தினத்தில்
- கூற்றத்தின் வாய் - சாவினிடத்தில்வீழ்ந்த கும்பகருணன்
- உனக்குத் தோற்றே - பகவானுடைய வைமுக்யத்தில் உனக்குத் தோற்றுப்போய்
- பெருந்துயில் - பகவானையே எண்ணாமலிருக்கும் தூக்கத்தை உனக்கேதான் தந்தானோ
- ஆற்ற - மிக அதிகமான
- அனந்தலுடையாய் - தேவதாந்திரங்களில் மயக்கமுடையவளே
- அருங்கலமே - நாராயண பக்தி பண்ணுவதற்கே மிக ஏற்றதான பாத்திரமே
- தேற்றமாய் - நச்வரமான அல்ப பலங்களையும் அநித்யமான ஸுகங்களையும் கொடுத்து, தேஹாவஸானே (மரணத்திற்குப்பின்) அழியும் ஸ்வர்க்கத்துக்குக் கொண்டு சேர்க்கும் மார்கங்களை விட்டு, மோக்ஷ மார்கத்தைத் தெளிந்து
- வந்து - இந்த நோன்புக்கு வந்து சேர்ந்து உன் வீட்டுக்கதவையும் பகவன் நாம ஸங்கீர்த்தனம் பண்ணும் உன் வாயையும் திற.

## கருத்துரை

மேற்சொன்ன நான்கு பாட்டுக்களிலும் பகவததீனமாக வர்த்திப்பவர்களை நாராயண பஜனமாகிய நோன்புக்கு அழைக்கிறாள். இந்தப் பாட்டில் குறிப்பிடுகிற பெண், தாந்த்ரிகமான முறைகளாலும், தேவதாந்தர நிஷ்டையாலும், ஸ்வர்காதி போகங்களை உயர்வாக

மதித்து, அவைகளை அடைவதற்கு, அததற்கேற்பட்ட மார்கங்களில் சரித்துக் (நடந்து) கொண்டிருப்பவள். இவளுடைய தூக்கம் என்று சொல்லுவது பகவானுக்கு உன்முகமாயில்லாமல், அஷ்டாங்க, ஹட, யோகாதி மார்கங்களில் தன்னுடைய மனஸு, புத்தி, சக்திகளை யபிவிருத்தி செய்து கொண்டும், தேவதாந்தர நிஷ்டையில் பாடு-பட்டும் வருபவள். அவளை நோக்கி மிக மரியாதையாக 'அம்மனாய்' என்றழைத்து 'சொர்காதி போகங்களை அடைய நீங்கள் விரதம் பூண்டு நோற்கின்றீர்களல்லவா' என்று தொடங்குகிறாள்.

'மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்' - நீங்கள் வாயில் கதவைத் திறக்க வேண்டாம், வாய் திறந்தாவது பதில் சொல்லக்கூடாதோ என்று கேட்கிறாள். முன் அம்மனாய் என்று அழைத்தவளைப் பின்னர் நன்கலனே என்றழைக்கிறாள். கலன் - பாத்திரம், தகுதி உடைமை, ஸத்பாத்ரம் என்னும் வடமொழிச் சொல்லின் தமிழாக்கம் நன்கலம். இதுவரையில் இவள் செய்து வந்திருக்கும் அனுஷ்டானங்களினாலும், இவளுக்குக் கை வந்திருக்கும் நோன்புகளை நோற்கும் சக்தியினாலும், நாராயண பஜனமாகிய இந்த மார்கழி நோன்பை நோற்க "நீ நல்ல பாத்ரமாயிற்றே" யென்று கூப்பிடுகிறாள்.

அதையடுத்து வாசனையோடு கூடிய திருத்துழாய் மாலையைத் திருமுடியில் அணிந்தவனாகிய ஸ்ரீமந் நாராயணன், நாம் வாயைத் திறந்து அவனைத் துதித்தால் நம்மை நிச்சயமாக ரக்ஷிப்பான் என்பதை அவளுக்கு வற்புறுத்துகிறாள். அவன் உலகத்துக்கு எல்லா புண்ணியத்தையும் கொடுப்பவன். நம்மை யெல்லாம் காப்பாற்றி அதனால் புண்ணியத்தையும் அடைபவன் என்று உலகத்தார் நோக்காக இரண்டு படிகளிலும் பொருள் கொள்ளும்படி 'புண்ணியனால்' என்கிறாள்.

"ப்ரமாதம் யமினாம் மதி:" மாயையின் சேஷ்டையானது யமம் என்ற படியில் எல்லா இந்திரியங்களையும் அடக்கி ஜயித்தவனுக்கும் மயக்கத்தையுண்டாக்குவது என்று ஸ்ரீபாகவதம் கூறுகிறது. அதை மனத்தில் கொண்டு இவள் நெடுங்காலமாக நாராயண பஜனத்தை விட்டு வேறு வழியில் முயற்சி செய்து கொண்டிருப்பதைச் சுட்டிக் காட்டி, அதைக் கும்பகருணன் தூக்கம் போன்ற பெருந் தூக்கம் என்று அறிவுறுத்தி, அந்தத் தூக்கத்தை விட்டெழுந்து, அந்த மயக்கத்தையும் ஒழித்து, நாராயண பஜனத்துக்கு வாவென்கிறாள். நீ இதுவரையில் செய்து வந்த காரியங்களினால் ஒன்றும் தோஷ மில்லை. அவைகளால் நீ அடைந்திருக்கிற பயன்களெல்லாம் நாராயண பஜனத்துக்கு உன்னை மிகவும் தகுதி யுடையவளாக்கி விட்டன என்றும் போற்றுகிறாள்.

'நாற்றத்துழாய் முடி' யென்ற தொடக்கம், திருவடி முதல் திருமுடிவரை நாராயணனுடைய ஒவ்வொரு அங்கமும் ஆச்ரிதர்களுக்கு எப்படி ஸேவ்யமானமாய், அனுபாவ்யமாய் இருக்கிறது என்ற பொருளில் ப்ரயோகம். திருவடி சர்வ லோகத்துக்கும் சரணம். திரிவிக்ரமாவதாரத்தில் இந்த உலகத்தை யளந்து ஆஸுர ஸம்பத்தியிலிருந்து தெய்வ ஸம்பத்திக்கு வாங்கிக் கொடுத்ததையும் இது போல் மற்ற 15 பெருமைகளையும் ஸ்ரீ தேசிகப்ரபந்தம், அதிகார ஸங்க்ரஹம் 51-வது பாசுரத்திலும் நவமணிமாலை முதற் பாசுரத்திலும் கண்டுகொள்க. பாண்பெருமாள் அருளிச்செய்த அமலனாதிபிரானின் அடிமுதல் முடிவரை எல்லாவங்கங்களையும் அவர் வர்ணித்து அனுபவித்திருக்குந் திறமும் காண்க.

'மாற்றமும் தாராரோ' யென்று இவளைச்சொல்லி, நம்மால் பெருமாள் 'போற்றப் பறை தரும் புண்ணியன்' என்று பேசின அழகு கவனிக்கத்தக்கது. ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களை அடக்குவதற்கு யோக சாஸ்த்ரம் 'யமம்' என்ற தலைப்பின் கீழும், 'ப்ரத்யாகாரம்' என்ற தலைப்பின் கீழும், பலவித மார்கங்களையும் யோசனைகளையும் சொல்லிப் போவன. அவையெல்லாம் தர்மங்களாகவும், அனுஷ்டேயங்களாகவும் வேத மதத்தைப் பின்பற்றுகிற எல்லா சாதுக்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டவை. ஆனால் மௌன விரதத்தைக் கைக்கொண்டு அனுஷ்டிப் பவர்களுக்கும் வாயைத் திறந்து நாராயண பஜனம் பண்ணுவது அவசியம் என்கிறாள். இதற்கு ஆதரவுகள், "நாமங்கற்ற ஆவலிப்புடைமை", யென்று திருமாலை முதற்பாட்டிலும், "சொல்லினால் தொடர்ச்சி நீ" யென்று திருச்சந்த விருத்தம் 71-வது பாடலிலும் "துஞ்சும் போதழைமின், துயரிலீர் சொல்லிலும் நன்றாம்" என்று பெரியதிருமொழி (1-10) பாசுரத்திலும், "வாயினாற் பாடி" என்று ஆண்டாள் ஐந்தாவது பாசுரத்திலும், ஸ்நானம், ஸந்த்யா, ஜபம், ஹோமம் என்று ஆஹ்நிகத்தில் ஜபத்தைச் சேர்த்தும் "பாவின் இன்னிசை பாடித்திரிவனே" என்று மதுர கவிகள் வாக்கிலும், இன்னும் அனேக ப்ரமாணங்களாலும், இந்த சம்ப்ரதாயத்துக்கு வாயைத் திறந்து பகவத் குணங்களைப் பாடுவது எவ்வளவு அவசியமானது என்பது பேசப் பெற்றிருக்கிறது. மௌனமாகப் பேசாதிருத்தல் லௌகீக விஷயங்களில் புத்தி சென்று, அதைப் பேசியும் கேட்டும் இந்திரிய சக்தியை வீண் செலவிடாமல் இருக்கும் பொருட்டு ஆகும். அதே பேசும் பொறியைச் சும்மா வைத்துக் கொண்டால் நம்மை அறியாமல் மனஸும் புத்தியும் லௌகீக விஷயங்களில் செல்லக்கூடும். அதை பகவததீனமாக்கிச் சரண்யனுடைய குண சேஷ்டிதங்களை வாயைத்திறந்து பாடியும் சொல்லியும் அனுபவித்தால் மனம் உலக விஷயங்களில் செல்லாது. மேலும் மனதை அடக்குவதற்கு

யோகசாஸ்த்ரம் விதித்த மௌனத்தின் காரியமும் சாதிக்கப்பெற்று பகவான் முக உல்லாஸமும் கை கூடுவதால் இந்தப் பேச்சை மகா மௌனம் என்றே சொல்லத்தகும். இந்த சிஷ்டாசாரத்தின் தூய்மை சாஸ்த்ரங்கள் அறுதியிட்ட முடிந்த பொருள்களை இன்னும் விசேஷ-மாக சோதித்தும் செய்வதாதலின் நாற்றத்துழாய்முடி நாராயணன் உன்னால் பாடப் பெறும் போது உன்னுடைய மௌன விரதமும் கெடாது. அது மகா மௌனமாகும்.

அதுபோல் அவன் புகழை நாங்கள் பாடி நீ கேட்கும்போது நீ, ச்ரோத்ர இந்திரியத்தையடக்கிக் காது கேட்காதவளாக ஆகி-யிருக்கிறாயே அதுவும், பகவத் கீர்த்தனங்களைக் கேட்கும்போது அந்த நிஷ்டையின் பெருமையையும் அதிகரிக்கச் செய்யும்.

'தேற்றமாய் வந்து' என்றதனால், இந்த பஜனைக்கு நீ எங்க-ளோடு சேரும்போதே உன் மனம் மயக்கமற்றுத் தெளிவடையும். நீ நிர்விகல்ப சமாதியில் பகவானையனுபவித்துக் கொண்டிருந்தாலும், அதிலிருந்து ச்யுதமாகி (இறங்கி) இந்த பஜனத்தில் கலந்து கொள்ளு. இதன் பெருமை அதைக்காட்டிலும் எவ்வளவு அதிக மென்பதை நீயுணர்வாய். இதில் சேர்ந்து கொள்ள நீ நினைத்தவுடன் யாரேனும் மந்திர சக்தியால் உன்னை மயக்கியிருந்தாலும், அந்த க்ஷுத்ர ப்ரயோகங்களெல்லாம் உடனே உன்னை விட்டு விலகும். விஷ்ணுவின் பெருமைகளைக் கேட்பதும், தானே பாடுவதும், நாராயணனுடைய ஆராதனத்தின் ஒன்பது படிகளில், முதலிரண்டு படிகளாக, "ச்ரவணம், கீர்த்தனம் விஷ்ணோ:" என்று ஸ்ரீபாகவதம் பேசும். அதனால் கேட்பதையும் பாடுவதையும் நீ விடாதேயென்று வற்புறுத்த,'ஊமையோ அன்றிச் செவிடோ'யென்று கேட்கிறாள்.

ஆக சரீர சக்தி அபிவிருத்தியும், தேவதாந்தர நிஷ்டையுமான ஆசாரங்களை உடையவர்களுக்கும் நாராயண பஜனத்துக்கு நல்ல தகுதி அமையுமென்றும், அந்தந்த அனுஷ்டானங்களையும் இது மேன்மைப்படுத்திச் சிறக்கச்செய்யுமேயொழிய, அனுஷ்டானபங்கம் ஏற்படாதென்றும், இந்த நோன்பில் அன்வயித்துப் பயன் கண்ட-வுடன், இதுவே உத்தமோத்தம மார்க்கம் என்பது வெளியாகும் என்றும் ஸர்வஜன சாமான்யத்துக்கும் (அனைத்து மக்களுக்கும்) விசேஷமாக, வேறு வழியில் நடப்பவர்களுக்கும் எடுத்துக் காட்டி வற்புறுத்துகிறாள். ஸ்வர்கானுபவத்தின் பெருமையைப் பெரிய திருமடல் 19 முதல் 37 கண்ணிகளில் கண்டுகொள்க. சேதனன் பல்வகைப் பெரியோர்களால் விதிக்கப்பட்ட மார்கங்களில் எது உத்த மோத்தமமானது, ஸாதுக்ராஹ்யமானது என்று தெரிந்தெடுத்து அந்த மார்க்கத்தை யனுஷ்டிக்க வேணும். அவனுடைய அறிவு முதலில் அதற்கு உதவவேண்டும். தன்னுடைய அறிவு மாறன்

சடகோபனுடைய திருவடிகளில் படிந்து, அதனால் தான் உஜ்ஜீவித்-ததாய் பாடியருளிய மதுரகவிகளின் கண்ணிநுண்சிறுத்தாம்பும், சடகோபரந்தாதியில் "அறிவேயுன்னைத் தொழுதேன்" என்று கம்பன் பாடியுள்ள பாடலும் இங்கே அனுஸந்தேயங்கள்.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

முன் நான்கு பாட்டுக்களிலும் பகவதநீனரை எழுப்பினாள். இதில் தாந்த்ரிக - தேவதாந்தர லயிப்பில் ஸ்வர்காதிகளுக்காகப் பாடுபடுபவரை எழுப்புகிறாள் என்றபடி.

நல்ல யமாதி நிஷ்டை. ஆனால் மாயைக்கு அடிமை. அவள் பகவந்-விமுகை. இந்த குணத்தில் கும்பகருணனை வென்று விட்ட-வளாம் ! அதற்கு ஈடாக இவளுக்கு அவன் உறக்கத்தைக் கொடுத்துவிட்டானாம் ! என ஹாஸ்ய ரஸம் தோன்ற விளக்குகிறார். அருங்கலம் - நல்ல பாத்திரம், நன்கலன். நாராயண பஜனம் செய்ய நல்ல தகுதிகள் பெற்றவள். திறவேல் - கதவைத்திற. வாயையும் திற. பாடு - பெருமாள் புகழைப்பாடு - நல்ல யோக்யதை இருக்கிறதே !



## பாசுரம் - 11

*கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து,*
*செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்,*
*குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே,*
*புற்றர வல்குற் புனமயிலே! போதராய்,*
*சுற்றத்துத் தோழிமா ரெல்லாரும் வந்து, நின்*
*முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்,*
*சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டி, நீ*
*எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- கற்று - கன்றோடு கூடின
- கறவைக்கணங்கள் - கறக்கும் மாடுகளின் கூட்டங்கள்
- பலகறந்து - பலவற்றை தினமும் கறந்து
- செற்றார் - தங்கள்மேல் படையெடுத்துவந்தவருடைய
- திறல் - வலிமையானது

- அழிய - அழிந்து போகும்படி
- சென்று - அவர்களை எதிர்த்துப்போய்
- செருச்செய்யும் - போர்புரியும்
- ஒன்று - ஒரு சிறிதும்
- குற்றம் - தோஷம் (பாபம்) இல்லாத
- கோவலர்தம் - இடைஜாதியில் பிறந்த
- பொற்கொடியே - தங்கக்கொடி போன்றவளே
- புற்று - புற்றில் நுழையும்
- அரவு - பாம்பு போன்ற
- அல்குல் - குஹ்ய பாகத்தையுடையவளும்
- புனமயிலே - புனங்களில் திரியும் மயில் போன்ற சாயல் உள்ளவளே
- போதராய் - வாராய்
- சுற்றத்து - நம் பந்துக்களான
- தோழிமார் எல்லாரும் வந்து
- உன் முற்றம் - கூடுமிடத்தில்
- புகுந்து
- முகில் வண்ணன் பேர் பாட - மேக சியாமளனாகிய கண்ணன் திருநாமங்களை சங்கீர்த்தனம் செய்ய
- சிற்றாதே பேசாதே - அசையாமலும் வாய் திறந்து பேசாமலும்
- செல்வ - செல்வமாக வளரும்
- பெண்டு - பெண்தன்மைக்கு
- ஆட்டி - உரியவளே
- எற்றுக்கு - எந்தப் பயனைக்கருதி
- உறங்கும் பொருள் - நீ தூங்கும் நிஷ்டை
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

இடையர்களெல்லாம் பசுக்களையும் எருமைகளையும் தினம் இரண்டு வேளை கறக்கும் தொழிலுடையவர்கள். அவைகளைக் கறக்கப் புகும்போது கன்றுகளை நினைத்துத் தயையின் மிகுதி யினால் அவைகளுக்குப் போதுமானபாலை விட்டுக் கொஞ்சம் கறந்ததும் நிறுத்தி விடுவார்கள். கறவை என்றது பசு, எருமை இரண்டுக்கும் பொதுச்சொல். அவர்கள் இவைகளைக் கூட்டம் கூட்டமாகக் கறக்கிறபடியால் அவர்களுக்கும் ஏராளமான பால் கிடைக்கிறது. கன்றுகளுக்கும் பால் கிடைக்கிறது. (கன்று, கறவை என்ற இரண்டும் சேரும்போது மென் தொடர் வன் தொடராக மாறிற்று.) இங்கு கோவலர் மனத்திலுள்ள இரக்கம், தயை இவைகளின் பண்பாடு பற்றிக் கூறலாயிற்று.

இனி இவர்கள் வீரத்தைப் பேசுகிறாள். இவர்களுடைய செல்வத்தில் பொறாமைப்பட்டு, அவைகளைக் கவர்ந்து கொள்ள வேண்டும் என்று இவர்கள் மேல் படையெடுத்து வருகிறவர்களை இவர்கள் எதிர்த்து, யுத்தம் செய்யும் திறமையைச் சொல்லுகிறாள். அப்படிப் படையெடுத்தவர்களை, அவர்களுடைய வல்லமை யெல்லாம் முற்றிலும் அழிந்துபோகும் படியாகக், கோவலர்கள் வீரத்தால் எதிர்த்து, வென்று, இனி இவர்கள் இருக்கும் திக்கையே அவர்கள் பார்க்கவும், நினைக்கவும் கூடாமல், விரட்டிவிடுகிறார்கள் என்பதால் இவர்கள் வீரத்தின் பெருமையைக் கூறித் தலைக் கட்டுகிறாள்.

பிறர் பொருளைக் கவர அவர் மேல் படையெடுத்துச் செல்லு-தலை 'வெட்சித்திணை' என்றும், எதிர்த்துப் போர் செய்தலை 'வஞ்சித்திணை' என்றும், வென்றவர் வாகை மாலையை வெற்றி மாலையாகச் சூடி வருதலை 'வாகைத்திணை' யென்றும் ஐயன் ஆரிதனார் இயற்றிய புறப்பொருள் வெண்பா மாலை கூறும்.

'எற்றுக்குறங்கும் பொருள்' என்பது இத்தகைய தயையும்' வீரமும் உள்ள குலத்தில் பிறந்த உனக்கு, உன்னையும் அழைத்துக் கொண்டு போகவேண்டும் என்று எல்லோருமாக வந்திருக்கும் எங்களிடம் தயையில்லையா? நோன்பை நோற்கவேண்டும் என்ற வீரம் உன்னிடம் இல்லையா? கண்ணன் நமக்கு பர்த்தா. போகத்தில் மயங்குபவனுக்குப் புற்றரவல்குலும், உலகத்தார் உத்தமி யென்று போற்றுவதற்குப் புனமயிலின் சாயலும் ஒருங்கே அமைந்துள்ளனவே, குலத்தின் பெருமையோடு கூடி உன் அங்க வைலக்ஷண்யத்தின் பெருமையும் இப்படி அமைந்திருக்கிறது. நீ எங்களுக்கு ஒரு உத்தமமான தோழி அல்லவா? உன் உறக்கம் தயையை யொட்டியா? வீரத்தை யொட்டியா? என்று கேட்பவள் 'எற்றுக்கு' என்கிறாள்.

'பொருள்' என்ற சொல்லுக்குப் 'ப்ரயோஜனம்' என்று பாவம். "உனக்குத் தயையும் வீரமும் இல்லாவிடில் உன் தூக்கத்துக்கு ப்ரயோஜனம் என்ன? நாங்கள் அழைப்பதால் உனக்கு ஏதேனும் பயன் உண்டு என்பதற்கு, உடம்பைப் புரட்டியாவது காட்டலாகாதா" என்று சொல்வது மிக முக்கியமாகக் கவனிக்கவேண்டியது. "சோம்பலை ஒழித்து, பகவதாராதனத்தில் ஈடுபடுவதற்கு ஆர்த்தியும் பிரதிபத்தியும் வேண்டும் என்று சாஸ்த்ரங்கள் கூறும் லக்ஷணங்களை உறுதிப்படுத்த நீ உடம்பைக் கூட அசைத்துக் கொடுக்க மாட்டேன் என்கிறாயே; எங்கள் கார்யத்துக்காக உன்னை ஒன்றும் செய்யச் சொல்லவில்லை. முகில்வண்ணன் பேர் பாடுவது உன் வாழ்வுக்கும் ஆத்மாவுக்கும் ச்ரேயஸ்ஸைக் கொடுக்கும்"

என்று கூறி, "இந்த தூக்கமும் சோம்பேறித்தனமும் அதைக் கொடுக்குமா? எற்றுக்குறங்கும் பொருள்" என்று இடித்துக் காட்டுகிறாள்.

'எற்றுக்கு உறங்கும் பொருள்' என்பதைத் தனித்துப் பொருள் கொண்டு, 'விதிவிஹிதமான கர்மாக்களைச் செய்யாமல் தூங்குவது சகல ச்ரேயஸ்ஸுக்கும் நாசகாரி யல்லவா? நாங்கள் எல்லோரும் வந்த பிறகு கூட அதில் ஏன் நிற்கிறாய்' என்றும் வற்புறுத்துகிறாள்.

கன்றுக்கு வேண்டியதை விட்டு விட்டு அதற்கு மேற் கொண்டுள்ள பாலை மட்டும் கறத்தல் குற்றமாகாது. தங்களைக் கொன்றோ அல்லது சிறை பிடித்தோ தங்கள் செல்வத்தைக் கவர வரும் விரோதிகளின் பலத்தை அழித்து அவர்களைக் கொல்வதும் தற்காப்புக்காகவே செய்தலால் அதுவும் குற்றமாகாது. ஆதலால் சிறிதும் குற்றமற்றவர்களை"குற்றமொன்றில்லாத" என்றாள்.

இங்கே 'பொற்கொடி' யென்றது பணிப்பொன். பொன் போல் இருப்பவளே. அதாவது ஆபரணமாக மாறி உத்தமமான ஜனங்களுக்கு அழகைக் கொடுக்கும் பொருள் தங்கம். "சேஷத்வம் கட்டிப் பொன் போலிருக்கும், பாரதந்திரியம் பணிப்பொன் போலிருக்கும்" என்பது பெரியோர் நிர்வாஹம். அந்தக் காலத்தில் தெரிந்த உலோகங்களிலெல்லாம் உயர்ந்தது தங்கம். அது போல் பகவானுக்குத் தான் தாஸ பூதன், சேஷன் என்கிற உணர்ச்சி ஆத்மாவின் உணர்ச்சிகளிலெல்லாம் மிக உயர்ந்தது. அந்தத் தங்கம் பிறர்க்கு உபயோகப்படும் பொழுது பணி நகையாக மாறுகிறது. இந்த சேஷத்வ உணர்ச்சியுள்ள ஆத்மா பகவத் பாகவத கைங்கர்யங்களில் ஈடுபடும்பொழுது அது "அவனிட்ட கட்டளை" யென்று பாரதந்திரிய உணர்ச்சியோடு செயல்படுகிறது. அவ்விதம் செயல்படும் புண்யாத்மாவே என்னும் பொருளில் பொற்கொடியே என்று அழைக்கிறாள். 'மிக உயர்ந்த வஸ்துக்களெல்லாம் பகவானுக்கு அர்ப்பணமாக வேண்டும். அதுபோல் நீயும் இந்த நோன்பில் கலந்துகொண்டு அனுஷ்டிக்கவேண்டுமல்லவா' யென்கிறாள்.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

பசுச்செல்வம் இருக்கிறது. இந்தப் பெண் கன்றுக்குவிட்டு மிஞ்சியதைக் கறக்கும் பண்புடைய கோவலர் குலத்தில் பிறந்தவள். பண்பு, வீரம், அழகு எல்லாம் பெற்றவள்.

எந்தப் பலனைக்கருதி இப்படி உறங்குகிறாள் ? என்று இடித்துக் காட்டுகிறாள். என்ன சிரேயஸ்ஸுக்கு இது வழி கோலும் ? ஏதுக்கு இந்த தூக்க நிஷ்டை ?

செய்யக்கூடிய குற்றங்களைக் கூறி, அத்தகு குற்றங்களைச் செய்யாதவர்கள் என்று கூறுவது அழகு.

குற்றமொன்றில்லாத பொற்கொடி - பொன்னை நிகர்த்தவள். ‘சேஷத்வம் கட்டிப்பொன்போலே, பாரதந்த்ர்யம் பணிப் பொன்போலே’. சேஷத்வம் நிறம் பெறுவது, பயனாவது, சோபிப்பது, பகவத்-பகவத பாரதந்த்ர்யம் மூலம்தான். (பாரதந்த்ர்யம் - தன் இச்சைக்கு இடமளிக்காதது. சேஷத்வம் இந்த பாரதந்த்ரியத்தால் - தான் நிறம் பெறும், பயனுறும். அதாவது நாம் சேஷி திருவுள்ள உகப்புக்காகவே இருக்க வேணும். நமது ஆசைப்படியன்று.)

‘லக்ஷ்மணன் சேஷத்வப்பெருமை தோற்ற; பரதன் பாரதந்த்ரியப் பெருமை தோற்ற’ - என்பர். இரண்டாம் தன்மையின் ஏற்றம் தெரிவதற்காகவே, பரதனை ‘அநகன்’ (குற்றமொன்று-மில்லாதவன்) என்கிறார் ரிஷி! லக்ஷ்மணன் குற்றமுள்ளவனோ ? ஆராய்க !



## பாசுரம் - 12

***கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி,***
***நினைத்து முலைவழியே நின்றுபால் சோர,***
***நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்,***
***பனித்தலை வீழநின் வாசல் கடைபற்றிச்,***
***சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற,***
***மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்,***
***இனித்தா னெழுந்திரா யீதென்னெ பேருறக்கம்,***
***அனைத்தில்லத் தாரு மறிந்தேலோ ரெம்பாவாய்.***

### பதவுரை

- இளங்கற்றெருமை - இளங்கன்றையுடைய எருமையானது
- நினைத்து - தன் கன்றை நினைத்து
- கன்றுக்கிரங்கி
- கனைத்து - ஒரு சப்தத்தைச் செய்து
- முலைவழியே - தன் முலையிலிருந்து

> பால் நின்று சோர - பாலை இடை விடாமல் சொரிய
> இல்லம் - வீட்டை
> நனைத்து - நனைத்து
> சேறாக்கும் - சகதியாகச் செய்யும்
> நற்செல்வன் தங்காய் - உயர்ந்த செல்வத்தையுடைய குடிப்பிறந்தவளே
> அனைத்தில்லத்தாரும் - வீட்டில் உள்ள மற்ற எல்லாரும்
> அறிந்தும் - விழித்துக்கொண்டும்
> இனித்தான் எழுந்திராய் - இனியாவது எழுந்திரு
> ஈதென்ன பேருறக்கம் - மற்றவர்கள் உறங்கியதைக்காட்டிலும் மிக அதிக நாழிகை நீயுறங்குவது இது என்ன தூக்கம்
> சினத்தினால் - கோபத்தினால்
> தென்னிலங்கைக் கோமானைச் செற்ற - இராவணனைக் கொன்ற
> மனத்துக்கினியானை - ஹ்ருதயத்திற்கு ரமணீயமானவனை
> பனித்தலை வீழ
> நின் வாசற்கடைபற்றி - உன் வீட்டு வாயிலில் நின்றுகொண்டு
> பாடவும் - நாங்களெல்லாரும், நீயும் சேர்ந்து பாடவும்
> நீ வாய் திறவாய் - நீயும் வாயைத் திறந்து பாடு
> ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

நாலாவது பாட்டில் கருத்த மேகத்தில் நாராயணனை உத்ப்ரேக்ஷித்தவள், அவனினும் கருத்த எருமைக் கூட்டத்தில் மேகத்தை உத்ப்ரேக்ஷிக்கிறாள்.

பசுக்களும் எருமைகளும் ஒருங்கே நிறைந்து விளங்கும் இடைச்சேரி. பசுக்களின் பால், தயிர், வெண்ணைய், நெய் இவைகளை, அக்னிஹோத்ர, யாக, யக்ஞங்களில் ஆஹுதிகளாகக் கொடுத்து தேவதைகளை மனிதர்கள் பூஜிக்க, அதற்குப் பதிலாக மனிதர்களுடைய உடல் நன்றாக வளர்ந்து வலிமைபெற, வேண்டிய பால், தயிர், வெண்ணெய், நெய்களை எருமைகள் மூலமாகத் தேவதைகள் மனிதர்க்குக் கொடுக்கிறார்கள். இந்த வைதிகமான பண்டமாற்று ஸ்ரீமத் பகவத்கீதையில் மூன்றாவது அத்யாயம், 10-முதல் 16 ச்லோகங்களில் விவரமாகக் கூறப் பட்டிருக்கிறது. இங்கே ‘இளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி, கனைத்து, நின்று பால் சோர்ந்து, இல்லம் சேறாக்கும்’ என்பதைத் ‘தங்களுக்கு ஆஹுதிகளைக் கொடுத்து, புஷ்டி தரும் உலகத்திலுள்ள ப்ரஜைகளுக்கு, தேவதைகளானவர்கள் நன்மையை நினைத்து, இடி இடித்து, மழை பெய்து, பூமியைச் சேறாக்கி, சகல தானியங்களும்

விளையும்படி செய்து, ப்ரத்யுபகாரம் செய்வதற்கு லக்ஷணையாகக் கொள்ளலாம். இந்த மழை நீரைப்பற்றி வள்ளுவர் கூறுங்கால்,

*வான் நின்று உலகம் வழங்கி வருதலால்*
*தான் அமிழ்தம் என்றுணரப்பாற்று* (2-1)

என்று கூறியுள்ளார். அதற்குப் பரிமேலழகர் விசேஷ உரையில், "அமிர்தம் உண்டார் சாவாது நிலை பெறுதலின், உலகத்தை நிலை பெறுத்துகின்ற வானை அமிழ்தம் என்று உணர்க" என்றார். தனி மனிதன் பிறந்து பிறந்து சாக, மேகம் மழை பொழியும் சிறப்பினால் உண்டாகும் அன்னங்களையுண்டு மனித வர்கம் சாகாமல் என்றும் நின்று நிலவுவதால் இந்த மழையும் அதன் நீரும் அமிழ்தம் என்னத்தக்கன.

அடுத்த பன்னிரண்டாவது குறளில்

*துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்*
*துப்பாய தூஉம் மழை* (2-2)

என்கிறார். அதன் உரையில் தானும் உணவாகித், தான் விளை விக்கும் உணவுப் பொருள்களையும் உணவாக்கி மனிதர்க்கு உதவுவது மழை என்கிறார்.

முன் எட்டாம் பாட்டில் எருமை புல் மேய்வதைச் சொல்லி அது இங்கே பால் சொரிவதைச் சொல்வதினால், தேவதைகளால் கிடைக்கும் பொருள்களுக்குப் புல்லும், அதைத் தின்று எருமை சொரியும் பாலும் கூறி, அவை மனிதர்க்குத் தேவதைகள் செய்யும் ப்ரதியுபகாரமென்கிறாள்.

*தேவாந் பாவயதாநேந தே தேவா பாவயந்துவ: |*
*பரஸ்பரம் பாவயந்த: ஸ்ரேய: பரம் அவாப்ஸ்யத ||*

என்று பகவத்கீதை 3-ம் அத்யாயம் 11-வது ச்லோகத்தின் பொருள் இங்கே விளங்குகிறது. மழைநீர், ஆறுகள், வாய்க்கால்கள், ஏரிகள், குளங்கள், கிணறுகளில் நிரம்பி ஜீவன்களுக்கெல்லாம் குடிக்கவும், குளிக்கவும், எல்லாப் பயிர்களும், மரஞ்செடி, கொடிகளும் வளரவும் உதவி புரிகிறது. இவைகளுக்கு உதவாத மீதநீர் கடலில் போய்க் கலக்கிறது. அதை மனதிற் கொண்டு கன்றுக்கும்,கோவலர்க்கும் உதவாத பால் மண்ணில் சேர்ந்து சேறாக்குகிறது என்கிறாள். நற்செல்வன் தர்மமான வழியில் சொத்துக்களை ஆர்ஜித்துச் செல்வமுடையவனாக இருப்பவன். அந்தச் செல்வத்திலும் தர்ம வழி மாறாதவன். "நல்" என்னும் அடைமொழிக்கு வருவாயும் போக்கு-வாயும் சாஸ்த்ர விஹிதமானவையாக உள்ள செல்வத்தை யுடையவன் என்று பொருள் கொள்க.

கன்று + எருமை = கற்றெருமை. 'இரங்கி' - அனுதாபம் கொண்டு. மனிதர்களுக்குள்ள எரிச்சலையும், நீர் வேட்கையையும் பர்ஜன்ய தேவதை யுணர்ந்து மழையைச் சொரிகிறது என்பதைத் தெரிவிக்க 'இரங்கி' என்றாள். ப்ரஜைகளை ஜகத் சக்திகளாகிய தெய்வங்களுக்குக் கன்று, குழந்தைகள் என்றாள். எருமையை மேகமாகவும், மடியை அதில் நீர் தங்கும் பாகமாகவும், முலையை அது பொழியும் கண்களாகவும் உத்ப்ரேக்ஷிக்கிறாள்.

இங்கே 'தங்காய்' என்றது, இவள் உடன் பிறந்தவன் பெருமையை நற்செல்வன் என்று குறித்தலால், அண்ணனும் தங்கையும் பரம்பரையாகத் தர்ம மார்க்கத்தில் நடப்பவர்கள் என்பதைக் குறிக்கும். (செல்வன் - நடப்பவன். செல் - பகுதி).

இப்பொழுது இன்னும் கொஞ்சம் நன்றாகப் பொழுது விடிந்து விட்டது. ஓட்டின் மேல் படை படையாக அமர்ந்திருந்த பனி கொஞ்சம் கொஞ்சமாக உருகிச் சொட்டு சொட்டென்று சொட்ட ஆரம்பித்துவிட்டது என்பதைப் 'பனித்தலை வீழ' என்று குறிப்பிடுகிறாள்.

தென்னிலங்கைக் கோமானைச் சினத்தினால் செற்றது, 'தான் அபகரித்துவந்த சீதையை ராமன் மறுபடி கொண்டுபோக நினைக்கிறானே' என்று இராமன் மேல் இராவணனுக்கு உண்டான சினத்தைக் குறிக்கும். 'தன் வினை தன்னைச் சுடும்' என்ற நியா-யத்தால் இராவணனுக்குச் சினத்தையுண்டாக்கி அவன் அதனால் பொருது அழியும்படியாக வினையும் செய்தவன். "மிகை செய்வார் வினைகட்கெல்லாம் மேற்செய்யும் வினையம் வல்லான்." சாஸ்த்ர வரம்புகளைக் கடந்து அக்கிரமவழியில் போகிறவர்களுக்கு அவர்கள் பின்பற்றிய அந்த அக்கிரம வழிகளே அவர்களைக் கொல்லுமாறு செய்யும் ஒரு வினையம் சரண்யனிடத்தில் இருக்கிறது என்று கம்பன் இரண்யன்வதைப் படலம் 147-ம் பாட்டில் சொல்லுகிறான். அதுவும் இங்கே நோக்கத்தக்கது. கும்பகருணன் வதைப்படலம் 17-வது பாட்டில் முதற் போரில் இராமன் தன்னை வென்ற திறத்தை மாலியவானிடம் இராவணன் சொல்லி 17 முதல் 25 பாடல்களில் இராமனை வியக்கும்போது, முதலாவதான 17-வது பாட்டில்

*எறித்த போர் அரக்கர் ஆவி எண் இலா வெள்ள மெஞ்சப்*
*பறித்த போது, என்னை அந்தப் பரிபவ முதுகிற்பற்றப்*
*பொறித்த போது, அன்னான் அந்தக் கூனி கூன்*
*போகவுண்டை*
*தெறித்த போது ஒத்தது அன்றி, சினம் உண்மை*
*தெரிந்ததில்லை*

என்று வியக்கிறான்.

"என் பேரில் இராமனுக்கு ஒரு சிறிது கோபம்கூட இருப்பதாக, அவன் பெரும் போர் புரிந்தபோதும், அவனுடைய முகத்திலோ, அங்கங்களிலோ கோபம் இருப்பது தெரியவில்லையே" என்று இராவணனே ஆச்சர்யப்படுகிறான் என்பதும் நோக்கத்தக்கது. நம்மையொருவர் கோபிக்கும்போது நாம் சாந்தமாயிருந்தோமானால் அவர்கள் கோபம் மிகவும் அதிகரிக்கும். இவ்விதம் இராவணன் இராமன் பேரில் மேன்மேலும் கோபித்துக்கொண்டு உயிரிழந்தான். இராமனுடைய அம்பு இராவணன் இவ்விதம் உயிரிழக்கச் சிறிது உதவிற்று என்று முடிந்த பொருளில் "செற்ற" என்கிறாள்.

மனத்துக்கினியான் என்று இராமனைச் சொன்னது அவன் த்யானத்திற்கும் உபாசனத்திற்கும் உகந்த மிகவும் உயர்ந்த மூர்த்தியென்றும், கண்ணன் புகழ் நாவுக்கும் அவன் திருமேனி இவள் உடலுக்கும் மிகவும் போக்யமான வஸ்து என்று பிரித்துப் பாடுவதுபோல் த்வனி. கண்ணனையே பாடினால் போதாது. மனத்துக்கினியனான இராமனையும் பாடவேண்டுமென்று இவள் சங்கல்பம். இவள் பிதா பெரியாழ்வார் திருமொழியில் 3-ம் பத்து 10-ம் பதிகத்திலும், 4-ம் பத்து 7-ம் பதிகத்திலும், இன்னும் பல பாடல்களிலும் பாடியுள்ளதை அடியொற்றி இவளும் இங்கே பாடுகிறாள்.

கண்ணன் லீலைகளை யெல்லாம் ஸ்ரீபாகவதத்தில் கூறும்போது "வ்யாமோஹயன் லீலயா" என்று சுகர் சொன்னதுபோல் இராமாவதாரத்தில் வரும் சோகம், வீரம் முதலியவைகளெல்லாம் சரண்யனுக்கு விளையாட்டாவன. கருணையொன்றுதான் உண்மை என்பதை விளக்கி ஸ்ரீதேசிகன் தசாவதார ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டும்போது "கருணாகாகுத்தன்" என்றதையும் நோக்குக. ஜீவன்களிடத்தில் பகவானுக்குள்ள இந்தக் கருணைதான் இந்தப் பாட்டில் சொல்லும் எருமை பொழியும் பாலும் அதனால் ஆண்டாள் உத்ப்ரேக்ஷிக்கும் மேகம் பெய்யும் மழையும். ஆனதால் இவள் அதற்கு எதிர் தட்டான கோபத்தைக் கொண்ட இராவணன் மாண்டதையும், கருணையின் பரிபூரண நிதியான மனத்துக் கினியானையும் ஆச்ரிதர்கள் பிரித்து அறியும் பொருட்டு, கோபத்தையும் கருணையையும் இரண்டு எதிர் தட்டுக்களில் வைத்துப் பாடிக்காட்டுகிறாள். அந்தச் சினம் இராமனுக்கு இருந்தால் அவன் மனத்துக்கினியவனாக மாட்டான். முதற் பாட்டுரையிற் சொன்ன வண்ணம் சினம் மிகுந்த இராவணனைச் செற்றதே 'அவன் ஆன்மாவைக் காப்பாற்ற வேண்டும்' என்னும் இவன் கருணையின் காரியமாகும் என்று உணர்க.

கடைவாசல் என்பது 'வாசற்கடை' யாயிற்று. வாசற்கடை யென்பதில் கடை யென்பதை ஏழாம் வேற்றுமையின் உருபாகக் கொண்டு வாசலில் என்று இடப்பொருளாகப் பொருள் கொள்ளினும் அமையும்.

முன் பாட்டிலே 'கறவைக்கணங்கள்' என்று பாடும்போதே எருமைக்கூட்டங்களைப் பார்த்து அது 'பெய்யத்தொடங்கும் கருத்த மேகம் போல் இருக்கிறது' என்று உத்ப்ரேக்ஷித்துவிட்டாள். அது பெய்யப்போவதை எச்சரித்து இடி இடிக்கும்போது, அந்த இடிக்குப் பயந்து பாம்புகளெல்லாம் தங்கள் தங்கள் புற்றுக்களில் போய் அடங்கி விடுவன. புனத்தில் மேயும் மயில்கள் சந்தோஷ மிகுதியால் தோகை விரித்தாடுவன. அந்தக் கறவைக் கணங்கள் தான் பொழிகிறதென்று இந்தப் பாட்டில் உத்ப்ரேக்ஷிக்கிறாள்.

'பாம்பு போன்ற சோம்பல் முதலான தீய குணங்களெல்லாம் தொலைந்து, எங்களைக் கண்டு மயில்கள்போல் ஆட வேண்டிய உத்தமத் தலைவிகளாகிய நீங்கள் தூங்குகிறீர்களே' என்னும் பாவம் இரண்டு பாட்டுகளுக்கும் பொதுப் பொருளாகக் கொள்ளக் கிடக்கிறது. மயில் பாம்பைக் கண்டவிடத்துக் கிழித்துத் தின்று அழிப்பதுபோல் நீங்கள் எங்களோடு ஆட வந்தீர்களானால், (போய பிழையும் புகுதருவான் நின்றனவும்) உங்களுடைய சோம்பல், முதலான நாச ஹேதுவான குணங்களும் ஒழிவன என்பதும் கொள்ளக் கிடக்கிறது.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

மேகம் அமுதம் (மழை) பொழிந்து புல்-தாவரங்களை விருத்தி செய்து எருமைகள் தின்ன வழிவகுத்து, இவை மக்களுக்கு அமிழ்தமான பாற்செல்வம் தர ஏதுவாகிறது.

மேகம் பொழியும் மழையும், எருமைகள் பொழியும் பாலும் கருணையின் காரியம் என்கிறார்.

ராமனின் காரியமும் அதுபோல. மனத்துக்கினியான். ராவணனிடம் கூடக் கோபம் இல்லை எனக் கம்பர் குறிப்பைக் காட்டுகிறார். ராமன் செய்த போர் ராவணனின் ஆத்மாவைக் காக்கவே! அதற்காக அத்தனை கொலை நடக்க வேண்டியிருந்தது. விபீஷணன் சரண் புக வந்த போது, ராவணன் வரவில்லையே ! வந்திருந்தால் அவனுக்கும் அடைக்கலம் தருவேனே ! என்ற பாங்கு, 'மனத்துக்கினியான்' என்பதற்கு ஆதாரம்.



## பாசுரம் - 13

*புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா வரக்கனைக்,*
*கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்,*
*பிள்ளைக ளெல்லாரும் பாவைக் களம்புக்கார்,*
*வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று,*
*புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்,*
*குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே,*
*பள்ளிக் கிடத்தியோ பாவாய் ! நீ நன்னாளால்,*
*கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

> புள்ளின் - பகன் என்னும் கொக்கின்
> வாய் - வாயை
> கீண்டானை - கிழித்தானை
> பொல்லா - கெட்ட
> அரக்கனை - ராவணனை
> கிள்ளி - இலேசாகப் போர் புரிந்த
> களைந்தானை - பிடுங்கி எறிந்தவனை
> கீர்த்திமை - பெருமையை; யசஸ்ஸை
> பாடி - கானம் செய்து கொண்டு
> போய் - சென்று
> பிள்ளைகள் எல்லாரும் - மற்ற சிறுமியர்கள் எல்லாரும்
> பாவைக்களம் - பெண்களெல்லாரும் நீராட்டம் நடத்தும் இடத்துக்கு
> புக்கார் - போய்ச்சேர்ந்தார்கள்
> வெள்ளியெழுந்து - சுக்கிரன் உதயமாகி
> வியாழன் உறங்கிற்று - குரு அஸ்தமனம் ஆகிற்று
> புள்ளும் சிலம்பினகாண் - மற்ற எல்லா பறவைகளும் எழுந்து சப்திக்கின்றன
> போது - தாமரைமலர் போன்றதும்
> அரி - சிவந்த வரிகள் உடையதுமான
> கண்ணினாய் - கண்களையுடையவளே
> பாவாய் - பதுமைபோல் அழகுடையவளே நீ வந்து எங்களோடு கூடி
> கள்ளம் தவிர்ந்து - வஞ்சகத்தைவிட்டு
> ஆல் நன்னாள் - கார்த்திகையாகிய நல்ல சுப தினத்தில்
> குள்ளக்குளிர - உடம்பு குறுக, சரீரம் எங்கும் குளிர்ப்பையடைய

> குடைந்து - நீரில் நன்றாக அமிழ்ந்து
> நீர் ஆடாதே - ஜலத்தில் முழுகாமல்
> பள்ளி - படுக்கையில்
> கிடத்தியோ - கிடத்தியோ
> ஏல் ஓர் எம்பாவாய்

## கருத்துரை

வ்ரஜ பூமியில் கண்ணன் விளையாடும்போது பகன் என்னும் அசுரன் கொக்கு ரூபத்தோடு இவரை ஒரு மீன்குஞ்சு மாதிரியாகக் கொத்தித் தின்றுவிடுவது என்று வந்தான். அவனுடைய வாயைக் கண்ணன் கிழித்துக் கொன்றார்.

'பொல்லா' - மன, மொழி, செயல்களால் தீங்கையே எண்ணிச், சொல்லிச், செய்தலைக் குறிக்கிறது. 'அரக்கன்' என்னும் சொல் ராக்ஷஸர்களுக்கும், அசுரர்களுக்கும் பொதுச் சொல்லாக வருவது. 'கிள்ளி' என்னும் சொல் நகங்களால் கிள்ளி எடுத்தலுக்குத் தனிச் சொல்லாக வரும். ஆனதால் இங்கே பொல்லா அரக்கர்களை என்பது, இரணியகசிபுவை நகங்களால் மார்பகம்கீண்டு அழித்தது எனினும் ஆம். இராவணன் விஷயத்தில் கிள்ளி என்றது 'இலேசாகச் செய்தது' என்று கொள்ளத்தக்கது. 'களைதல்' என்பது பிடுங்கி எறிதல். தர்மங்கள் விளையவேண்டிய ப்ரக்ருதியில், அவைகளை வளர்த்துக்கொண்டிருக்கும் தர்ம நிஷ்டர்களாகிய மனிதர்கள், தேவதைகளுக்கிடையே இரணியகசிபு, இராவணன் முதலிய அரக்கர் தோன்றி, தர்மிஷ்டர்கள் க்ஷேமம் அடையாது செய்து வர, பகவானும் அவர்களைக் களைந்தான். செந்நெற்பயிரினூடே களைகள் தோன்றி, அந்தப் பயிர்களை அழிக்கப் புகுங்கால் உழவன் அந்தக் களைகளைப் பிடுங்கி எறிந்து பயிர்களுக்கு நன்மை விளைத்தலை மனத்தில் கொண்டு 'களைந்தானை' என்கிறாள். "பயிரிற் களை போல் அசுரரைக் காய்ந்தான்" என்னும் தேசிக-ப்ரபந்தம் அம்ருதரஞ்சனி 5-வது பாட்டு ப்ரயோகத்தைக் காண்க.

> *"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்*
> *களைகட்டதனொடு நேர்"*

திருக்குறள் 55-வது அதிகாரம் 10-வது குறளில் 'அரசன் சமுதாயத்திலிருந்து தீயவரை ஒறுத்துப் பயிர்களுக்கு நடுவிலுள்ள களைகளைப் பிடுங்கி எறிவது போல்' என்னும் திருவள்ளுவர் ப்ரயோகத்தையும் நோக்குக. (கட்டல் - பிடுங்குதல்).

இரண்டு ஸம்ஹாரத்தைச் சொல்லிக் கீர்த்திமை என்ற சொல்லை ப்ரயோகிக்கிறாள். கீர்த்தி - யசஸ், பெருமை. மை என்பது பண்பு விகுதி. அதைக் கீர்த்தி என்னும் வட சொல்லில் சேர்த்து

பகவானுக்குத் தனித்த குணமாக்குகிறாள். ஆலங்காரிகர் வீரச் செயல்களால் வரும் யசஸ்ஸுக்குப் 'பிரதாபம்' என்றும், தர்மச் செயல்களால் வரும் யசஸ்ஸுக்குக் 'கீர்த்தி' என்றும் வெவ்வேறு பெயர் கூறுவர். இது மனிதர்களுக்கும் தேவதைகளுக்குமே ஒக்கு-மென்றும், பகவான் செய்வனகள் வீரச் செயலாகக் காணப்படினும் அந்தந்த ஆத்மாவை ரக்ஷிக்க வேணும் என்னும் கருணையால் செய்யப்படுவதால் கீர்த்திமை என்றாள். பொய்கையாழ்வார், "கருமம் அழிப்பு அளிப்பு, கையது வேல் நேமி" என்பதை எடுத்துக் கூறியுள்ளார். முன் முதலாவது பாட்டுப்பொருள்(கூர்வேல்) இதில் கண்டு கொள்க.

பாடிப்போய் என்பது மார்கழி நீராட்டத்துக்காக தீர்த்தத் துறைக்குப் போகும் பெண்கள் பகவத் குணங்களை த்யானம் செய்து கொண்டே போனார்கள் என்ற ஸ்ரீபாகவதம், 10-வது ஸ்கந்தம், 22-வது ஸர்க்கம் 5-வது சுலோகமும் இங்கே அனுஸந்தேயம். 'பாவைக்களம்' - அதே ஸர்க்கத்தில்

*ஆப்லுத்யாம்பஸி காளிந்த்யா:*
*ஜலாந்தே சோதிதேஷிருணே*
*க்ருத்வா ப்ரதிக்ருதிம் தேவீம்*
*ஆனர்ச்சுர்ந்ருப ஸைகதீம்.*

என்னும் 2-வது சுலோக அர்த்ததைச் சொல்லுகிறது. "ஏ! பரீக்ஷித்து ராஜாவே, அருண உதய காலத்தில், யமுனையில் துறையை அடுத்-துள்ள ஜலத்தில் மூழ்கி, மணலினால் தேவியை உருவம் செய்து வைத்து அந்தப் பெண்கள் அர்ச்சித்தார்கள்", என்று இந்த சுலோகத்தின் பொருளை அந்வர்த்திக்கிறது.

ஆண்டாள் திருப்பாவை முழுவதிலும் காத்யாயினி விரதத்தை அனுசரித்து ப்ரக்ரியைகளை வரிசையாகச் சொல்லிப் போகிறாள். ஆனால் காத்யாயினியை அர்ச்சித்ததாக விஷயம் சொல்லாமலே, 16-வது பாடலில் தூயோமாய் வந்தோம், துயிலெழப் பாடுவான் என்று சொல்லுகிற படியாலும், இந்த நோன்பையே சுத்தாந்த ஸித்-தாந்திகள், மறந்தும் புறந்தொழா மானிடர்களான ஸ்ரீ வைஷ்ணவர்-களுக்கு மோக்ஷப்ரதமான நோன்பு என்று தலைக் கட்டுவதாலும், கேவலம் தேசநிர்தேசம், இடத்தைக் குறிப்பிடுவதன் பொருட்டு, யமுனையின் ஜலக்கரையை பாவைக்களம் என்று பேசினாள். என்றாலும், ஸ்ரீவைஷ்ணவர்கள் அல்லாத இதர சம்பிரதாயஸ்தர்கள் அங்கே பாவைகளைப் பிடித்துவைத்து பூசிப்பதைச் சொன்னாள் என்றாலும், பதுமைகள் போன்ற அழகிய இளம் பெண்கள் நீராடும் இடம் என்றாலும் பொருந்துவன.

'வெள்ளி எழுந்து' என்றது சுக்ரோதயம் ஆய்விட்டபடியால் திரயோதசியில் 4 நாழிகை இருட்டும் சதுர்தசி நாழியில் 2 நாழிகை இருட்டும் உடையதாகும். விடியற்காலங்களும் வெளிச்சத்தோடு கூடியே இருக்கும் என்பதைக் குறிக்கிறது

உத்தம ஸ்த்ரீகளின் கண்கள் தாமரைபோல் மலர்ந்து ஒளியுடையதாய் இருக்கும். விழியில் வெள்ளை நிறமுள்ள பகுதியில் சிவந்த கோடுகள் ஒடுவதும் அவர்களுடைய தேக புஷ்டிக்கும் மனத்தின் உற்சாகத்திற்கும் அறிகுறிகள். ஆதலின் 'போதரிக் கண்ணினாய்' என்றாள்.

இங்கே 'கள்ளம்' என்பது கற்றறிதல் ஒன்றும், சொல்லுதல் ஒன்றும் ஆகி, செயல்படுவது வேறொன்றாகவும் இருப்பதை வஞ்சகமான செயல்பாடு என்றபடி.

*கற்க கசடறக்கற்பவை கற்றபின்*
*நிற்க அதற்குத்தக*

என்ற (40-1) குறள் இங்கே நோக்கத்தக்கது "இந்த நோன்பின் பெருமையை நீ முற்றிலும் அறிந்து பிறருக்கும் எடுத்து உரைப்பவள். நாங்கள் எல்லாரும் நீர்ச்சுனைக்குப் போன பிறகுங்கூட இதற்கு நீ எங்களோடு வராமல் படுத்துக்கொண்டு ஆத்ம வஞ்சனையைச் செய்யாதே. அதை விடு'' என்றபடி. கலந்து - இந்த நோன்பில் கலந்து கொண்டு எனினும் ஆகும்.

விடியுமுன் குளிர்ந்தநீரில் அமிழ்ந்து முழுகினால் உடல் குளிர்ந்து குறுகும். அது சரீரத்தின் ரத்த ஓட்டத்திற்கு மிக நல்ல வழக்கம் என்று பெரியோர்கள் கூறுவர். மேலும் புள்ளும் சிலம்பின என்னும் ஆறாவது பாடலில் அரியென்ற பேரரவம் உள்ளம் புகுந்து குளிர்ந்ததைப் பாடுகிறாள். ஹரி நாமத்தினாலே மனம் குளிர்தலோடு, அது உயிரிலும், உணர்விலும் அன்வயித்து இன்பம் தர, இந்த நீராடும் செயலாலே உடல் குளிர்தலையும் குறிப்பிடுகிறாள். ஊனும், உயிரும், உணர்வும் மூன்றுமே எம்பெருமான்தான் என்று திருவாய்மொழி 8-ம் பத்து 8-ம் பதிகம் 4-வது பாடலில் நம்மாழ்வார் நிர்வாகத்தை மனதில் கொண்டு இந்தக் குளுமை எல்லாமே பகவத் அதீனம் ஆகி நம்மைக் காப்பாற்றும் என்கிறாள். (ஆல் - நன்னாள் முதற்பாட்டில் பொருளைக் கண்டு கொள்க).

### விசேஷக் குறிப்பு (Dr. VNV)

'அரக்கர்' என்ற பெயர் ராக்ஷஸர் / அசுரர் இரு இனங்களுக்கும் பொதுவான சொல்.

'கிள்ளி' என்று சொன்னது, நகத்தால் கீண்டு, களையப்பட்ட இரணியனைக் காட்ட.

பயிர்கள் - தர்மநிஷ்டர் மற்றும் தேவர்களுக்குக் குறிப்பு. அவர்களுக்கு இடையூறாக முளைத்த அரக்கர்களைக் களைந்-தான் பெருமான். களையப்பட வேண்டியவையே களைகள்.

கீர்த்திமை - கீர்த்தி என்ற வடசொல்லின் தன்மையென்று கொள்க. அது தனித்த குணம்.

ஸ்ரீ பாகவதம் 10.22.2 யமுனைத் திட்டுகளில் மணல் பாவை-களை கல்பித்து வழிபட்டது காண்க. அதுதான் பாவைக்களம்.

கள்ளம் - கற்றறிதல் ஒன்றும், செயல்முறை வேறொன்றாகவும் இருத்தல். திருக்குறள் 40.1

ஆல் - நன்னாளால் - கார்த்திகை நன்னாள். வெள்ளி யெழுந்து - சுக்ரோதயமாயிற்று. திரயோதசியில் 4 நாழிகை இருட்டும், சதுர்தசியில் 2 நாழிகை இருட்டுமிருக்கும்.



## பாசுரம் - 14

*உங்கள் புழக்கடைத் தோட்டத்து வாவியுள்,*
*செங்கழுநீர் வாய்நெகிழ்ந் தாம்பல்வாய் கூம்பினகாண்,*
*செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்,*
*தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்,*
*எங்களை முன்னமெழுப்புவான் வாய்பேசும்,*
*நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய்,*
*சங்கொடு சக்கர மேந்தும் தடக்கையன்,*
*பங்கயக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- உங்கள் புழக்கடை - கொல்லைப்புறத்திலுள்ள
- தோட்டத்து
- வாவியுள் - குளத்தில்
- செங்கழுநீர் - செங்கழுநீர்களும், தாமரைகளும்

> வாய் நெகிழ்ந்து - சிறிது மலர்ந்து
> ஆம்பல் - கருநெய்தல்
> வாய் கூம்பின காண் - வாய் மூடிக் கொள்வன பார்
> செங்கல் பொடி - காவிக்கல்லின் தூளில் நனைத்துச் சிவந்ததான
> கூறை - வஸ்திரத்தையும்
> வெண்பல் - நன்கு வெளுத்தபல்லையுமுடைய
> தவத்தவர் - ஸந்நியாசிகள் அவரவர் அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு
> தங்கள் திருக்கோயில் - அவரவர் திருவாராதனங்களுக்கு
> சங்கிடுவான் - சங்க முழக்கம் செய்து தொடங்கும் பொருட்டு
> போதந்தார் - வருகின்றார்கள்
> எங்களை முன்னம் எழுப்புவான் - நீ முன்னமே எழுந்திருந்து எங்களையெல்லாம் எழுப்புவாய் என்று
> வாய் பேசும் - வீணான வாய்ப்பேச்சுப் பேசும்
> நங்காய் - பெண்ணே
> நாவுடையாய் - பேச்சு வலிமையுள்ளவளே
> எழுந்திராய்
> நாணாதாய் - வெட்கமில்லாதவளே
> சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன் - பாஞ்ச சன்னியத்தையும் ஸுதர்சனத்தையும் ஏந்திய வலிமை பொருந்திய கைகளையுடையவன்
> பங்கயக்கண்ணானைப் பாடு - தாமரை போன்ற கண்களையுடையவனை நீயும் கீர்த்தனம் செய்
> ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

நேற்று மாலை பெண்கள் விளையாடும்போது, 'நீயும் நாளை விடியற் காலம் நீராட்டத்திற்கு வருகிறாயா' என்று கேட்டபோது இந்தப் பெண், 'நான் முதலில் எழுந்திருந்து உங்களையெல்லாம் எழுப்பு-கிறேன், பாருங்கள்' என்று வீராப்புப் பேசினாள். அதைச் சொல்லிக் காட்டி, 'நன்றாகப் பொழுது புலரும் நேரமாயிற்று, ஸந்நியாஸிகள் எல்லாரும் நீர்த்துறையில் ஆடித் திரும்பிவந்து அவரவர்கள் தனு-ராராதனம் தொடங்கப் போகிறார்கள். உங்கள் கொல்லைப்புறத்துக் குளத்திலே தாமரை முதலான மலர்கள் மலரத் தொடங்கி குமுதம் முதலானவை மூடிக்கொள்ளத் தொடங்கி விட்டன. இன்று இவ்-வளவு நாழியாகியும் இன்னம் தூங்குகிறாயே, உனக்கு வெட்கமில்லையா? பேச்சு வீராப்பு மட்டும்தான் உண்டா?' என்று ஏசிக் கூறுகிறாள். (புழக்கடை - புறக்கடை, கடைப்புறம் - வீட்டின்

பின்புறத்துக்கோடி). 'செங்கழுநீர்' என்றது தாமரை முதலான சிவந்த இதழ்களையுடையவும், சூர்யோதயத்தில் மலர்வனவாயு-முள்ள பூக்களை. 'ஆம்பல்' என்றது கருநெய்தல் முதலான சூர்யோதயத்தில் மூடிக்கொள்ளும் பூக்களை. (நெகிழ்தல் - விரிதல், அலர்தல். கூம்புதல் - கூடுதல், மூடிக் கொள்ளுதல்.)

காவிக்கல்லைப் பொடியாக்கி, அதை நீரில் ஊற வைத்துக் கரைத்து, அந்த நீரில் வெள்ளைத் துணிகளை நனைத்துச், சிவப்பு நிறமாக்கிக், காஷாய வஸ்திரங்கள் செய்யும் முறையை யொட்டி, 'செங்கற் பொடிக் கூறை' யென்றாள். அல்லது உவமைத் தொகை-யாகக் கொண்டு, செங்கற் பொடி போன்ற சிவந்த நிறமுடைய காஷாயம் என்றாலும் பொருந்தும்.

'வெண்பல்' என்றது, வெற்றிலை பாக்கு போட்டுச் சிவக்காமல் எப்போதும் வெண்மையாக இருக்கும் பல் என்று, இந்த ஒரு போகத்தைத் துறந்ததனால் எல்லா இந்திரிய சுகங்களையும் துறந்து ஐம்பொறிகளையும் அடக்கியவர்களென்று குறிப்பு.

ஆராதனத் தொடக்கத்தில் திருப்பள்ளியெழுச்சி பாடி, சங்கை முழக்கிக், கையைத் தட்டிப், பெருமாள் எழுந்தருளியிருக்கும் பெட்டியைத் திறப்பது மிகப் பழமையான தமிழ் நாட்டின் மரபென்று தெரிகிறது. அதைச் 'சங்கிடுவான்' என்று பாடுகிறாள்.

'வாய் பேசும்' - வாய்மை போல் பேசும் என்பது. நேற்று நிஜம் போல் பேசினாயே. (மை - பண்பு உருபுத்தொக்கது). சங்கு சக்கரங்கள் ஆகிய திவ்ய ஆயுதங்கள் அவனுக்கு அழகைத் தந்து, நாம் ஸேவிப்பதற்கும் சோபை தருவன. தாமரை போன்ற திருக்கண்கள் நம்மேல் அருள் புரிவன. ஆனதால் நம்மேல் வரும் அனிஷ்ட நிவாரணத்துக்கும், இஷ்ட மங்கள ப்ராப்திகளுக்கும் அவனைக் கானம் செய்து, அவனருளுக்குப் பாத்திரமாவோமாக என்று கூறி அழைக்கிறாள்.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

சங்கிடுவான் - சங்கு ஊதுவதற்காக. பெருமாள் ஆராதனம் தொடங்க, திருப்பள்ளி யெழுச்சியைப் பாடி, சங்கை முழங்கி, கையைக் கிரமமாகத் தட்டி, பெருமாள் திருக்கோவில் கதவுகளைத் திறப்பது, தமிழர் மரபு.

வாய் பேசும் - வாய்மைபோல் பேசும் என்று கூடக் கொள்ளலாம்.



## பாசுரம் - 15

***எல்லே ! இளங்கிளியே ! இன்ன முறங்குதியோ,***
***சில்லென் றழையேன்மின் நங்கைமீர் ! போதர்கின்றேன்,***
***வல்லையுன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்,***
***வல்லீர்கள் நீங்களே நானேதா னாயிடுக,***
***ஒல்லைநீ போதா யுனக்கென்ன வேறுடையை,***
***எல்லாரும் போந்தாரோ போந்தார்போந் தெண்ணிக்கொள்,***
***வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க***
***வல்லானை, மாயனைப்பாடேலோ ரெம்பாவாய்.***

### பதவுரை

- (வந்தவர்கள்) இளங்கிளியே - கிளிப்பிள்ளை போன்றவளே
- எல்லே - வெளிச்சமாயிற்றே
- இன்னமுறங்குதியோ - இன்னுமா தூங்குகிறாய் (என்று கேட்கிறார்கள்)
- நங்கைமீர் - பெண்களே
- (இவள்) நங்கைமீர் போதருகின்றேன் என்று சொல்லுகிறாள்
- சில்லென்று - சுள்ளென்றுரைக்கும் படியாக
- அழையேன்மின் - கூப்பிடாதீர்கள்
- போதர்கின்றேன் - வருகின்றேன்(என்கிறாள்)
- (அவர்கள்) வல்லே - வல்லமையான
- உன் கட்டுரைகள் - உன்னுடைய புனைந்த வார்த்தைகளை
- பண்டே - முன்னமே
- உன் வாய் - உன் வாயினின்று
- அறிதும் - நாங்கள் அறிவோம் (என்று சொல்கிறார்கள்)
- (இவள்) நீங்களே வல்லீர்கள் - நீங்களே வல்லமைவுடையவர்கள்
- நானேதான் ஆயிடுக - நானேதான் வல்லவளாக ஆகட்டுமே
- (என்று சொல்லிவிட்டு)
- எல்லாரும் போந்தாரோ - நீராட்டத்திற்கு வருகிறவர்களெல்லாம் வந்து விட்டார்களோ (என்று கேட்கிறாள்)
- (அவர்கள்) போந்தார் - எல்லாரும் வந்து விட்டார்கள்
- போந்து - நீயும் வந்து
- எண்ணிக்கொள் (என்று சொல்லி) ஒல்லை - சீக்கிரமாக
- நீ, போதாய் - வா
- உனக்கு என்ன வேறுடையை - எங்களையெல்லாம் காட்டிலும் வேறான சலுகை உனக்கு என்ன இருக்கிறது;
- வல்ஆனை கொன்றானை - மிகப் பலமுள்ள குவலயாபீடத்தைக் கொன்றவனை

> மாற்றாரை - விரோதிகளை;
> மாற்றழிக்க - அவர்கள் தர்மத்தில் கொண்ட விரோதத்தை யழிப்பதற்கு;
> வல்லானை - வல்லமையுடையவனை;
> மாயனை - மாயையால் மயக்கி நம்மை யாட்கொள்பவனை;
> பாடு - நீயும் வந்து கீர்த்தனை செய்.
> ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

ஜீவன்களை யெழுப்பும் 10 பாட்டுக்களில் இது கடைசிப் பாட்டு. இது கேள்வியும் பதிலுமாக அமைந்திருக்கிறது. 'இளங்கிளி' யென்று நினைவு தெரியாத கிளிப்பிள்ளை போல் செல்லமாகக் கையில் வைத்து வளர்க்கப்படுபவள்; நெடுநேரம் தூங்குகிறாள்.

'எல்லே' என்பதற்கு, 'ஐயே!' என்ற கேலிப் பொருளும் உண்டு. இன்னும், 'மற்ற எல்லாரும் எழுந்து வந்துவிட்டார்கள், அதன் பிறகும் நீ தூங்குகிறாயே' என்ற பொருள். 'போந்தார் போந்தெண்ணிக்-கொள்' என்னும் ப்ரயோகத்தால் 'நீயொருத்திதான் கடைசியாகத் தூங்குகிறவள்' என்று தெரிகிறது.

'சில்'லென்பதற்கு மிக உரத்துக்கூறி எழுப்புதல். மின் - ஏவல் விகுதி.) தூங்குகிறவர்களை அவ்விதம் உரத்துக்கூறி எழுப்பக் கூடாதென்று ப்ருஹதாரண்யக உபநிஷத்து கூறுகிறது. ஆதலால் பெருமாளை எழுப்பும்போது கூட இனிய குரல்களால் சுப்ரபாதம், (திருப்பள்ளியெழுச்சி) பாடி எழுப்ப வேணுமென்பது முறை யென்பதைக் குறிப்பிட்டாள்.

'வல்லே - வன்மையான, 'கட்டுரைகள்' - புனைந்து பேசும் அதிசயக் கூற்றுக்கள். 'நாமெல்லாரும் ஒரு கோஷ்டியாக அந்-வயிக்கும்போது நம் எல்லாருடைய வல்லமையையும் பகவ-தாராதனத்தில் செலுத்துவோமே. அது உங்களுக்கும் இருக்கட்டும், எனக்கும் இருக்கட்டுமே' என்பது பாவம்.

அவனுக்கு விரோதமாக வல்லமையைக் காட்டினால் அவன் கொன்று விடுவான். அதற்குக் குவலயாபீடத்தைச் சாக்ஷி காட்டு-கிறாள். கம்சன் தன்னுடைய தனுர் யக்ஞத்துக்குக் கண்ணனை அதிதியாக அழைத்து, அவனை முடித்துவிட நினைத்தான். யக்ஞ வாடிகையின் வாசலில் குவலயாபீடம் என்ற மிக வலி பொருந்திய பட்டத்து யானையை நிற்கவைத்துக், கண்ணன் உள்ளே நுழைய வரும்போது தந்தங்களால் அவனைக் குத்திக் கொல்லும்படி பாகன் ஏவியதும், கண்ணன் அந்தப் பாகனைக் கொன்று குவலயா-பீடத்தின் இரண்டு தந்தங்களையும் பிடுங்கி, அவைகளால் அதன்

மண்டையைப் பிளந்து, அதைக் கொன்றதும் ஸ்ரீபாகவதத்தில் பிரஸித்தம்.

'மாற்றாரை' மாற்றழிக்க வல்லானென்றது, பக்குவமடைந்த ஆத்மாக்கள், ஏதோ பாபத்தினால் தனக்கு விரோதியாக அசுர, ராக்ஷஸ சரீரங்களில் பிறந்தால் அந்த சரீரங்களைக் கொன்று நீக்கி, அதனால் இவன் பேரில் கொண்டிருந்த பகையைத் தவிர்த்து (மாற்று - பகை, அழிக்க - தொலைக்க) அந்த ஆத்மாக்களை ஆட்-கொள்ளுதல் நாராயணனின் கருணை. இதை 'வென்று பகை கெடுக்கும் நின்கையில் வேல் போற்றி' என்னும் 24-ம் பாட்டில் காண்க. விரோதியாக வருகிறவன் சரீர தர்மத்தால் தன் மேல் கொண்ட பகையை, அந்த சரீரத்தைப் போக்கிக் கெடுத்துச், சரீரியாகிய ஆன்மாவைக் கெடுக்காமல், ஆட்கொள்ளுவான் என்று பொருள். அதையே மாற்றாரை மாற்றழிப்பவன் - சரீரியாகிய ஆன்மாவை ஆட்கொள்ளுபவன் என்கிறாள். இதுவும் அவன் மாயா வினோதங்களில் ஒன்று என்பது துலங்க, 'மாயனைப் பாடெ' ன்கிறாள்.

## *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

பிரகிருதி வசப்பட்டு உறங்கும் பெண்களைத் துயிலெழுப்பும் பத்துப் பாட்டுக்களில் இது கடைசி.

'மாற்றாரை மாற்றழிக்க வல்லான்' - பக்குவமடைந்த ஆத்மாக்கள் ஏதோ பாபத்தினால் பெருமாளுக்கு விரோதியான சரீரங்களில் பிறந்தால் அந்த சரீரங்களைக் கொன்று நீக்கி, பகைமை போகச் செய்து, அந்த ஆத்மாக்களை ஆட்கொள்கிறான். எத்தனை சுவையான கருத்து ! கம்ஸ, ராவண, சிசுபாலாதியர் சரீரங்களைக் கொன்று அவ்வாத்மாக்களை உய்வடையச் செய்தான். இவர்-களுக்கும் அவன் பரதத்வமாயிற்றே ! இவர்களிடம் கூடப் பகை, த்வேஷம் பெருமாளுக்கு ஏற்படாது. இவர்கள் அவனுக்கு ஈடா ?

'வென்று பகை கெடுக்கும் (பாசுரம்-24) இதே கருத்து. இத் திருக்குணம் மாயனுக்கே உரியது.



## பாசுரம் - 16

*நாயக னாய்நின்ற நந்தகோ பனுடைய*
*கோயில்காப் பானே, கொடித்தோன்றும் தோரண*
*வாயில்காப் பானே, மணிக்கதவம் தாள்திறவாய்,*
*ஆயர் சிறுமிய ரோமுக்கு, அறைபறை*
*மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்,*
*தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்,*
*வாயால்முன் னமுன்னம் மாற்றாதே யம்மா, நீ*
*நேய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- நாயகனாய் நின்ற - ஆயர்பாடிக்கு ஆட்சித் தலைவனாய் நின்ற
- நந்தகோபனுடைய - நந்தகோபனுடைய
- கோயில் - அரண்மனையை
- காப்பானே - காவல் செய்பவனே
- கொடித்தோன்றும் - வெற்றிக்கொடிகள் ப்ரகாசிக்கின்ற
- தோரண - அலங்கரிக்கப்பட்ட கோபுர
- வாயில் - உள்ளே நுழைவாயிலை
- காப்பானே - காக்கின்றவனே
- மணிக்கதவம் - மணிகள் கட்டிய ஒலிக்கின்ற கதவுகளின்
- தாள் - தாழ்ப்பாளை
- திறவாய் - நீக்கிவிடு
- ஆயர்சிறுமியரோம் எமக்கு - இடையர் குலத்தில் பிறந்த இளம்பெண்களாகிய எங்களுக்கு
- அறை - எல்லோரும் அறியச் சொல்லும்
- பறை - ரக்ஷணத்தை
- மாயன் மணிவண்ணன் - மாயம் செய்பவனும் அழகிய நிறத்தையுடையவனுமான கண்ணன்
- நென்னலே வாய் நேர்ந்தான் - நேற்று முடிவு சொல்லிவிட்டான்
- அதனால், துயிலெழப்பாடுவான் - தூக்கத்தினின்று எழுந்திருக்கத் திருப்பள்ளியெழுச்சி பாடும் பொருட்டு
- தூயோமாய் - பரிசுத்தமுடையவர்களாய்
- வந்தோம்
- அம்மா - நல்லவளே, நீ
- வாயால் - பேச்சினால்
- முன்னம் முன்னம் - மேலும் மேலும்

- மாற்றாதே - நாங்கள் திருப்பள்ளியெழுச்சி பாடுவதை தாமதிக்கச் செய்யாதே, வேறுபடுத்திவிடாதே
- நேய - நாம் அவனைச் சேவிக்க வரும்போது நம்மிடத்தில் நட்பைக்காட்டித் திறக்கும்
- நிலைக்கதவம் - நீண்ட கதவை
- நீக்கு - திற
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

முந்தின பத்து பாடல்களால் அதிகாலையில் எழுந்தவர்கள் மற்றவர்களையும் எழுப்பிக் கொண்டு ஸ்ரீவில்லிபுத்தூரில் உள்ள திருமுக்குளத்தையே யமுனை நதியாகக் கொண்டு, பகவத் த்யானத்தாலும், ஞானத்தாலும் தங்கள் மன மொழிகளையும், தண்ணீரில் தேய்த்துக் குளித்துத் தங்கள் சரீரங்களையும், ஆக மூன்றையும் சுத்தி செய்து கொண்டு, ஸ்ரீவடபத்ரசாயி கோயில் வாசலுக்கு வந்து சேருகிறார்கள். அதையே ஆயர்பாடிக்கு அதிபதியான நந்தனுடைய அரண்மனையாக உத்ப்ரேக்ஷிக்கிறார்கள். அங்கே வந்து வாசற்காப்பானைப் பார்த்து கோபுர வாசற் கதவைத் திறக்கச் சொல்லிக் கேட்கிறார்கள். பகவான் முதல் நாளே சிறுமியர்களாகிய தங்கள் விளையாட்டுக் கூட்டத்தில் வந்து, 'நீங்கள் எல்லாரும் மார்கழி நீராட்ட நோன்பை அனுஷ்டியுங்கள், நான் உங்களைக் காப்பாற்றுகின்றேன்' என்று தங்கள் விஷயமாக ரக்ஷண சங்கல்பத்தைத் தாங்களெல்லாரும் நன்றாக அறியும்படி உரத்துச் சொல்லிவிட்டதாகவும், அவனிட்ட கட்டளைப்படி தாங்களும் அவனுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடத் தங்களை பரிசுத்தர்கள் ஆக்கிக்கொண்டு வந்திருப்பதையும் சொல்லி, தங்களோடு வீண் வார்த்தைகள் பேசிக் காலம் தாமதிக்காமல் கதவைத்திறக்கும்படியும் கேட்கிறார்கள்.

ப்ரம்மமாக இருக்கும் பகவானின் சுத்த ஸத்வ நிலையில், ஆத்மாக்களுக்கு அவன் தெரியாமல், அவனைச்சுற்றி மறைத்துக் கொண்டிருக்கும் தத்வம் மாயையாகும். அவன் வ்யூகதசைகளில் வந்து, அனிருத்த ஸ்வரூபத்திலிருந்து மகானாகி, அதிலிருந்து பாஞ்ச பௌதிகமான ப்ரக்ருதியாக விரியும்போது, அவன் உள்ளே புருஷனாகவும், அவனை மறைத்துக்கொண்டிருப்பது ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களுடைய ப்ரக்ருதியாகவும் இருக்கும். பகவானை மறைத்துக்கொண்டிருக்கும் இவைகளை கோவில்களில் ப்ராகாரங்களாகச் சொல்வது மரபு.

பகவானை அறியும் வித்தைகள் கைவந்து (சித்தித்து) அவனை அடைய ப்ராப்தமுள்ள அதிகாரிகள் செல்லும் வழிகளே வாயில்கள். இந்த சிறுமியர்கள் எல்லாரும் சுத்த சித்தர்களாகிப் பகவத் ப்ராப்திக்கு அருகதை யுள்ளவர்களாக ஆகிவிட்டார்கள். இனி அந்தக் கதவைத் திறக்க வாசற்காப்போனை வேண்டுகிறார்கள். இந்த வாசற்காப்போனை ஆசார்யன் என்றும் கூறலாம், பகவத் ப்ராப்திக்கு அவன்தான் வழிகாட்டவேண்டுமாதலால். "சூழ்விசும் பணிமுகில்" என்று தொடங்கும் திருவாய்மொழி 10-ம் பத்து 9-ம் பதிகத்தில் சொல்லும் ஆதிவாஹிகர்கள் என்று கொள்ளினும் தகும்.

'நாயகனாய் நின்ற'வன் பஞ்ச லக்ஷம் குடிகளுடைய இடைச்சேரிக்குத் தலைவன் நந்தகோபன். அவனுடைய 'கோயில்' ராஜக்ருஹம். அதில் இரவில் தலைவாசல் மூடியிருக்கிறது. முன்னே கோபுரத்தை உடையதாய் இருக்கிறது. அந்த கோபுரத்தில் அரசருடைய பல வெற்றிக் கொடிகளும் பறந்து கொண்டிருக்கின்றன. அதுவும் தினந்தோறும் புதிது புதிதாக வாழை மரங்களாலும், மாவிலையாலும், தென்னோலைத் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு விளங்குவதைக் காட்ட 'தோரண வாயில்' என்றாள்.

'மணிக்கதவம்' என்றது 'அழகிய கதவு' என்றும், 'மணிகளால் நிறைந்து திறக்கும்போதும், மூடும்போதும் மிகுந்த ஒலியைச் செய்யும் கதவு' என்றும், 'நவரத்னங்களால் இழைக்கப்பட்ட கதவு' என்றும், 'இம்மூன்று குணங்களையுமுடைய கதவு' என்றும் பொருள் கொள்ளக்கிடக்கிறது. "தத: கபாடம் பாண்ட்யானாம் முக்தாமணி விபூஷிதம்" என்பதற்கு, முன்னோர்கள் 'முத்துக்களாலும், மணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட பாண்டிய மன்னர்களுடைய கதவுகள்' என்றே பொருள் செய்தார்கள். அதையும் நோக்குக.

சாதாரண வீடுகளில் போலல்லாமல் அரண்மனைகளிலும் கோயில்களிலும் உள்ள கதவுகள் காவற்காரர்களால் உள்ளேயும் தாளிடப்பட்டு, அவர்கள் திட்டி வாசல் வழியாக வெளியே வந்து, வெளியேயும் தாளிட்டுப், பூட்டிப் பாதுகாக்கப்படுவது நன்கு கண்டது. இந்த இரு வகைத்தாள்களையும் திறந்துவிடு என்கிறாள். சாஸ்த்ர ஞானத்தால் மாயை, ப்ரக்ருதிகளாகிய வெளிக்கதவுகளின் தாள்கள் திறக்கப்பட்டுப் போனவர்களுக்கும், ஆத்மஞானத்தால் உள்ளே போட்டிருக்கும் தாள் திறந்தாலன்றி பகவத் சாக்ஷாத்காரம் வராது. இதை,

*கதவு மனமென்றுங் காணலாமென்றுங்*
*குதையும் வினையாவி தீர்ந்தேன் - விதையாக*

*நற்றமிழை வித்தியென்னுள்ளத்தை நீ விளைத்தாய்*
*கற்ற மொழியாகிக் கலந்து.* (நான்முகன் திருவந்தாதி-81)

என்றார்கள். இந்திரியங்களில் ஆறாவதான மனது, புலன்களின் தத்துவங்களை வாங்கி, உள்ளே கொடுப்பதால் அதைக் 'கதவு' என்றும், 'உள்ளேயிருந்து ஒளியெழுந்தால்தான் சரண்யனைக் காணலாம்' என்றும், 'எம்பெருமான் நம்மாழ்வாராக அவதரித்துத் திருவாய்மொழியாகிய நற்றமிழைத் தன் மனத்தில் வித்தியதனால் அந்த ஞானம் எழுந்து, தான் அப்யஸித்த வேத சாஸ்த்ர ஞானங்களெல்லாம் இதற்கு எருவாகப் புஷ்டி கொடுத்துத், தன் மனத்தை எம்பெருமான் விளைத்தான்' என்றும், 'அதனால் அவனுடைய சாக்ஷாத்காரம் தனக்கு ஏற்பட்டது' என்றும்கூறி, உள் தாழ்ப்பாள் திறந்ததை, தத்துவங்களை உணர்த்தும் திருமழிசைப்பிரான் அருளிச் செய்திருப்பது இங்கே நோக்கத்தக்கது.

இங்கே 'ஆயர்' என்பது பசு மேய்த்து, அதன் கவ்வியங்களான பால், தயிர், வெண்ணெய், நெய்களை தேவதைகளுக்கு ஆகுதி கொடுக்கவும், எருமைகளை மேய்த்து, அவைகளின் பால், தயிர், வெண்ணெய், நெய்களை மனிதர்கள் உண்டு வளர்ந்து புஷ்டியாகும்படியும், ஆக, தெய்வகாரியங்களும், லோக காரியங்களும் நடப்பதால் உபய விபூதிகளுக்கும் இவர்கள் உபகாரிகள் என்னும் பொருளினதாகும். 'சிறுமியோம்' என்றது மிகப்பொருத்தம். வ்ரஜ பூமியில் மாடுகளை இடையர்கள் மேய்த்தார்கள், கண்ணன் மேய்த்தது கன்றுகளைத்தான். அதுபோல இளங் குட்டிகளாகிய எங்களை நீ மேய்த்துக் கட்டவேணும் என்று வேண்டுகிறார்கள். அதை அவனும் ஒப்புக் கொண்டுவிட்டான்.

'நெருநல்' என்னும் சொல் குழந்தைப் பேச்சில் 'நென்னெல்' என்று வந்தது. வாய் நேர்தல் - வாயால் சொல்லி ஒப்புக்கொள்ளல். அறை - எல்லாரும் அறியச் சொல்வது. இங்கே 'மாயன் மணி-வண்ணன்' என்றது மாயையால் மறைக்கப்பட்டிருக்கும் அவன், அவனிடம் சரண் புகுந்தவர்க்கு அவனுடைய சுயம் ப்ரகாசத்தைக் காட்டி, அந்த ப்ரகாசத்தால் ப்ரபன்னன் மாயையைத் தாண்டி அவனை அடைவான் என்று பொருள்.

"மாமேவ யே ப்ரபத்யந்தே, மாயாம் ஏதாம் தரந்திதே" (பகவத் கீதை 7-14) என்னையே எவர்கள் சரணமாக அடைகிறார்களோ அவர்கள்தான் மாயையைத் தாண்டுவார்கள் என்னும் கண்ணன் வாக்கியமும் நோக்கத்தக்கது.

ஆழ்வார் திருவடிகளில் அனன்யமான பக்தியைச் செய்து, அதனால் பரோக்ஷ ஞானத்தையும், வாக்விபவத்தையும் பெற்று, இராமாவதாரம் பாடிய கம்பன், யுத்த காண்டம், விபீடணன்

அடைக்கலப் படலம் 47-ம் பாடலில் பகவானுக்கு மனக் கோயில் கட்டிக் கொடுக்கிறான்:

*தருமமு ஞானமுந்தவமும் வேலியாய்*
*மருவரும் பெருமையும் பொறையும் வாயிலாய்க்*
*கருணையங் கோயிலுளிருந்த கண்ணனை*
*அருணெறியெய்திச் சென்றடி வணங்கினான்.*

என்கிறான். இந்தக் கோயிலின் வெளிமதிள் தர்மம். அந்த வழியே நடந்தால் அடுத்த உள்மதில் ஞானம். அதன் வழியே சிந்தித்தால் அதற்கடுத்த உள்மதிள் தபஸ். இதனைக்காணத் தவங்கிடந்து நோற்றால் அதற்குள்ளே ஒரு கர்ப்பக்ருஹம்; கருணை என்னும் த்ரவ்யத்தாலானது. அந்த த்ரவ்யத்துக்குள்ளே ஒரு ப்ரகாசம் தெரிகிறது. அந்தப் ப்ரகாசத்தில் கண்ணன் க்காணப்படுகிறான். இந்த மூன்று மதிள்களுக்குமே முன்புறத்தில் பெருமை என்ற கிழக்கு வாசலும், பின்புறத்தில் பொறுமையென்ற மேற்கு வாசலும் அமைந்திருக்கின்றன என்கிறான் கம்பன். இந்த மணிக் கதவங்களின் உட்தாழ்ப்பாள் அவனருளால் திறந்து, வெளித் தாழ்ப்பாள் ஆசார்யர்களால் திறந்து, நாமும் பாடுபட்டு அவனை அடைய வேணும் என்றபடி. இவைகள் எல்லாவற்றிற்கும் மார்க்கம் அவனருள் காட்டும் மார்க்கம் என்பது தோன்ற அருள் நெறி என்கிறான்.

'நிலைக்கதவ'த்துக்கு 'நேயம்' என்ற அடை மொழி கொடுத்தது, "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம், நத்யஜேயம் கதஞ்சந" வென்னும் இராமன் வாக்யத்தையொட்டி. "நாங்கள் நேயத்தோடு (நட்போடு) வந்திருக்கிறோம் இக்கதவு எங்களுக்குதவியாகத் திறக்குமேயன்றி சாத்தியிராது" என்று குறித்தபடி. (நீக்குதல் - தடையகற்றல்)

## *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

வடபெருங்கோயிலுடையான் ஸமீபம் வந்துவிட்டாயிற்று. வாயிற் காப்போனை வேண்டுகிறார்கள் - அவர்களை ஆசார்யர்கள் போலவும், ஆதிவாஹிகர்கள் போலவும் ஒப்பிட்டுக் காட்டுகிறார் இவ்வுரையாசிரியர். விபீஷணன் அடைக்கலப் படலப் பாட்டில் கம்பன் எழுப்பியுள்ள பாசுரக்கோயில் பார்க்க.



## பாசுரம் - 17

*அம்பரமே தண்ணீரே சோறே யறஞ்செய்யும்,*
*எம்பெருமான் நந்த கோபாலா! எழுந்திராய்,*
*கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே,*
*எம்பெரு மாட்டி யசோதாய்! அறிவுறாய்,*
*அம்பர மூடறுத் தோங்கி யுலகளந்த,*
*உம்பர் கோமானே! உறங்கா தெழுந்திராய்,*
*செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா,*
*உம்பியும் நீயு முறங்கேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- அம்பரமே - உடையும்
- தண்ணீரே - குளிர்ந்த நீரும்
- சோறே - உண்ணும் சோறும்
- அறஞ்செய்யும் - புண்ணியத்தைச் செய்வதற்கு ஹேதுவானவனும்
- எம் - எங்களுக்கு
- பெருமான் - தலைவனுமான
- நந்தகோபாலா - நந்தகோபாலனே
- எழுந்திராய் - விழித்தெழு
- கொம்பு அனார்க்கு எல்லாம் - பூங்கொம்புகள் போன்றவர்களாகிய ஸ்த்ரீகளுக்கெல்லாம்
- கொழுந்தே - இளந்தளிர் போல் எடுத்துக்காட்டாக உள்ளவளே
- குலவிளக்கே - பெண்டிர் குலத்துக்கெல்லம் ஒளி கொடுப்பவளே
- எம்பெருமாட்டி - எங்களுடைய பெருந்தேவியாகிய தேவியே
- யசோதாய் - யசோதைப் பிராட்டியாரே
- அறிவுறாய் - விழித்துக்கொள்
- அம்பரம் - வானத்தை
- ஊடு - நடுவே
- அறுத்து - கிழித்து
- ஓங்கி - அதற்கு மேலே வளர்ந்து
- உலகு - உலகத்தை
- அளந்த - திருவடியால் அளந்த
- உம்பர் கோமானே - தேவர்களுக்கெல்லாம் தேவனே
- உறங்கு - தூங்குகின்ற
- செம் - உயர்ந்த;பொன் தங்கத்தாலான
- கழல் - வீரக்கழலை அணிந்த

- அடி - திருவடிகளையுடைய
- செல்வா - செல்வமாய் வளர்க்கப்பட்டபிள்ளையாகிய
- பலதேவா - பலதேவனே
- உம்பியும் நீயும் - உன் தம்பியாகிய கண்ணனும் நீயும்
- உறங்காது எழுந்திராய் - இருவரும் தூங்காது எழுந்திருங்கள் (இங்கே உறங்கு செல்வா பலதேவா, உம்பியும் நீயும் உறங்காதெழுந்திராய் என்று அன்வயம்)
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

இது முதல் ஐந்து பாட்டுக்கள் பகவானை யெழுப்புவன. திருப்பாற்கடலில் ஆதிசேஷன் மேல் எம்பெருமான் நித்திரை செய்கிறான். அது யோக நித்திரை. நன்றாக விழித்துக்கொண்டு தூங்குகிறாற்போலவே படுத்துக்கொண்டு தன் புருஷ சக்தியாலே ஜகத் வ்யாபாரங்கள் அவ்வளவையும் நடத்துகிறான். பாம்பிற்கும் தூக்கம் கிடையாது. அதனால் 'உம்பியும் நீயும்' என்றது. ப்ரக்ருதியும் புருஷனும் சேர்ந்த ஒரே தத்துவம். இதைக்காட்ட பல தேவனையும் தேவ தேவனையும் ஒன்றாய் சேர்த்து 'உறங்காது எழுந்திராய்' என்று ஏக வசனத்தில் எழுப்புகிறாள். பலதேவனுக்கு உறங்கு என்னும் அடைமொழி கொடுத்தது, 'அங்கேதான் தூக்கமில்லையே, மனித வடிவத்தில் வந்திருக்கும் இப்போதாவது தூங்குவோமே யென்று தூங்குகிறாயோ' என்று கேட்டபடியுமாகும். பகுத்தறி வுள்ள சேதனர்கள் வினைகளைத் தெரிந்து செய்ய வேணுமென்று வேத சாஸ்த்ரங்கள் விதிக்கின்றன. ஏனெனில் வினைகளினால் வரும் பாப புண்ணியங்கள் அவர்களுக்கு உண்டு என்பது சாஸ்திரங்-களின் முடிவு. ஆனாலும் இவளுடைய பிதா பெரியாழ்வார் தம் திருமொழி 4-ம் பத்து 4-ம் பதிகம் 4, 5 பாடல்களின் பின்னிரண்டடிகளில்,

*நரகநாசனை நாவில் கொண்டழையாத மானிடசாதியர்,*
*பருகுநீரும் உடுக்கும் கூறையும் பாவஞ்செய்தன*
*தாங்கொலோ*

என்றும்,

*நேமிசேர் தடங்கையினானை நினைப்பிலா வலி*
*நெஞ்சுடை,*
*பூமி பாரங்கள் உண்ணும்சோற்றினை வாங்கிப் புல்லைத்*
*திணிமினே*

என்றும் ஐயப்பாடாகவும், பாவிகள் வயிற்றில் இந்நற்சோறு போகாமல் அந்தச் சோற்றைக் காப்பாற்றுங்கள் என்றும் பேசினார்.

முதற்பாட்டில் சொன்ன பாவம் நரகநாசனை நாவிற் கொண்டழையாதது. அதாவது பகவன் நாமாவைச் சொல்லாதது. பிந்தின பாட்டில் சொன்ன பாவம் நேமிசேர் தடங்கையினானை நினைக்காதது. இப்படி பகவத் சிந்தனமும், பகவத் பஜனமும் இல்லாதவர்கள் உண்ணும் சோறும், உடுக்கும் உடையும், குடிக்கும் நீரும், ஒருக்கால் பாவஞ்செய்தனவோ என்று அவர் சந்தேகித்துப் பாடுகிறார். ஆனால் இவளோ ஈசானா வானதால் ஆய்ப்பாடியில் உள்ள பஞ்ச லக்ஷம் குடிகளும் எப்பொழுதும் கண்ணனையே நினைத்துக் கொண்டும், அவனைப்பற்றியே பாடிக்கொண்டும், இருப்பதால் அவர்கள் உண்ணும் சோறும், உடுக்கும் ஆடையும், பருகும் நீரும் புண்ணியம் செய்தன, புண்ணியம் செய்கின்றன வென்று அறுதியிடுகிறாள்.அசேதன வஸ்துக்களும் பாகவத சம்பந்தத்தால் புண்ணிய வஸ்துக்களாகவும், துஷ்டசேர்க்கையால் பாபிஷ்டங்களாகவும் ஆகக்கூடும் என்கிறாள். இதை, குடை, தடிக்கம்பு, செருப்பு, வாகனம், கடுக்கன் முதலிய ஆபரணங்கள் போன்ற மற்ற எல்லா அசேதனப் பொருள்களுக்கும் ஆக்கிக் கொண்டு, அவைகளும் பாப புண்ணியம் செய்வனவாம் என்று பொருள் கொள்ளக்கிடக்கிறது.

பெருமாளைச் சேவிக்க மாதா பிதாக்களுடையவும், தமைய-னுடையவும் உதவியும், அன்பும் அவசியமானதானதால் அவர்-களையும் சேர்த்து எழுப்புகிறாள். மூன்றாவது பாடலில் 'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி' என்று தொடங்கியவள், அதையே திருப்பி 'அம்பர மூடறுத் தோங்கி யுலகளந்த' என்று கூறி, "அன்று வாமனனாக அவதரித்த நீ தானே இன்றும் குழந்தைக்கண்ணனாக அவதரித்திருக்கிறாய்?" என்று விளிக்கிறாள்.

'உம்பர்' - தேவர்கள். அவர்களுக் கெல்லாம், 'கோமான்' - அரசன். இவன் தேவதேவன்.

'விளையும் பயிர் முளையிலே' யென்றது போல, 'கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே' என்று இவனை இளம் எடுத்துக்காட்டாக, 'தர்ம மார்க்கத்தில் இள வயது முதல் நடப்பவர்களுக்கெல்லாம் கண்ணன் போன்ற குழந்தைகள் பிறக்கும்' என்ற குறிப்பு.

அங்க வைலக்ஷண்யங்களோடும் ஆபரணாதிகளோடும் விளங்கும் உத்தம ஸ்த்ரீகளுக்குப் பூக்கள் பூத்து மலர்ந்து விளங்கும் மரக்கிளைகளை உபமானமாகச் சொல்லுவது பழந்தமிழர் மரபு ஆனதால் 'கொம்பனார்க்கெல்லாம்' என்றாள். 'குலவிளக்கே' என்றது 'பெண்டிர் குலத்திற் கெல்லாம் தேஜஸை அளித்தவள்' என்றும், 'குலங்களுக் கெல்லாம் எடுத்துக்காட்டாக உள்ளவள்'

என்றும், 'விளக்கு' வழிகாட்டுவதாதலால் 'வழிகாட்டியாக உள்ளவள்' என்றும், மூன்று பொருள்களிலும் கொள்ளக்கிடக்கிறது.

திருவாய்மொழி எட்டாம்பத்து எட்டாம்பதிகம் நாலாவது பாசுரத்தில் ஸ்வாமி நம்மாழ்வார் "என் ஊனில் உயிரில் உணர்வினில் நின்றவொன்றை யுணர்ந்தேனே" என்கிறார். 'மனித சரீரத்தில் மாமிச பிண்ட ரூபமாகவும் அதிலே வ்யாபித்திருக்கும் உயிராகவும், அதில் உண்டாகும் உணர்வாகவும் பகவான் இருக்-கிறான். அவைகளில் நிற்கின்ற பகவானை நான் உணர்ந்தேன்' என்பது பாட்டின் பொருள். ஜீவன்களை எழுப்பிவிட்டு, கோயிலைத் திறக்கச்சொல்லி, நம்மாழ்வார் உணர்ந்த ஒருவனை, ஊனிலும், உயிரிலும், உணர்விலும் நின்ற அந்த ஒருவனை எழுப்பத் தொடங்கும் முதல் பாசுரம் இது.

இதில் 'அம்பரம்' என்பது ஆடை. அது உடலை மூடுவதுபோல் உயிரையும், உணர்வையும் உள்ளே வைத்து, அவைகளை மூடிக்கொண்டிருக்கும் மாமிச பிண்டத்தைக் குறிக்கும். 'சோறு' என்பது மனத்தைக் குறித்து, அதன் வழிச் செல்லும் உணர்வையும் குறிக்கும். சாந்தோக்ய உபநிஷத்து ஆறாவது அத்தியாயம், ஐந்தாவது கண்டத்தில் "அன்னம் அசிதம்" என்று தொடங்கி 'நாம் உண்ணும் கனபதார்த்தங்களின் அணிஷ்ட பாகம் மனசாக மாறுகிறது' என்று முதல் வாக்கியத்திலும், அடுத்த வாக்கியத்தில் "ஆப:பீதா:" என்று தொடங்கி 'நாம் குடிக்கும் ஜலபதார்த்தங்களின் சூக்ஷ்ம பாகமானது ப்ராணனாக மாறுகிறது' என்பதும் சொல்லப் பட்டிருக்கிறது. முதலாவது வாக்கியத்திலே 'கன பதார்த்தங்களின் மத்திய அம்சம் மாமிசமாக மாறுகிறது' என்றும் இருக்கிறது. ஆனதால் 'தண்ணீர்' என்பது உயிரையும் (2-வது வாக்கியம்) 'சோறு' என்பது மாமிச பிண்டத்தையும், மனத்தையும் (முதல் வாக்கியம்) குறிப்பன. அந்த மாமிசபிண்டத்தையே 'ரக்ஷணையாக எல்லாவற்றையும் மூடுகிறது' என்ற பொருளில் 'அம்பரம்' என்கிறாள். இதனால் 'எப்பொழுதும் கண்ணனையே நினைத் திருப்பதால் ஆயர்பாடியில் உள்ள ஐந்து லக்ஷம் குடிகளின் ஊனும், உயிரும், உணர்வும் அறஞ்செய்வன' எனக் கிடைக்கிறது.

நாயகனாகவும், உயிருக்குயிராகவும் சரீரத்தில் இருந்து, அரசு செலுத்தும் ஈசுவர தத்வத்தை எழுப்புகிறாள். இங்கே ஊனுடைய ஸ்தானம், நந்தகோபர், உயிரினுடைய ஸ்தானம் யசோதை, உணர்-வினுடைய ஸ்தானம் பலதேவர் என்று அன்வயித்துக் கொள்க.

இனி, புற உலகத்தில் பொய்கைமுனிவரும், 'வையந்தகளியா, வார்கடலே நெய்யாக, வெய்யகதிரோன் விளக்காக'க் கொண்டு பகவானைத் தேடினார். இவைகளை முறையே நந்தகோபனுக்கும்,

யசோதைக்கும், பலதேவருக்கும் அன்வயித்துக்கொள்க. பூதத்தாழ்வாரின் தகளியான 'அன்பு' நந்தகோபனுக்கும், நெய்யாகிய 'ஆர்வம்' யசோதைக்கும், இடுதிரியாகிய 'இன்புருகு சிந்தை' பலதேவருக்கும் இருப்பதும் காண்க.

இனி, சாஸ்திரத்தில் புகுந்தால் யம, நியம, ஆசன, ப்ராணாயாமங்கள் தன பாதத்தில் நிற்க, மூன்றாவதாகிய சத்திய பாதத்திலுள்ள 'ப்ரத்யாகாரம்', 'தாரணை', 'தியானம்', இவை மூன்றும் நந்தகோபனும், யசோதையும், பலதேவரும் ஆவார்கள். நாலாவதாகிய சித்தி பாதத்தில் 'சாக்ஷாத்காரம்' பிறந்து (அந்தர்யாமி) எட்டாவதாகிய 'சமாதி' நிலை ஏற்படுகிறது.

பரத்திலும், வ்யூகத்திலும் 'ஸேநைமுதலியா'ருடைய ஸ்தானம் நந்தகோபன், 'கருடனு'டைய ஸ்தானம் யசோதை, 'ஆதிசேஷ'னுடைய ஸ்தானம் பலதேவர். திருப்பல்லாண்டில் 'அடியோமோடும்' என்பது சகல சேதன வர்கங்களுக்கும், பிரதிநிதியான, பகவானைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஆதிசேஷனைச் சொல்வதும் கண்டு கொள்க. அர்ச்சையில் 'அர்ச்சகர்' நந்தகோபனும், 'பரிசாரகர்' யசோதையும், அந்தக் கோயிலுக்கு பாத்தியஸ்தரான 'ஸ்தானிகர்' பலதேவனாகவும் அமைவதையும் தெரிந்துகொண்டால், இவள் விபவத்தில் உள்ள கண்ணனை எழுப்புவது போல் பாடி, பரம், வ்யூகம், அர்ச்சை, அந்தர்யாமி என்று, மற்ற நாலு நிலைகளிலும் உள்ள பகவானையும் எழுப்புகிறாள்; இதை பக்தி மார்க்கத்திலும், யோக மார்க்கத்திலும் செய்யத்தொடங்குகிறாள் என்பதும் தெளிவாகும். இதுபோல் பகவானை எழுப்பும் மற்ற நான்கு பாசுரங்களுக்கும் கூடப் பொருள் கொளல் தகும்.

இந்தப் பாசுரத்தின் ஐம்பதாயிர அடி ஆழமுள்ள பொருளில் அரைக்காலடி இறங்கியுள்ளேன். இவள் பாசுரங்கள் 'கோதைத் தமிழ்' என்ற தனித் தமிழால் ஆகியிருப்பது. இது 'வேத மனைத்துக்கும் வித்தாகும்' என்பதும், மற்ற மேன்மைகளும் கற்றுப் புலனாவன.

## விசேஷக் குறிப்பு *(Dr. VNV)*

பாசுரங்கள் 17-21 ஐந்தும் பகவானை எழுப்புபவை. முதலில் முன்கட்டில் உறங்கும் நந்தகோபன், யசோதையை. பிறகு பலதேவனையும் கண்ணனையும்.

உறங்கு செல்வா - ஆதிசேஷனாகிற பலதேவனுக்குக் குறிப்பு. ஆதிசேஷ நிலையில் உறக்கமே கிடையாது. பலதேவனாக இப்போதுதான் ஓய்வு என ரஸமாகக் காட்டுகிறார்.

'அம்பரமே, தண்ணீரே, சோறே அறம் செய்யும் - பகுத்தறிவுள்ள சேதனன் திறத்தில் அறியாமல் செய்தாலும் பாபம் ஒட்டும். புண்ணியமும் அங்ஙனமே ! பெரியாழ்வார்,

'நரகநாசனை நாவில் கொண்டழையாத மானிடசாதியர் பருகு நீரும் உடுக்கும் கூறையும் பாவஞ்செய்தனதாங்கொலோ !' என்றும்,

'நேமிசேர் தடங்கையினானை நினைப்பிலா வலி நெஞ்சுடை பூமி பாரங்கள் உண்ணும் சோற்றினை வாங்கிப் புல்லைத் திணிமினே' என்றும் கூறுகிறார்.

இவ்விடத்தில் நாச்சியார் 'ஆயர்பாடி மக்கள் தம் உயர்ந்த பாவத்தால் தாம் உண்ணும் சோறும் பருகும் நீரும் உடுக்கும் ஆடையும் புண்ணியம் செய்தன என்று கூறும்படி உள்ளதாக விஸ்மயிக்கிறாள்.

ஸ்ரீ N.R.K. ஸ்வாமி விசேஷ நிர்வாஹமாக, ஆயர் மக்களின் ஊன், உயிர், உணர்வு எல்லாம் அறஞ்செய்வன என்று கூறி, நம்மாழ்வாரின் 'ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றை யுணர்ந்தேனே' (8.8.4) என்பதுடன் இணைத்து 'அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும்' என்ற பாசுரத்தை விரித்து விளக்குகிறார். ஆழ்ந்து, படித்து, அனுபவிக்கவேண்டியதாகும்.



## பாசுரம் - 18

*உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்,*
*நந்தகோ பாலன் மருமகளே ! நப்பின்னாய்,*
*கந்தம் கமழும் குழலீ ! கடைதிறவாய்,*
*வந்தெங்கும் கோழியழைத்தனகாண், மாதவிப்*
*பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்,*
*பந்தார் விரலி ! உன் மைத்துனன் பேர்பாடச்,*
*செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப,*
*வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- நந்தகோபாலன் - நந்தகோபாலனுடைய
- மருமகளே - நாட்டுப்பெண்ணாகிய
- கந்தம் - வாசனைகளெல்லாம்

- கமழும் - வீசுகின்ற
- குழலீ - கூந்தலையுடையவளே
- நப்பின்னாய் - நப்பின்னைப் பிராட்டியே
- எங்கும் வந்து - எல்லா இடங்களிலும் திரிந்து
- கோழி - சாமக் கோழிகள்
- அழைத்தனகாண் - கூவின பார்
- மாதவி - மாதவிக் கொடிகள் படர்ந்த
- பந்தர்மேல் - பந்தல்களின் மேலே
- பல்கால் - பலதரமும்
- குயிலினங்கள் - குயில்களின் கூட்டங்கள்
- கூவின காண் - இனிய ஒலியைச் செய்கின்றன பார்
- பந்த - எல்ல சம்பந்தங்களும்
- ஆர் - நிறைந்த
- விறலி - பகவத் குணங்களை விறல்படப் பாடியாடும் பெண்ணே
- உந்து - அந்தர்யாமியாயிருந்து தானே செலுத்துகிற
- மதகளிற்றன் - சேதனர்களுடைய மதம் பிடித்த யானைகளாகிய இந்திரியங்களையுடையவன்
- ஓடாத - சிறிதும் குறையாத
- தோள்வலியன் - தோளின் பலத்தையுடையவன் (ஆகிய)
- உன் மைத்துனன் பேர்பாட - உன்னுடைய பர்த்தாவாகிய கண்ணனுடைய நாமங்களையும் கீர்த்திகளையும் பாட
- சீரார் - சிறப்புகளெல்லாம் நிறைந்த
- வளை - உன் கைவளைகள்
- ஒலிப்ப - சல சலவென்று சப்திக்க
- செந்தாமரைக்கையால் - சிவந்த தாமரை போன்ற உன் கையால்
- கடை திறவாய் - கடைவாசல் தாழ்ப்பாளைத்திறவாய்
- மகிழ்ந்து - ஆனந்தமுடையவளாய்
- வந்து - சீக்கிரமாகவந்து
- திறவாய் - திறக்கக்கடவது
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

முன்பாட்டில் நந்தகோபனையும், யசோதையையும், பலதேவனையும் எழுந்திருக்கும்படி பாடியவள், பெருமாளையும் துயிலெழும்படி ப்ரார்த்தித்தாள். இப்போது நப்பின்னையை ப்ரார்த்திக்கிறாள். அவளையே உள்தாழ்ப்பாளைத் திறக்கும்படி வேண்டுகிறாள். அவள் புருஷகாரபூதையானதால் பகவானுடைய க்ருபையை அவளே திறந்துவிட வல்லவள். பகவானோடு சர்வவித பாந்தவ்யமும் உடை-யவளாய், நப்பின்னை தானும் இரவும் பகலும் அவன் கீர்த்திகளைப்

பாடிக்கொண்டும், ஆடிக்கொண்டும் பொழுது போக்குபவள். இங்கே வந்திருக்கும் சிறுமியர்களும் அவனுடைய நாமங்களையும், கீர்த்திகளையும் பாடும்பொருட்டே வந்துள்ளனர். ஆனதால் தங்க ளோடும் சேர்ந்து பாடியாட அவளும் மகிழ்ந்து வந்து திறக்க வேணும் என்று ப்ரார்த்திக்கிறாள்.

*வாரி சுருக்கி மதக்களி றைந்தினையுஞ்*
*சேரி திரியாமல் செந்நிறீஇ, கூரிய*
*மெய்ஞ்ஞானத்தாலுணர்வார் காண்பரே மேலொருநாள்*
*கைந்நாகம் காத்தான் கழல்.*
(*முதல் திருவந்தாதி, பாடல் 47*)

என்பது பொய்கையாழ்வார் நிர்வாஹம். ரத்த விறு விறுப்பினால் தத்தம் புலன்களைக் கொண்டு, இழிந்த பொருள்களில் திரிந்து, ஆத்மாவின் உஜ்ஜீவனத்தை அழிக்கும் இந்திரியங்களை, 'மதம் பிடித்த யானைகள்' என்கிறார். இந்த இந்திரியங்களை பகவத் அதீனமாக்க வேண்டும். அப்படிச் செய்யும்போதே அவைகள், 'இழிந்த இடங்களில் திரிந்து, புலன் படிந்துண்ணும் போகமே பெருக்கிப் போக்கினேன் பொழுதினை வாளா' என்று திருமங்கை மன்னன் சோகிப்பதுபோல் அல்லாமல், எம்பெருமானே அவைகளை நேரான வழியில் நடத்துவான்; அவைகளும் பகவத், பாகவதபரமாக வர்த்தித்து, ஆத்மாவுக்கும் உஜ்ஜீவன ஹேதுக்களாக ஆகும் என்கிறார் பொய்கையாழ்வார்.

இதுவே பாரதந்திரியத்தின் ஞானமும், அனுஷ்டானமும் ஆகும். இங்கே 'வாரி சுருக்கி' யென்றது வ்ரதானுஷ்டானங்களால் வயிற்றை ஒடுக்கி ரத்தத்தின் விறு விறுப்பைக் குறைத்தல். இவர்கள் நெய்-யுண்ணோம் பாலுண்ணோம் என்று ஏற்கனவே வ்ரதம் எடுத்துக் கொண்டு, அந்த விறு விறுப்பைக் குறைத்து, இந்திரியங்களை பகவத் அதீனமாக ஆக்கிவிட்டவர்களானபடியால், இவர்களுடைய இந்திரியங்களாகிய மதம் பிடித்த யானைகளின் மதத்தை யடக்கிக் கண்ணனே அந்த இந்திரியங்களை இப்போது நடத்துகிறான். ஆனதால் மேலொருநாள் யானையைக் காப்பாற்றினவனுடைய திருவடிகளைக் காண்பதற்குத் தாங்கள் அருகதை யுடையவர்கள் என்பதை 'உந்து மதகளிற்றன்' என்னும் சொற்களில் காட்டுகிறாள்.

எவ்வித பெருமை படைத்த அசுர, ராக்ஷஸ சக்திகளுக்கும் குறையாத புஜ பலமுடையவன் என்பதை 'ஓடாத தோள்வலியன்' என்று காட்டி, அசுர சக்திகள் நம்மேல் எவ்வளவு தீவிரமாக வந்தாலும் அவைகளையெல்லாம் அழித்து நம்மை காப்பாற்றுவான் என்று உறுதி கூறுகிறாள்.

'பந்த' - பகவானோடு சேர்க்கைகள். 'ஆர்' - நிறைந்த. "பகவானோடு நீக்க முடியாத, எங்களைப் போன்ற ஆத்ம சம்பந்தத்தோடு கூட, அவன் பத்தினியாகிய திருமேனி சம்பந்தத்தையும் உடையவளே" என்கிறாள். "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன் மக்களும் மேலாத்தாய் தந்தையுமவரே யினியாவாரே" என்னும் திருவாய்மொழி 5-ம் பத்து 1-ம் பதிகம் 8-ம் பாட்டு ஈற்றடிகளையும் நோக்குக. 'பந்தார்' என்பதற்கு பந்து+ஆர் என்று பிரித்து 'எல்லா பந்தத்வமும் நிறைந்த' என்று பொருள் கொள்ளினும் அமையும். இவ்விரு சேர்க்கையாலும் எங்களைப் போலன்றி அவனுடைய சேர்க்கை முற்றுப் பெற்றவளே யென்பது பொருள்.

1. 'விறலி' - 16 வயதுப் பெண்

2. 'பாடல் மகடூஉ' - (பாணர் மகள்) 'விறல்' படப் பாடியாடும் மகள். (விறல் - பெருமை, வலி, தீரம், வெற்றி)

இவை இவ்விரண்டு சொற்களுக்கும் நிகண்டுப் பொருள்கள். 'பாணன்' என்பதற்குப் பெண்பால் 'விறலி' என்பது சங்கநூற் பிரயோகம். அதற்குப் 'பொழுதுபடவும், இரவுபடவும் பாடுபவள்' என்று பொருள். பெருமாளுடைய சம்பூர்ண சம்பந்தம் ஸித்தித்து, அவனுடைய நாம சங்கீர்த்தனம் செய்து கொண்டும், குண சேஷ்டிதங்களைப் பாடி, ஆடியும் "குருந்தமொன்று ஒசித்தானொடுஞ் சென்று கூடியாடி விழாச்செய்து", இவள் பகலையும் இரவையும் கழிப்பவளாதலின், "எங்களோடும் சேர்ந்து ஆடிப்பாட நீ மகிழ்ந்து கதவைத்திற" என்றழைக்கிறாள். 'நாங்களும் உன் மைத்துனன் பேர் பாடுகிறோம்' என்று தாங்களும் கலந்து கொள்ள ஹேது கற்பிக்கிறாள். (கடை திறத்தல் - கடைவாயில் திறத்தல்)

'கோழியழைத்தது' - 'இரவின் 4-ம் ஜாமம் முடிவடைந்து, பகலின் முதற் ஜாமம் தொடங்குகிறது' என்று கோழி கூவும் ஒலி கேட்கிறது. இதை ஜாமக்கோழியென்பர்.

"உந்தன்னோடு உறவேல் நமக்கிங்கு ஒழிக்கவொழியாது" என்னும் 28-வது பாடலின் வாக்கியத்தால் எல்லா ஆன்மாக்களுக்கும் பகவானோடு உள்ள ஆத்ம சம்பந்தம், பகவானாலுங்கூட ஒழிக்க முடியாதது என்பது பெற்றாம். நப்பின்னைக்கு மற்றொரு சம்பந்தமாகிய திருமேனி சம்பந்தமும் சித்தித்து விட்டபடியால் சேர்க்கை பரிபூர்ணமாயிற்று என்பது தோன்ற 'பந்தார் விறலீ' என்று விளிக்கிறாள். நந்தகோபனும், யசோதையும், பலதேவனும் பகவானுக்கு இட்ட வழக்காக நிற்பவர்களானதால் அவர்களை யெழுப்பச் சொல்வதிற் பயனில்லையென்று பகவானுடைய இஷ்ட மஹிஷி நப்பின்னைப் பிராட்டியைக் கூவி எழுப்புகிறாள். "நீ இரவு

படப் பாடுகிறவளும் பகவானோடு எல்லா உறவும் உடையவ ளானதால் நீ எழுந்து வா" என்று எழுப்புகிறாள்.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

'நப்பின்னாய்' கடைவாசல் தாள் திறவாய்' - புருஷகார ப்ரார்த்தனை என வருணிக்கிறார்.

'உந்து மத களிற்றன் ஓடாத தோள் வலியன்' - அந்தர்யாமியாக நின்று, சேதனர்களின் மதம்பிடித்த யானைகளையொத்த இந்திரி-யங்களை அடக்கித் தானே செலுத்த வல்லவன்.

இப்படிச் சுவையாக அனுபவித்து 'வாரி சுருக்கி' (முதல் திருவந்தாதி, 47) என்ற பாசுரத்தைக் கொண்டு விளக்குகிறார்.

விரதாதிகள், யமநியமாதிகள், உடல் சுருக்க உதவும். ரத்தத்தின் விறுவிறுப்பைக் குறுக்கி, இந்திரியங்களை அடக்-கினால், மேலொருநாள் கஜேந்திர ரக்ஷணம் செய்தவனின் ரக்ஷணம் பெறலாம்.

இதில் 'பந்தார் விறலி' என்று பாடம் தேர்கிறார் ஸ்வாமி. "இது சுவை மிகுந்து, பொருத்தமாயுமுள்ளது" என்று இதுவரை 'விரலி' என்று அனுஸந்தித்து வந்தவர்களும் ஒப்புக்கொள்ளும் வகையில் ஸ்வாமியின் விளக்கம் அமைந்துள்ளது.

பந்த-ஆர்-விறலி என்பது 'பந்தார் விறலி' என வரும். 'விறலி' என்றால் பதினாறு வயதுப் பெண்.

பாணர் மகள்; பாடியாட வல்லவள் என்பது தமிழ் நிகண்டுகள் மூலம் அறியப்படும்.

பெருமாளோடு பந்தம்மிக்கவள், எல்லாவித பந்தத்வமும் பொருந்தியவள். விறல்பட (பெருமை ஏற்படும் விதமாக)ப் பாடி யாடுபவள்.

'நீ இரவு முழுதும் அவன் புகழ்பாடுபவள். ஸர்வவித ஸம்பந்த முடையவள். நீ எழுந்துவா'!என்று வேண்டி.

இதன் மூலம் புருஷகாரத்வம் பெறக் கேட்கிற பாசுரம்.



## பாசுரம் - 19

குத்து விளக்கெரியக் கோட்டுக்காற் கட்டில்மேல்,
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி,
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்,
வைத்துக் கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்,
மைத்தடங் கண்ணினாய்! நீயுன் மணாளனை,
எத்தனை போதும் துயிலெழ வொட்டாய்காண்,
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்,
தத்துவ மன்று தகவேலோ ரெம்பாவாய்.

### பதவுரை

> குத்து விளக்கெரிய - நாற்புறமும் குத்து விளக்குகள் எரிந்து கொண்டிருக்க
> கோடு - யானைதந்தத்தால் செய்தமைக்கப்பட்ட
> கால் - நாலு கால்களையுடைய
> கட்டில் மேல் - கட்டிலின் மேல்
> மெத்து என்ற - மிருதுவாயிருக்கிற
> பஞ்ச சயனத்தின் மேலேறி - ஐந்து மெத்தைகள் ஒன்றன் மேல் ஒன்றாகப் போட்ட படுக்கையின் மேலேறி
> கொத்து - பூங்கொத்துகள்
> அலர் - மலர்ந்த
> பூம் - அழகிய
> குழல் - கூந்தலையுடைய
> நப்பின்னை - நப்பின்னை பிராட்டியினுடைய
> கொங்கை மேல் - முலைகளின் மேல்
> வைத்து - பொருத்தி
> கிடந்த - படுத்திருக்கிற
> மலர் - பிரகாசிக்கிற
> மார்பா - திருமார்பையுடையவனே
> வாய் திறவாய் - வாயைத்திறந்து பேசக்கடவை
> மை - மையணிந்ததும்
> தடம் - பெரியதுமான
> கண்ணினாய் - கண்ணையுடையவளே
> நீ;உன் மணாளனை - உன்னுடைய புருஷனை
> எத்தனை போதும் - எவ்வளவு காலமும்
> துயில் எழ - தூக்கத்திலிருந்து எழுந்திருக்க
> ஒட்டாய் காண் - அனுமதிக்க மாட்டாய் போலும்

> எத்தனையேலும் - எவ்வளவும் கூட
> பிரிவு - பிரிந்திருத்தலை
> ஆற்ற கில்லாயால் - பொறுக்க மாட்டாய் போலும்
> தத்துவம் - இது லக்ஷ்மீ தத்துவமும்
> தகவு - அவளுடைய சொரூபத்துக்கு தக்கதும்
> அன்று - அல்ல
> ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

மேலே சொன்ன இரண்டு பாட்டுகளாலும் கதவும் திறவாமல், பகவானும் துயிலெழாமல் தங்களை வெளியே காக்க வைத்-திருப்பது, லக்ஷ்மீ தத்துவத்தின் பெருமைக்கும், அவளுடைய சொரூபத்துக்கும் விரோதமாக நப்பின்னை நடந்து கொள்ளும் நடவடிக்கையோ என்று சந்தேகித்து இந்த ஐந்து பாட்டுகளின் நடுப்பாட்டில் அந்த தத்துவத்தையும் தகுதியையும் நப்பின்னைக்கு விஞ்ஞாபிக்கிறாள்.

அந்த லக்ஷ்மீ தத்துவமாவது, எம்பெருமானின் திருவடியை யடைய விரும்பும் எல்லா சேதனர்களுக்கும் அவள் புருஷகார பூதையாயிருந்து, ‘அந்தச் சேதனர்களுடைய பாப தோஷங்களை யெல்லாம் கணிசியாமல் மன்னித்து அவர்களுக்கு தேவரீர் திருவடிகளை யளித்து மோக்ஷ ப்ராப்தியை உதவ வேணும்’ என்று பகவானைப் ப்ரார்த்திப்பதாகும். இவ்விதம் செய்ய வேண்டியதே நப்பின்னையின் ஸ்தானத்திற்குத் தகுந்த ஸ்வரூபம் என்பதையும் விஞ்ஞாபிக்கிறாள்.இவளுடைய போகாதிசயத்தில் அவன் மயங்கிக் கிடக்க, அவனுடைய போகாதிசயத்தில் இவளும் மயங்கிக் கிடந்தால் ஆத்மோஜ்ஜீவனப் பசியால் வருந்தும் குழந்தை-களெல்லாம் அழிந்து போய்விடுவன அல்லவா? “இது உன் தாய்த் தன்மைக்கு ஏற்குமா?” என்பது புலப்பட ‘தகவு’ என்கிறாள். (தகவு - தகுதி.)

“அவன் வேண்டுமானாலும் விமுகனாக இருக்கட்டும், எங்கள் குரலைக் கேட்டவுடன் தாயாகிய நீ எங்களை எடுத்தணைத்து எங்களுக்கு ஆவன செய்ய வேண்டாமா?”என்று குழந்தை-களுக்குள்ள ப்ரக்ருதி நிஷ்டமான பாத்தியத்தின் பேரில் வாதாடு-கிறாள். இங்கே பெருமாள் திருமொழி-5ம் பதிகம் முதல் பாட்டு “அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன் அருள் நினைந்தே அழும்குழவி அதுவே போன்றிருந்தேனே” என்னும் குலசேகரப் பெருமாள் அருளிச்செயல் முக்கிய அனுசந்தேயம். ‘மிகுந்த கோபத்தால் பெற்றதாய் அந்தக் குழந்தை தனக்கு

வேண்டவே வேண்டாம் என்று அடித்துத் துரத்தித் தூக்கி யெறிந்து விட்டாலும், அவள் வயிற்றில் கிடந்த தன்னிடத்தில் அவளுக்கு எப்போதும் அருள் உண்டு என்று இந்தக் குழந்தை நினைந்து அழுது கொண்டிருப்பது போல் நாங்களும் தாயாகிய உன்னைப் பிரார்த்திக்கிறோம்' என்றபடி. "எங்களுடைய உஜ்ஜீவனத்துக்காக நீ கொஞ்சம் பெருமாளையும் துயிலெழ அனுமதிக்க வேணும். அவனுடைய பிரிவை நீ பொறுக்க முடியாதவள் ஆதலால் எங்க-ளோடும் சேர்ந்து அவனை பஜித்து ஆடிப்பாடி அனுபவி" என்கிறாள்.

'குத்துவிளக்கெரிய' முதலானவை செல்வத்தின் மிகுதி யையும், ராஜ போகத்தின் தத்துவத்தையும் விளக்குகின்றன. 'பஞ்ச சயனம்' என்றது, நார்கள் அடைத்த மெத்தை அடியிலும், அதன் மேல் பருத்தியடைத்த மெத்தையும், அதன் மேல் மெதுவான கம்பளி நூல் இழைகள் அடைத்த மெத்தையும், அதன்மேல் சுத்தமான பஞ்சு அடைத்த மெத்தையும் எல்லாவற்றிற்கும் மேல் ஐந்தாவதாக ஹம்ஸம் முதலான பக்ஷிகளின் இறகுகளின் மிருதுவான பாகங்-களைக் கத்தரித்து அடைத்த மெத்தையும் ஆக ஐந்து மெத்தைகள் போட்டு அதன் மேல் சய்யாபுஞ்சனை படுக்க வைத்தது 'கதா சரித் சாகர'த்தில் ப்ரஸித்தம். இந்த அரசர்களின் படுக்கையை மனத்திற் கொண்டு பஞ்சசயனம் என்கிறாள்.

'நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா' என்பதின் பொருள் விளங்க,

*வெற்றிக்கருளக்கொடியான்றன் மீமீதாடாவுலகத்து*
*வெற்ற வெறிதே பெற்ற தாய் வேம்பேயாக வளர்த்தாளே*
*குற்றமற்ற முலைதன்னைக் குமரன்*
*கோலப்பணைத்தோளோடு*
*அற்ற குற்றமவை தீர அணைய வமுக்கிக் கட்டீரே.*

என்ற நாச்சியார் திருமொழி 13-ம் பதிகம் 7-ம் பாசுரம் இங்கே அனுஸந்தேயம்.

'வாய் திறத்தல்'-வாய் என்னும் சொல்லுக்கு வழி யென்னும் பொருளுண்டு. ஆனதால் நீ எழுந்தருளி எங்கள் உஜ்ஜீவனத்துக்கு வழி திறவாய் எனினும் பொருந்தும்.

'மைத்தடங்கண்ணினாய்' என்பதில் மை என்பதற்கு மையல், மயக்கம் என்று பொருள் கொண்டு பகவானையுமே அகன்ற தன் கண்களின் அழகில் மயங்கிக் கிடக்கும்படி செய்தவள் என்று பொருள் கொள்ளினும் பொருந்தும். கண் வலையை வீசி, மாய வலையால் மோஹ வாரிதியில் ஆடவரை ஆழ்த்திடல் பெண்டிர் குணமும் செயலுமாதல் ப்ரஸித்தி. பெண்டிருக்குக் கண்ணழகும்,

முலையழகும் ஆடவர் கடக்கமுடியாத தளை(கட்டு)களாதலின், தடங்கண்ணையும், கொங்கையையும் குறிப்பாகச் சொல்லி தோள், உதடு முதலான மற்ற அங்கங்களின் சௌஷ்டவத்திலும் இவன் மயங்கிக் கிடக்கும் அவஸரத்திற்கு லக்ஷணையாகப் பேசுகிறாள். இனி இவளே விரும்பினாலன்றி அவன் தங்களுக்கு இரங்கான் என்னும் மனோநிலையில் பேசுகிறாள்.

அவள் எழுந்து வராதது கண்டு மறுபடியும் கண்ணனை எழுப்பி அவனுடைய இஷ்ட மஹிஷியும், லோக மாதாவுமான நப்பின்னையை, அவள் ஸ்வரூபத்தையும் ஞாபகப்படுத்தி அவள் தன் குழந்தைகளை மறந்து தூங்குவதும் தகுதியல்ல என்றும் வற்புறுத்துகிறாள்.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

மரபுவழிவந்த உரைகள் 'பஞ்ச சயனம்' என்பதற்கு ஐந்து குணங்-களைக் கூறி வந்துள்ளன.

ஸ்வாமி ஸம்ப்ரதாய வரைமுறை - மரபுகளை அறிந்துள்ளது போலவே, தமிழ் மொழியில் இலக்கிய - இலக்கண - அலங்கார நூல்களில் தேர்ச்சி மிக்கவராதலால், வேறொரு பொருள் கூற விழைந்துள்ளதை வாசகர் உணர்ந்து சுவைக்க வேண்டும்.

'பஞ்ச சயனத்தின்' - அடுக்கடுக்காக ஐந்து மெத்தைகள். அதற்குரிய மேற்கோளும் காண்க.

'வாய் திறவாய்' - எங்கள் உய்விற்காக ஒருவழி திறவாய்.

'மைத்தடங்கண்ணினாய்' - மயக்கம் தந்து கண்ணனை வசீகரித்து விட்டவளே ! நீ விரும்பினாலன்றிக் கண்ணன் இரங்க வாய்ப்பில்லை ! என்ற பாவம்.

நப்பின்னை லோக மாதா. அவளை நமக்காகக் கெஞ்சுகிறாள் ஸ்ரீ ஆண்டாள்.



## பாசுரம் - 20

*முப்பத்து மூவ ரமர்க்கு முன்சென்று,*
*கப்பம் தவிர்க்கும் கலியே துயிலெழாய்,*
*செப்ப முடையாய்! திறலுடையாய், செற்றார்க்கு*
*வெப்பங் கொடுக்கும் விமலா! துயிலெழாய்,*
*செப்பென்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்,*
*நப்பின்னை நங்காய்! திருவே துயிலெழாய்,*
*உப்பமும் தட்டொலியும் தந்துன் மணாளனை,*
*இப்போதே யெம்மைநீ ராட்டேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- அமரர்க்கு - தேவதைகளுக்கு !
- முப்பத்து மூவர் - 33 சேனாதிபதிகளின்
- முன் சென்று - முன்னாலே தான் முதல்வனாகச் சென்று
- கப்பம் தவிர்க்கும் - தேவதைகள், அசுர ராக்ஷஸர்களுக்குக் கப்பம் கட்டுமாறு இருந்த நிலையை ஒழிக்கும்
- கலியே - தீங்குகளுக்கெல்லாம் தீங்கு செய்பவனே
- துயிலெழாய்
- செப்பமுடையாய் - செம்மையுடையவனே
- திறலுடையாய் - வலிமையுடையவனே
- செற்றார்க்கு - உன்னை எதிர்த்துவந்தவர்க்கு
- வெப்பம் கொடுக்கும் - சூடு கொடுத்துத் தவிக்கச் செய்யும்
- விமலா - குற்றமற்றவனே
- துயிலெழாய்
- செப்பு அன்ன - தங்கக் கிண்ணி போன்ற வடிவுடைய
- மென் - மிருதுவான
- முலை
- செவ்வாய் - சிவந்த வாயையும்
- சிறுமருங்குல் - இளைத்த இடையையும் (உடையவளாகிய)
- நப்பின்னை நங்காய் - நப்பின்னையாகிய
- திருவே - லெக்ஷ்மிகரமாயுள்ளவளே
- துயிலெழாய்
- உப்பமும் - ஆடல் பாடல்களும்
- தட்டொலியும் - தாளக்கருவிகளைத்தட்டியெழுப்பும் சப்தங்களையும்
- உன் மணாளனை - கண்ணனுக்கு
- தந்து - கொடுத்து

> இப்போதே - இப்பொழுதே
> எம்மை - எங்களை
> நீராட்டு - நீராட்டும்படியாகச் செய்
> ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

அஷ்ட வசுக்களும், ஏகாதச ருத்திரர்களும், த்வாதச ஆதித்-யர்களும், இரண்டு அச்வினி தேவதைகளும் ஆக 33 பேர்களும் 33 கோடி அமரர்களுக்கும், சேனாதிபதியாவார்கள். அசுர, ராக்ஷஸ சக்திகள் களையாக மண்டி, தெய்வீக சக்திகளைக் கீழ்ப்படுத்தி, ஹிரண்யகசிபுவுடையவும், இராவணனுடையவும் இராஜ்ஜிய காலங்களைப்போல் நடந்தபோது, தேவதைகள் அவர்களுக்குக் கப்பம் கட்டி, சிற்றரசர்களாக வாழ்ந்து வந்தார்கள். சரண்யன் தேவதைகளுக்கு அபயம் கொடுத்து தேவதைகளை அசுர ராக்ஷஸர்களோடு போருக்கு எழுப்பிக்கொண்டு, தான் முதலிலே செல்ல, அவன் அடியை பிடித்து 33 கோடி தேவ சைன்யங்களும், அதனதன் அதிபர் தலைமையின் கீழ் சென்று, சரண்யனுடைய அருளால் அசுர ராக்ஷஸர்களை வென்று, அதன் மூலம் தேவதைகள் கப்பம்கட்டிச் சிறுவாழ்வு வாழும் அவமானமான நிலையை நிவர்த்திக்கிறான் என்பது பொருள். திருக்குறளில் 103-வது அதிகாரத்தில் 3-வது குறளில்

*குடி செய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்*
*மடிதற்றுத்தான் முந்துறும்*

என்று வள்ளுவர் பணித்தார். அதற்குப் பரிமேலழகர், ‘குடி செய்வல் என்னும் ஒருவற்கு - என்குடியினையுயரச் செய்யக் கடவேன் என்றுகொண்டு, அதற்கேற்ற கருமங்களில் முயலும் ஒருவனுக்கு, தெய்வம் மடிதற்றுத்தான் முந்துறும் - தெய்வம் ஆடையைத் தற்றுக் கொண்டு தான் முந்துற்று நிற்கும். இங்கே முயற்சியை அதன் காரணத்தால் கூறினார். தற்றுதல் - இறுக உடுத்தல். முன் நடப்பார் செயல் நியதிமேலேற்பட்டது’ என்று பொருள் கூறுகிறார்.

தெய்வத்தின் உதவியின்றி எவ்வளவு உபகரணங்களோடு முயற்சித்தாலும், மனிதன் எடுத்த காரியத்தில் வெற்றி பெறலரிது. தெய்வத்தின் உதவியால்தான் வெற்றி பெறக்கூடும் என்கிற இதே கருத்தைக் கண்ணன் கீதை 18-வது அதிகாரத்தில் 14-வது ச்லோகத்தில்

*அதிஷ்டானம் ததா கர்த்தா, காரணம் ச ப்ருதக்விதம்*
*விவிதா ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம்*

என்று கார்யாரம்ப, நிவாரண, பலோதய பருவங்களை விஸ்தரித்துக் கூறினான். மற்றைய நாலும் அமைந்தவிடத்தும் ஐந்தாவதாக

தெய்வத்தின் உதவி வேண்டும் என்றான். இவ்வளவு கருத்துக் களையும் உள்ளடக்கி 'முன் சென்று' என்றாள்.

33 தேவர்களை நம்மாழ்வார் பெரிய திருவந்தாதி 10-வது பாடலில் 'இரு நால்வர் ஈரைந்தின் மேலொருவர் எட்டோடொரு நால்வரோரிருவர்' என்று குறிப்பிட்டுக் கூறி யுள்ளதையும் நோக்குக. சரண்யன், முன்சென்று அசுர, ராக்ஷஸர் மேல் வெற்றி கொண்டு, தேவதைகள் கப்பம் கட்டி வாழும் நிலைமையைத் தவிர்க்கிறான் என்பது முடிந்த பொருள்.

'கலி' - தீங்குக்கு தீங்கு செய்பவன். இதையே விவரித்து (செப்பம்) நேரான உயர்ந்த செய்கையும், (திறல்) செயலாற்றும் வலிமையும் பொருந்தியவனேயென்றும் அவைகளையுடைமையால், (செற்றார்க்கு) உன்னை யெதிர்த்தவர்களுக்கு, (வெப்பம் கொடுக்கும்) சூடு கொடுத்துப் பணியச்செய்யும், வெல்லும் என்கிறாள். இவன் செய்யும் அசுர, ராக்ஷஸ வதங்களெல்லாம் புண்ய காரியங்களாகையால் இவனுக்குப் பாபம் வராது என்பது விளங்க 'விமல'னென்றாள் எனினுமாம்.

*நமாம் கர்மாணி லிம்பந்தி, நமே கர்மபலே ஸ்ப்ருஹா*
*இதிமாம்யோ அபிஜானாதி, கர்மபிர்ந ஸ பத்யதே*
*கீதை-4-14*

"ஹே! அர்ஜுனா! நான் செய்யும் கர்மாக்கள் என்னை பாதிக்காது. ஏனென்றால் எனக்கு அந்தக் கர்மங்களின் பயனில் ஆசையில்லை. இந்த விதமாக எவன் என்னை நன்றாக அறி-கிறானோ அவன், அவன் செய்யும் கர்மாக்களால் கூடக் கட்டுப்-படாதவனாகிறான்" என்று பணிக்கிறான். இந்த கீதா ச்லோகத்தையும் விமலனென்னும் சொல் வாங்குகிறது. இந்த எல்லா பொருள்களையுமே திருவாய்மொழி 1-ம் பாசுரம் 4-ம் பாதத்தில் முதல் மூன்று பதங்களான "துயாறுசுடர்" என்பது ஸங்கிரகித்துச் சொல்வதையும் நோக்குக. அயர்வறும் அமரர்கள் அதிபதி அவ-னாதலின் கர்ம பலன்கள் தன்னைச் சாராமல் இருக்கும் தேஜோ மூர்த்தி அவன்.

நப்பின்னையின் அங்க வைலக்ஷண்யங்களுக்கு உண்டான இவனை மயக்கும் சக்தியும் 'அவனிட்ட பிச்சை' என்பது தோன்ற, "நப்பின்னை நங்காய் திருவே" என்றாள். 'தன்னை மயக்கும் சக்தி-களைத் தன் பத்தினிகள் மூவருக்குங் கொடுத்து, அதில், அவர்கள் மயக்கில், தான் ஈடுபட்டவனாக, அவர்கள் குழந்தைகளான நமக்கு ப்ரஸாதிக்கும் பெரியோன்' என்று பொருள். 'திருவே'யென்பதற்கு நப்பின்னை நங்கையாகிய லக்ஷ்மியே என்றும் பொருள் கொள்க.

'உப்பம்' என்பதில் 'அம்' சாரியை. 'உப்பு' என்பதற்கு "உப்பு மெல்லியலாராடல் உவர்க்கடலராக மின்பம்" என்று அரும்பொருள்

விளக்க நிகண்டு பக்கம் **51**-ல் **309**-ம் பாடலில் பொருள் கூறப்பட்டுள்ளது. மென்மையான ஸ்த்ரீகளுடைய ஆடலும், அராகமும், இன்பமும் உப்பு என்னும் சொல்லுக்குப் பொருள் கூறப்பட்டுள்ளது. (அராகம் - ஓர் பண், பாலையாழ், சிவப்பு. பொன் முதலிய பொருள்களையுடையது).

(உக்கம் என்னும் சொல் இப்போதைய பதிப்புகளில் உள்ளது. அதற்கு ஆலவட்டம் விசிறியென்று பொருள். எதுகை நயம் பற்றி அது உப்பம் என்றிருத்தல் தகும். தட்டொளியென்று தமிழ் பதம் கிடைக்கவில்லை. தட்டொலி யென்பது, தட்டுதலினால் கிளப்பும் ஒலி, தாள சப்தம் என்னும் பொருள் உடைத்ததாதலின் தட்டொலி என்னும் பாடம் தக்கதாகும்.)

ஆடல், பாடல், தாளம் முதலானவைகளால் கண்ணனை ப்ரீதி பண்ணி விட்டு, அவன் ப்ரீதியைக் கொண்டு எங்களுக்கும் மார்கழி நீராட்டம் கைகூடும்படியும், கண்ணனுடைய நீர்மையில் நாங்களும் ஆடும்படியும் அருள்புரிவாய் என்றபடி.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

'உக்கம், தட்டொளி' என்னும் வழக்கிலுள்ள பாடங்களைக் காட்டிலும் 'உப்பம், தட்டொலி' என்னும் திருந்திய பாடத்தில் எதுகைப் பொருத்தமும், கருத்துப் பொருத்தமும் அமைந்துள்ளதைக் காணலாம்.

'உப்பம்' - உப்பு - ஆடல், பாடல்கள், அராகம், இன்பம்

'தட்டொலி - தாளம் எழுப்பும் தட்டு, அதன் ஒலி. ஆடலுக்கும், பாடலுக்கும் தாளம் இன்றியமையாத ஒன்றல்லவா? ('பரதம்'- **பா**வம், ராகம், தாளம் மூன்றின் முதலெழுத்துக்களைக் கூட்டி இலக்கணம் சொல்லுவரே !)

முப்பத்து மூன்று சேனாதிபதிகள் - முப்பத்து முக்கோடி தேவர்கள் அரக்கரை எதிர்த்து போருக்குப் புறப்பட்டால் கண்ணன் வந்து மடிதற்றுத்தான் முந்துறும். (வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு முன் வந்து நிற்பானாம் !)

கலியே - தீங்குக்குத் தீங்கு செய்பவனே !

விமலா - குற்றமற்றவனே !

அவனையும், நப்பின்னையையும் எழுப்புகிறாள்.

ஆடல், பாடல், தாள ஒலி கொண்டு அவனை மகிழ்வித்தாயே, அது நாங்கள் நீராட - கண்ணனின் நீர்மையிலாட, அவனை அனுபவிக்க உதவவேண்டும், இப்பொழுதே !



## பாசுரம் - 21

*ஏற்ற கலங்க ளெதிர்பொங்கி மீதளிப்ப,*
*மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்,*
*ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்,*
*ஊற்ற முடையாய்! பெரியாய், உலகினில்*
*தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்,*
*மாற்றா ருனக்கு வலிதொலைந்துன் வாசற்கண்,*
*ஆற்றாது வந்துன் னடிபணியு மாபோலே,*
*போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- ஏற்ற - ஏந்திக்கொண்டிருக்கிற
- கலங்கள் - பாத்திரங்கள்
- எதிர் பொங்கி - நிறைந்து போய் பால் பொங்கி
- மீது அளிப்ப - மேலோங்கி வெளியில் கொட்டும்படி
- மாற்றாதே - வற்றாமல்
- பால் சொரியும் - பாலைச் சொரிந்துகொண்டிருக்கிற
- வள்ளல் - வள்ளன்மையுடைய
- பெரும்பசுக்கள் - பெரிய பசுக்களை
- ஆற்ற - மிகுதியாக
- படைத்தான் - உடையவனான நந்தகோபனுடைய
- மகனே - குமாரனாகிய கண்ணனே
- அறிவுறாய் - விழித்துக்கொள்
- ஊற்றமுடையாய் - எதிரிகள்பால் வலிமையும், அடியார்பால் அருளும் உடையவனே; ஊறி அதிகப்படுந்தன்மை
- பெரியாய் - எல்லோருக்கும் பெரியவனே
- உலகினில் - லோகத்தார்களுக்கெல்லாம்
- தோற்றமாய் நின்ற - கண்ணுக்குப் புலனாகும் ஒரு பொருளாகத்தோன்றி நின்ற
- சுடரே - தேஜோமூர்த்தியே
- துயிலெழாய் - தூக்கத்தை விட்டு எழுந்திரு
- உனக்கு வலி தொலைந்து - உன் வீர பராக்ரமங்களைக் கேட்ட மாத்திரத்தில் அவைகளுக்கு எதிரே தங்கள் வலியெல்லாம் அறிந்து
- மாற்றார் - உனக்கு விரோதிகளாகத் தன்னை இதற்கு முன் நினைத்துக்கொண்டிருந்தவர்கள்
- ஆற்றாது - உன்னை எதிர்க்க வலியில்லாதவர்களாய்

> உன் வாசற் கண் - உன் அரண்மனை வாயிலிடத்தே
> உன்னடி - உன் திருவடிகளில்
> பணியுமாப்போலே - விழுந்து வணங்குமாப்போலே
> போற்றி புகழ்ந்து - உன்னை தோத்தரித்தும், வியந்தும்
> யாம் வந்தோம் - நாங்கள் வந்தடைந்தோம்
> ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

'எத்தகைய லௌகிக சாமர்த்தியங்களும், பண்பாடுகளும், செயல்களும் ஜீவனைக் காப்பாற்றமாட்டா. எம்பெருமானருள் ஒன்று தான் ஜீவனைக் காப்பாற்றும்' என்ற முடிந்த பொருளில் சொல்லி, 'அவ்விதம் காப்பாற்ற எழுந்திரு' என்று இந்தப் பாடலில் ப்ரார்த்திக்கிறாள். இதில் அதிசயம், நந்தகோபனே ஆசார்ய கோஷ்டிக்குத் தலைவன். 'பெரும் பசுக்கள் ஆற்றப்படைத்தா' னென்று கூறுகிறாள். இந்த மூன்றடிகளுக்கும் 3ம் பாசுரத்தின் பிற்பகுதியின் பொருள்களை (தேங்காதே புக்கிருந்து) அந்வயித்துக் கொள்க. இந்த பகவான் ஒருவன் தான் ஆன்மாவைக் காப்பாற்ற வல்லவனாதலின், அவனை உபதேசிக்கவல்ல ஆசார்ய கோஷ்டி தலைவன் மகன். இவனுடைய ஞானமே அவர்கள் உபதேச அருளின் பயன் என்று உத்ப்ரேக்ஷை.

"சொல்லினால் தொடர்ச்சி நீ" என்ற திருச்சந்த விருத்தம் 11-ம் பாட்டின் பொருளை மனத்திற்கொண்டு, அது சொல்லும் உபதேச மந்திரத்தை சிஷ்யன் ஜபித்து, 'அது பகவானுடைய அருளையும் சாக்ஷாத்காரத்தையும் தரவல்லது' என்று நம்பி, பகவத் சாக்ஷாத்காரத்தையும், அவன் அருளையும் பெறக்கடவன் என்பது கருத்து. பகவானுடைய பல பராக்ரமங்களைக் கேட்டவர்கள் அவன் இட்ட வழியிலேயே வர்த்திக்க வேணுமே யொழிய, 'எதிர்த்தட்டாகப் போனால் தாம் அழிந்து விடுவோம்' என்பதையுணர்ந்து, 'அவன் வாசலிலே வந்து அடிபணிவார்கள்' என்று சொல்லி, "நாங்கள் அவ்விதம் எதிர்த்தட்டை நினைக்கவில்லை. முதலெடுப்பிலே, இளம் பருவத்திலேயே உன்னைப் போற்றிப் புகழ்ந்து யாம் வந்தோம்." என்கிறாள். சுத்த ஸத்வமான ஆச்ரயத்தையும், ஆரம்பத்திலேயே ஸாத்விகமான ஒழுக்கத்தையும் நிவேதிக்கிறாள்.

இங்கே 'எதிர்பொங்கிமீதளிப்ப' என்பதற்கு ஆசார்யன் காலக்ஷேப பங்க்திகளைச் சொல்லிப் போகும்போது, உத்தமர்களான சிஷ்யர்கள் சந்தேஹங்களைக் கேட்டு ப்ரச்னம் பண்ணுவதையும், அதற்கு ஆசார்யர்கள் சமாதானங்கள் கூறுவதையும் லக்ஷணை யாகச் சொல்லியதுமாம்.

ஆசார்யர்கள் ஞான ஊற்று. ஒரு நாளும் வற்றாது. ஆதலால் 'மாற்றாதே பால் சொரியும்' என்றாள். (வள்ளன்மை - ஔதார்யம்). மிக அபூர்வமான அர்த்தங்களைச் சிஷ்யர்களுக்குச் சொல்லிக் கொடுக்கக் கூடாதென்று வஞ்சகனாக வர்த்திக்கும் ஆசார்யனை 'ஞானகலன்', 'ஞானத்தில் துஷ்டத்தனமுடையவன்' என்று சுகர் பணித்தார். இந்த வித ஆசார்யர்களை விலக்கித் தாங்கள் அறிந்த எல்லா அர்த்தங்களையும் சிஷ்யர்களுக்குப் போதிக்கும் ஸதா-சாரியர்களை, ''மாற்றாதே பால் சொரியும் வள்ளற் பெரும் பசுக்கள்'' என்று பெருமைப்படுத்திப் பேசுகிறாள்.

''ஒருகாலத்தில் உன்னிடத்தில் விரோதம் கொண்டவர் தத்தம் ஆற்றாமையை அறிந்து, உன்னை வந்து அடிபணிந்தால், காப்-பாற்றுகிற நீ, எப்போதும் உன்னடியார்களாகவே வர்த்திக்கும் எங்க-ளையும் காப்பாற்றவேண்டும் அல்லவா?'' என்று கேட்கிறாள்.

## *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

நந்தகோபன் ஆசார்யகோஷ்டித் தலைவன் போல. அவன் மகனே என்று விளி. மாற்றார் கூட உன் வாசலில் வந்து வணங்குவர். அருள் வேண்டுவர். நாங்கள் எதிர்த்தட்டாகப் போகாமல் என்றுமே உனக்-காட்பட்டவர்.

'மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்' என்பது ஆசார்யனைக் குறிப்பது. வற்றாமல் ஒளிக்காமல் தானறிந்த அனைத்து அர்த்த விசேஷங்களையும் சிஷ்யனுக்கு வழங்கிடும் வள்ளல்கள்.

'எதிர் பொங்கி மீதளிப்ப' - உத்தம சிஷ்யர்கள் சந்தேகம் கேட்கையில், விளக்கமெல்லாம் ஸித்தமாகச் சொரிவர். அந்-நிலையில் இருசாராரும் எய்தும் ஆனந்தப்ரகர்ஷத்திற்குக் குறிப்பு 'எதிர் பொங்கி மீதளிப்ப' என்பது.



## பாசுரம் - 22

*அங்கண்மா ஞாலத் தரசர், அபிமான*
*பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே,*
*சங்க மிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்,*
*கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே,*
*செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ,*
*திங்களு மாதித் தியனு மெழுந்தாற்போல்,*
*அங்க ணிரண்டுங்கொண் டெங்கள்மேல் நோக்குதியேல்,*
*எங்கள்மேற் சாப மிழிந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

> அம் - அழகிய
> கண் - இடத்தையுடைய
> மா - பெரிய
> ஞாலத்து - உலகத்திலுள்ள
> அரசர் - அரசர்களெல்லாம்
> அபிமான பங்கமாய் - பூர்வ ஜன்மங்களிலே உன்னை பக்தி பண்ணின நல்வினைப் பயனால்
முன் ஜன்மத்தில் பக்தியின் பயன் தலைக்கட்டாதவர் பிந்தின ஜன்மத்தில் பரிசுத்தர்களாகவும் செல்வந்தர்களாகவும் இருப்பவர் குடியிற் பிறப்பர் என்ற ஸ்ரீபாகவதம் 6-வது அத்யாயம் 41-வது ச்லோகத்தில் "சுசீனாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோ அபிஜாயதே" என்றபடி பிறந்தவர்கள்
> வந்து
> நின் பள்ளிக்கட்டிற் கீழ் - உன்னுடைய சயனக்கட்டிலின் கீழே
> சங்கம் இருப்பார் போல் - கூடியிருப்பார்கள் போலே
> வந்து - நாங்களும் வந்து
> தலைப் பெய்தோம் - கூடினோம்
> கிங்கிணி வாய்ச்செய்த - தங்க மணியிடத்திற் செய்த
> தாமரைப்பூப்போலே - தாமரையின் பூவைப்போலே (உள்ள)
> செங்கண் - உன்னுடைய சிவந்த கண்கள்
> சிறுச்சிறிதே - கொஞ்சம் கொஞ்சமாக
> எம்மேல் - எங்கள் பேரில்
> விழியாவோ - பார்க்கமாட்டாவோ (அப்படி நீ பார்க்கா விட்டால்)
> எங்கள் மேல் சாபம் - நாங்கள் நோன்பை சரியாக நோற்கவில்லை என்னும் பழிச்சொல்
> இழிந்து - விழும்
> திங்களும் ஆதித்யனும் - சந்திரனும், சூரியனும்

- எழுந்தாற்போல் - உதித்தாற்போன்ற
- அங்கண் இரண்டும் கொண்டு - உன்னுடைய அழகிய இரண்டு கண்களையும் கொண்டு
- எங்கள் மேல் நோக்குதி - எங்கள் மேலே பாராய்
- ஏல் - அசை
- ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

முன் பாட்டோடு கண்ணன் விழித்துக் கொண்டு விட்டான். சிறுமியர்களை யெல்லாம் கடாக்ஷிக்கும்படி ஆண்டாள் வேண்டு-கிறாள். 'அபிமான பங்கம்' என்றது பூர்வ ஜன்மங்களில் பகவான் இடத்தில் பக்தி பண்ணி அதனால் ஏற்பட்ட நல்வினைப்பயன்.

"பங்கமே தூசு, பின்னம், பதிந்த சேறுடனே, குற்றந், தங்கு தொல்வினையே யென்னச் சாற்றுமைம்பெருஞ் சொல்லும்". (பங்கம் என்பது தங்கு தொல்வினை.) - அரும்பொருள் விளக்க நிகண்டு 75-ம் பாடல்.

பெருமாள் திருமொழி 10-ம் பத்து 7-ம் பாசுரத்தில் கடைசியில் "தில்லை நகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள் அரசமர்ந்தான் அடி சூடும் அரசையல்லால் அரசாக எண்ணேன் மற்றரசுதானே" என்று சேர நாட்டு அரசரான குலசேகரப் பெருமாள் கூறியதை நோக்குக. தங்கள் அரசுச் செல்வமும் இருக்க பூர்வ ஜன்ம க்ருத புண்ணி யத்தால் பக்திச் செல்வமும் கைகூடி இவர்கள் பகவானை வந்து அடைந்திருக்கிறார்கள் என்று பொருள் கொள்ளற்பாலது.

'தலைப் பெய்தல்'- (தலை - இடம், பெய்தல் - கூடுதல்) ஓரிடத்தில் கூடுதல்; சாபம் - பழிச்சொல்.

"சாபமேயங்கதச் சொல்" - அரும்பொருள் விளக்க நிகண்டு 305-வது பாடல் (அங்கதச் சொல் - பழிச்சொல்). "உன்னைச் சேவிப்பதற்காக நாங்கள் நோன்பு நோற்று, உன்னுடைய திவ்ய கடாக்ஷத்தை எதிர்பார்த்து இங்கே வந்து நிற்கிறோம். நீ அபிமானித்து எங்களைக் கடாக்ஷிக்கவேணும். ஒருக்கால் எங்கள் பேரில் யாராவது பழிச் சொற்களைக் கூறியதனால் உன்னுடைய திருக்கண்கள் எங்கள் மேல் விழிக்கவில்லையோ. அவ்விதம் எங்-களை நீ கடாக்ஷிக்காவிடில் 'எங்கள் நோன்பு உண்மை யானதல்ல, விதிப்படி நாங்கள் நோற்கவில்லை' என்னும் பழிச் சொல்லும் எங்-களுக்கு வருமே" என்று எடுத்துக் கூறுகிறாள். 'கிங்கிணி'யென்பது மேகலையில் கட்டும் சிறு தங்கமணி. அதனிடத்திலே தாமரை பூப்போல் வேலை செய்தால் எப்படி யிருக்குமோ அது போல் சரண்யன் கண்கள் இருக்கின்றன என்கிறாள். இங்கே கிங்கிணி

யென்பதற்கு தாமரைப்பூவின் நடுவில் உள்ள காயைச் சுற்றிலும் உள்ள கிஞ்சல்கம் என்று பொருள் கொண்டு அதையே கிண்கிணி போலிருக்கிறது என்றாள், என்றாலுமாம்.

'நோக்குதி' யென்பது கடாக்ஷத்தை ப்ரதீக்ஷிக்கும் ப்ரார்த்-தனை. 'திங்களும் ஆதித்தியனும்' என்னுமிடத்து, இரவு பூர்ண சோபையோடு முழுச் சந்திரனும், பகலில் சூர்யனும் உதித்தாற்போல என்று பொருள் கொண்டு "இருட்டுகளாகிய எங்கள் பாப தோஷங்கள் பழிகள் எல்லாவற்றையும் விலக்கி, உன்னுடைய ஞான வெளிச் சத்தையும், உன் ஹ்ருதயத்தின் குளிர்ச்சியையும் எங்கள் மேல் பொழி" என்று வேண்டியவாறு.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

முன் பாசுரத்தோடு, கண்ணன் விழித்தெழுந்து கொள்ளவும் ஆண்டாளும் கோபியரும் அவன் கடாக்ஷத்தை வேண்டுகின்றனர். 'அபிமான பங்கமாய்' - பூர்வ ஜந்மங்களில் பக்தி பண்ணி அதனால் ஏற்பட்ட நல்வினைப் பயன். ஆதாரம் - அரும் பொருள் விளக்க நிகண்டு, 75-ம் பாடல்.

அரசர்கள் தம் பெரும் செல்வமான அரசுச் செல்வத்துடன் குல-சேகரர் கூறியதாவது - 'தில்லை நகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள் அரசமர்ந்தானடிசூடும் அரசையல்லால் அரசாக எண்ணேன் மற்றரசுதானே' (பெருமாள் திருமொழி 10.7) என்ற ரீதியில் பூர்வ ஜந்ம ஸுக்ருத பலத்தால் கிடைத்த பக்திச் செல்வமும் கைவரப் பெற்று பெருமாள் கட்டில் கீழே கூடியுள்ளரெனக் காட்டுகிறார்.

'தலைப் பெய்தோம்' - ஓரிடத்தில் கூடியுள்ளோம். உன் கடாக்ஷத்தை எதிர்நோக்கி யிருக்கிறோம். திங்களும் ஆதித்தியனும் பெருமாளின் இருகண்கள். ஹ்ருதய குளிர்ச்சிக்கு அடையாளம் சந்திரன்; அவன் ஞான வெளிச்சத்துக்கு அறிகுறி சூரியன். இரண்டும், உன் குளிர்ந்த கடாக்ஷமும், உன் ஞானச் செல்வமும் எங்கள் மேல் பொழியவேண்டும் என்று வேண்டுகை.



## பாசுரம் - 23

*மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்,*
*சீரிய சிங்க மறிவுற்றுத் தீவிழித்து,*
*வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி,*
*மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு,*
*போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணா, உன்*
*கோயில்நின்று இங்ஙனே போந்தருளிக், கோப்புடைய*
*சீரிய சிங்கா சனத்திருந்து, யாம்வந்த*
*காரிய மாராய்ந் தருளேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- மாரி - மழைக்காலத்தில்
- மலை - மலையினுடைய
- முழைஞ்சில் - குகைகளில்
- மன்னி - போய்ச்சேர்ந்து, அடைந்து
- கிடந்து - படுத்துக்கொண்டு
- உறங்கும் - தூங்குகின்ற
- சீரிய சிங்கம் - மிக்கவலிமையுள்ளதாகிய ஆண்சிங்கம்
- அறிவுற்று - விழித்துக்கொண்டு
- தீவிழித்து - நெருப்புபோல் இருக்கும் கண்களைத்திறந்து
- வேரி - மணத்தோடு கூடின
- மயிர் - பிடரிமயிரானது
- பொங்க - கழுத்தையசைக்கும் போது சிலிர்க்க
- எப்பாடும் - தன்னைச் சுற்றி எல்லா பக்கங்களிலும்
- பேர்ந்து - நடந்து கொடுத்து
- உதறி - உடம்பை நன்றாகக் குலுக்கி ஆட்டிக்கொடுத்து
- மூரி - உடம்பையொருதரம் நீட்டிக்கொடுத்து
- நிமிர்ந்து - நெட்டமாக எழுந்து
- முழங்கி - கர்ஜித்து
- புறப்பட்டு - குகையைவிட்டு வெளிப்பட்டு
- போதருமாபோலே - வருவது போலே
- நீ
- பூவைப்பூவண்ணா - காயாமலர்போன்ற நிறத்தையுடையவனே
- உன் கோயில்நின்றும் - உன் கோயிலிருந்து
- இங்ஙனே - இவ்விடத்திற்கு
- போந்தருளி - க்ருபை செய்து வந்து
- கோப்புடைய - மேற்கட்டியோடு கூடிய

- சீரிய - சிறந்த
- சிங்காதனத்திலிருந்து - சிங்காதனத்தில் வீற்றிருந்து
- யாம் வந்த காரியம் - அடியோங்கள் இங்கு வந்து காத்திருக்கும் காரியத்தை
- ஆராய்ந்தருள் - ஆராய்ந்து, கேட்டு, தெரிந்து, அருள வேணும்
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

மேல் பாட்டில் விஞ்ஞாபனத்திற்குப் பிறகு பகவான் தங்களுக்குப் பரிபூர்ண க்ருபை செய்ய ஸங்கல்பித்து விட்டான் என்னும் த்ருட சித்தம் கொண்டு அவனை திருவோலக்க மண்டபத்துக்கு எழுந்தருளி, அங்கே கட்டப்பட்டுள்ள விதானத்தின் கீழ் சிம்மாசனத்தில் அரசு வீற்றிருந்து தங்கள் ப்ரார்த்தனையை ஏற்றருளும்படி வேண்டுகிறாள்.

'மாரி' என்பதற்கு 'மழை பொழியும் பொழுது' என்பது பொருள். 'மலைமுழஞ்சு' - மழைக் காலங்களில் மிருகங்கள் மலைக் குகைகளில் போய் அடைவது சகஜம். யாரும் கிட்டப்போய் பார்க்க முடியாத துஷ்ட மிருகமாகிய சிம்மத்தினுடைய தன்மையை ஐந்து வரிகளில் நிர்வஹித்திருக்கும் தன்மை மிக அபூர்வமானதென்று போற்றத்தக்கது.

நந்தகோபர் அரண்மனைக்குள் இருக்கும் கண்ணன் திருவோலக்க மண்டபத்திற்கு எழுந்தருளி சர்வ ஜன சாமான்யத்துக்கும் சேவை சாதித்தருளவேணும் என்பது பாசுரத்தின் பாவம். ஸ்ரீவில்லிபுத்தூரை நோன்பு நோற்கும் இடமாகக் கொள்ளும்போது வடபத்ரசாயியை வாஹன மண்டபத்துக்கு எழுந்தருளப் பண்ணுவது பாவம்.

'நீளாதுங்க' என்று தொடங்கும் பாசுர அர்த்தத்தில் விளக்கியபடி ஆண்டாளுடைய ஹ்ருதய குஹரத்தில் உபாஸனா முர்த்தியாக அவள் அமர்த்திக்கொண்ட யசோதையிளஞ்சிங்கம், 22 பாடல்களைப் பாடி அதற்குச் சாற்றியதனால், நல்ல சீரியசிங்கமாக வளர்ந்து விட்டது. அதையே வெளியே வந்து எல்லோருக்கும் ஸேவை ஸாதித்தருளவேணும் என்று ப்ரார்த்திக்கிறாள். அரசர்கள் ஜனங்களுடைய ப்ரார்த்தனைகளைக் கேட்க மண்டபத்தில் சிங்காதனத்தில் வந்தமர்வது மரபு. அங்கே எழுந்தருளி நாங்கள் வந்த காரியத்தை ஆராய வேணும், எங்கள் ப்ரார்த்தனையை அனுமதித்து அருளவேணும் என்று வேண்டுகிறாள்.

### விசேஷக் குறிப்பு (Dr. VNV)

கண்ணன் எழுந்து திருவோலக்க மண்டபத்திற்கு வந்து அரசு செய்யும் தோரணை.

எங்கள் பிரார்த்தனையை ஏற்றுப் பறை அருள்க, ரக்ஷணம் தருக என வேண்டுகை.

ஸ்ரீ ஆண்டாளின் ஹ்ருதய குஹரத்தில் இளஞ்சிங்கமாக (பாசுரம் 1) அமர்ந்திருந்த ந்ருஸிம்ஹனே, இந்தப் பாசுரத்தில் சீரிய சிங்கமாக குகையிலிருந்து வெளிப்பட்டு, கம்பீரமாக நடைபோட்டு, வந்து, ஸிம்ஹாஸனத்தில் (ஸிம்ஹ ஆஸனத்தில்) அமர்கிறதாக அனுபவம். சீரிய சிங்கம் சிங்காதனத்தில் வீற்றிருந்தருள்கிறது !



## பாசுரம் - 24

*அன்றிவ் வுலக மளந்தா யடிபோற்றி,*
*சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி,*
*பொன்றச் சகட முதைத்தாய் புகழ்போற்றி,*
*கன்று குணிலா வெறிந்தாய் கழல்போற்றி,*
*குன்று குடையா வெடுத்தாய் குணம்போற்றி,*
*வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி,*
*என்றென்றுன் சேவகமே யேத்திப் பறைகொள்வான்,*
*இன்றுயாம் வந்தோ மிரங்கேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- அன்று - முன்னொருகாலத்தில்
- இவ்வுலகம் - இந்த உலகத்தையெல்லாம்
- அளந்தாய் - அளந்தவனே
- அடிபோற்றி - உன் திருவடிகளின் சக்தியைப் போற்றுகிறோம்
- அங்கு சென்று - அங்கேபோய்
- தென்னிலங்கை - தெற்கு தேசத்திலுள்ள இலங்கையை
- செற்றாய் - அழித்தவனே
- திறல் போற்றி - உன்னுடைய பலத்தைப் போற்றுகிறோம்
- சகடம் - சகடாசுரன்
- பொன்ற - சாகும்படியாக
- உதைத்தாய் - உதைத்தவனே
- புகழ் - உன்னுடைய தேஜஸை

- போற்றி - போற்றுகிறோம்
- கன்று - கன்றுக்குட்டியின் ரூபமாய் வந்த தேனுகன் என்னும் அசுரனை
- குணிலாய் - குண்டுக்கல் மாதிரியாக
- எறிந்தாய் - விளாமரத்தில் வீசியடித்தவனே
- கழல் - உன்னுடைய திருவடியை
- போற்றி - போற்றுகிறோம்
- குன்று - கோவர்த்தனகிரியை
- குடையாய் - இடையர்களுக்கும் பசுக்களுக்கும் குடையாக
- எடுத்தாய் - எடுத்தவனே
- குணம் - உனக்கு எல்லாவற்றிலும் மேலான ஐச்வர்யமான உன்னுடைய குணங்களை
- போற்றி - போற்றுகிறோம்
- வென்று - உன்னைப் பகைப்பவரைத் தோற்கடித்து
- பகை கெடுக்கும் - அவர் உன்மேல் வைத்த பகையையழிக்கும்
- நின்கையில் - நீ கையில் தாங்கிய
- வேல் - ஆயுதங்களை
- போற்றி - அவைகளின் வீரத்திற்காகப் போற்றுகிறோம்
- என்றென்று - எப்போதும்
- ஏத்தி - உன்னைத்துதித்து
- உன் சேவகமே - உனக்குத் தொண்டு செய்து நிற்றலே
- பறை - நீ எங்களுக்குச் செய்யும் ரக்ஷணமாக
- கொள்வான் - அடையும் பொருட்டு
- இன்று - இப்பொழுது
- யாம் வந்தோம் - நாங்கள் வந்தோம்
- இரங்கு - அருள்
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

அரசர்கள் திருவோலக்க மண்டபத்துக்கு வந்து சிங்காதனத்தில் அமர்ந்தவுடன் அவர்கள் புகழைப் பாடும் பந்திகள் (வந்தி, வைதாளிகர் என்பர்) அவர்கள் முன்னோர்களுடையவும், அவர்களுடையவும் புகழைப்பாடுவது வழக்கம். அந்தப் பாட்டுக்களில் அந்தந்த ராஜ வம்சத்தாரின் வீரப்ரதாபச் செயல்களும், தர்ம, சாத்விகச் செயல்களும் கலந்து வருவன. இதன் ப்ரயோஜனம் இவர்கள் எத்தகைய வீர்யமும் தார்மிகமும் ஆன வம்சத்தில் வந்தவர்கள் என்பதையும், இவர்களுடைய நற்குண, நற்செயல் களையுமே நினைவூட்டி, பின்னால் ஜனங்கள் செய்யும் கோரிக்கைகளை க்ருபையோடும், தர்ம வழியிலும் தீர்மானித்து உத்தரவுகள்

கொடுக்க, இவர்கள் மனத்தைப் பண்படுத்துவதாகும். இவன் சாக்ஷாத் சரண்யனானதால் ஷாட்குண்யோ பேதனென்று நாராயணனுக்குச் சொல்லியிருக்கிற புத்தி, சக்தி, வீர்யம், தேஜஸ், பலம், ஐஸ்வர்யம் என்ற ஆறும் ஸம்ஹிதைகளில் கூறியுள்ளபடி இவனிடம் அமைந்திருக்கின்றன என்று பாடுகிறாள்.

'கன்று குணிலா யெறிந்தாய் கழல் போற்றி' என்பது வ்ரஜ பூமியில் மற்றப் பையன்களுடன் கண்ணனும் கன்றுகள் மேய்த்துக் கொண்டு போகும் போது தேனுகன் என்னும் அசுரன் ஒரு கன்றுக் குட்டியின் உருவத்தோடு கண்ணனையே கொல்ல வேணுமென்று, அந்தக் கன்றுகளுக்கு நடுவே தானும் ஓர் கன்று போல் கலந்து கொண்டான். ப்ரலம்பன் என்னும் மற்றொரு அசுரன் ஒரு பெரிய விளாமரத்தின் உருவாக நின்று கொண்டு, மரம் முழுதும் விளாம்-பழம் பழுத்துத் தொங்குவதுபோலக் காட்டிக் கொண்டு, கன்றுக்-குட்டிகளும் இடையர்களும் தன் நிழலில் ஒதுங்கும்போது கண்ணனுட்பட எல்லாவற்றையும் சர்வ நாசம் பண்ணி விடுகிறது என்று நின்றான். கண்ணன் புத்தி கூர்மையால் இந்தக் கன்றுக் குட்டியையும், அந்த ப்ரலம்பனையும் அறிந்து கொண்டு கல்லை விட் டெறிந்து விளாம்பழம் அடிக்கும் பையன்கள் போல, அந்தத் தேனு-கனின் பின்னங்காலிரண்டையும் பிடித்துச் சுழற்றி அந்த விளா-மரத்தில் ஓங்கி அறைய, இரண்டு அசுரர்களும் செத்துப் பிணமாக விழுந்தார்கள் என்பது ஸ்ரீபாகவதக் கதை. இந்த சரித்திரத்தால் புத்தி சாமர்த்தியத்தைச் சொல்லுகிறாள். மற்ற ஐந்தினையும் மேலே பதவுரையில் உள்ளதைக்கொண்டு பொருத்தி யறியலாம்.

'என்றென்று' என்பது, என்றும், என்றும் என்பதில் "உம்" மைத் தொக்கி வந்தது. பகவானைப் புகழ்தல் அவனுக்காகவன்று, நம்-முடைய பக்தியும், அவன் திருவடிகளில் நம் ஈடுபாடும் நிலைக்கவும், வளரவுமாகும். இவ்வித நிலையில் நம்மை வைத்திருப்பதே அவனு-டைய ரக்ஷணமாகும். "இசைவித்தென்னை உன்தாளிணைக் கீழ் இருத்தும் அம்மானே" என்னும் திருவாய்மொழி 5-ம் பத்து 8-ம் பதிகம் 9-ம் பாசுரம் முதல் அடியையும் நோக்குக. பொறிகள் புலன் வழியே சென்று இன்பந்தேடியழிவன. அவைகளை யடக்கி, அவனை பஜிக்கும் சக்தியும் அவனே தர வேணுமென்றபடி. ஒரு ஆச்ரிதன் தர்ம கர்மானுஷ்டானங்களைப் பண்ணும்போது அது தன் கடமை யென்றும், அதற்கு ஒரு பயனை நினையாமலும் செய்ய வேணும் என்பது சாஸ்த்ரங்களின் முடிவு. பகவான் க்ருபை செய்வது பகவா-னுடைய அருள். எனவே இங்கே 'பண்டமாற்றுக்கு' இடமில்லை யாதலால் 'அருள்' என்றாள்.

### விசேஷக் குறிப்பு (Dr. VNV)

இப்படி வந்தமர்ந்தவுடன் வந்தி - வைதாளிகர் போற்றிப்பாடுவரே. இப்பாசுரம் அதைச் செய்கிறது.

'என்றென்றும்' என்ற சொல் என்று, என்று கொள்க. 'உம்' தொக்கிவந்தது. இங்கு கருத்து 'பகவானைப் போற்றிப் புகழ்தல் அவனுக்காக அன்று. நம் பக்தி,அவன் திருவடிகளில் நம் ஈடுபாடு, இவையெல்லாம் நிலைக்கவேண்டும்' என்று பாரித்தே இந்த அனு-ஸந்தானமெனக் காட்டுகிறார்.

இத்தகைய நிலையில் நம்மை வைத்திருப்பதே அவன் நமக்கு செய்யும் ரக்ஷணமாம் !

'இசைவித்தென்னை உன் தாளிணைக் கீழ் இருத்தும் அம்மானே' (திருவாய்மொழி 5.8.9)

ஆச்ரிதன் தன் விஹித, கர்மானுஷ்டாங்களை செய்தாக வேண்டும். இது அவன் கடமை. அதற்குப் பயனை எதிர்நோக்க வழியில்லை. இதெல்லாம் பகவான் அருளில் முடியும். அவன் கருணையால் அருளலாம். ஆனால் இது பண்டமாற்றோ, காரண காரியரீதியிலான தொடர்போ இல்லை.



## பாசுரம் - 25

*ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஓரிரவில்*
*ஒருத்தி மகனா யொளித்து வளர,*
*தரிக்கிலா னாகித்தான் தீங்கு நினைந்த,*
*கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்,*
*நெருப்பென்ன நின்ற நெடுமாலே, உன்னை*
*அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்,*
*திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி,*
*வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- ஒருத்தி மகனாய் - தேவகியின் மகனாய்
- பிறந்து - அவதரித்து
- ஓரிரவில் - அதே ராத்திரியில்
- ஒருத்தி - யசோதையுடைய

- மகன் - மகனாக
- ஒளித்து ஆகி - ரகசியமாக ஆகி
- வளர - ஆயர்பாடியில் வளர
- தரிக்கிலான் ஆகி - நீ அவதரித்து விட்டாய் என்பதை மாயை சொல்லத் தெரிந்துகொண்டு சும்மாயிருக்கமுடியாதவனாய்
- தான் தீங்கு நினைத்த - தான் உன்னைக் கொன்று விட வேணுமென்று கெடுதியை நினைத்த
- கஞ்சன் - கம்சனுடைய
- கருத்தை - எண்ணத்தை
- பிழைப்பித்து - கெடுத்து
- வயிற்றில் - அவனுடைய வயிற்றில்
- நெருப்பென்ன - நெருப்பைப் போல
- நின்ற - இருந்த
- நெடுமாலே - நீலமேனி நெடியானே
- பறை தருதியாகில் - எங்களுக்கு உன்னுடைய ரக்ஷணத்தைக் கொடுப்பாயானால்
- திருத்தக்க செல்வம் - எங்களுக்கு எல்லா நன்மைகளையும் கொடுக்கக்கூடிய செல்வமாகிய பக்தியைச் செய்தும்
- சேவகமும் - கைங்கர்யங்களைச் செய்தும்
- யாம் - நாங்கள்
- வருத்தமும் தீர்ந்து - எங்களுடைய எல்லா துக்கங்களும் நிவர்த்தியாகி
- மகிழ்ந்து - மகிழ்ந்து
- உன்னை அருத்தித்து - உன்னையே வேண்டி
- வந்தோம் - இங்கே வந்திருக்கிறோம்
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

தேவகி புத்ரனாக அவதரித்த சரண்யன் கம்சனுடைய பக்க பலங்களையெல்லாம் கொன்று பிறகு கம்சனைக் கொல்லவேணும் என்னும் நினைவினாலும், இங்கே ஆளும் மன்னனுடைய தங்கை மகனாகத் தான் இருந்தால் தன்னுடைய சௌலப்ய, சௌசீல் யங்களை ப்ரகாசிப்பிக்க முடியாது என்னும் நினைவாலும், யசோதை மகனாக ஒளித்து வளர்கிறான்.

இந்த ஒளிந்திருக்கும் மாயாவியை பக்தியால் கண்டுபிடித்தால் அன்றி பயத்தால் உண்டான விரோதத்தால் கண்டுபிடிக்கமுடியாது. 'இவன் விரோதத்தால் கண்டு பிடிக்க முயற்சித்தான்' என்பதை விளக்கக் 'கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமாலே' என்றாள். க்ருஷ்ணன் பிறந்து தன்னைக் கொல்லப்போகிறான்

என்பது தேவகி கல்யாண காலத்திலேயே கம்சனுக்குத் தெரியும். அது முதற்கொண்டே இவன் பகவானிடத்தில் 'வைரி பக்தி' பண்ணிக் கொண்டிருந்தான் என்று சுகர் சொல்கிறார். "ஆஸீன: ஸம்விசந் திஷ்டன் புஞ்சான: பர்யடன் மஹீம் சிந்தயானோ ஹ்ருஷீகேசம் அபச்யத் தன்மயம் ஜகத்". உட்கார்ந்தவனாயும், உள்ளும் வெளியும் நுழைபவனாயும், நின்றவனாயும், உண்ணுங்-காலத்திலும், ராஜ்யத்தில் சவாரி போய்கொண்டிருக்கும் போதும், ஹ்ருஷீகேசனையே நினைத்தவனாக, அவன் மயமாகவே, கம்சன் ஜகத்தை பார்த்தானென்றபடி.

*"பிபர்ஷிரூபாணி அவபோத ஆத்மந்க்ஷேமாய லோகஸ்ய சராசரஸ்ய*
*சத்வோப பந்நாநி ஸுகாவஹாநி ஸதாம் அபத்ராணி முஹு:கலானாம்".*

'அவதார விசேஷங்களால் நீ முன்கூட்டியே தீர்மானித்து ரூபங்களை ஏற்கிறாய். இது சராசரங்களால் ஆன லோகத்தினுடைய க்ஷேமத்தின் பொருட்டு. இந்த ரூபங்கள் ஸத்துக்களுக்கு ஸத்வத்தையடையச் செய்து சுகத்தைக் கொடுக்கின்றன. துஷ்டர்-களுக்கு மேலும் மேலும் அசுபங்களைத் தருகின்றன' என்னும் ஸ்ரீபாகவத ச்லோகமும், 'கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமாலே' என்பதை விளக்குகிறது. பயத்தால் வைரி பக்தி பண்ணினதால் மோக்ஷம் பெற்றவன் கம்சன் என்று பெரியோர் கூறுவர்.

'திருத்தக்க செல்வமும்' - ச்ரேயஸ்கரம் ஏற்ற செல்வம்; 'சேவகம்' - பகவத், பாகவத கைங்கர்யத்தில் இடைவிடாது நிற்றல். 'வருத்தம்' - சஞ்சிதமான பாவங்கள். 'அருத்தித்து வருதல்'- ஆர்த்தியோடும், ரக்ஷணம் கிடைக்க வேண்டும் என்ற வேகத்தோடும் வருதல். 'அர்த்தி' என்னும் வடசொல் 'அருத்தி' என்று தமிழில் வந்தது.

23-ம் பாட்டில் 'யாம் வந்த காரியம்' என்றது 'என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்' என்று இந்த 24-வது பாட்டில் தொடர்கிறது. இந்தப் பாட்டில் "பயத்தாலும்' விரோதத்தாலும் பக்தி பண்ணியவர்களுக்கும் கூட மோக்ஷபர்யந்தமான பயனை அருளும் நீ, ப்ரேமையால் பக்தி பண்ணும் எங்களுக்கு இவ்வுலகில் நல்ல வாழ்வும் (அந்த வாழ்வும் உன் கைங்கர்யரூபமாய் இருக்கும்படியும்), ஸகல பாவதோஷங்களையும் நீக்கி, மோக்ஷ பர்யந்தமான சுகத்-தையும் நீ கொடுப்பாய்" என்று தலைக்கட்டுகிறாள்.

### விசேஷக் குறிப்பு (Dr. VNV)

கீழ் சொன்னவிதத்திலே உன் ரக்ஷணம் பெறவே வந்தோம். உன் தொண்டே எங்களுக்கு ரக்ஷணம்.

அதை அடையும்பொருட்டு இப்பொழுது வந்தோம்.

பயத்தாலோ, விரோதத்தாலோ உன்னை ஸதா சிந்திப்பவர்கள் கூட, மோக்ஷபர்யந்தமான அருளைப் பெறுகிறார்களே ! (கம்ஸாதிகள்). நாங்கள் காதலில், ப்ரேம பக்தியில் உன்னையே சிந்தனை செய்து எங்களுக்கு பக்தி தா, ரக்ஷணம் தா, கைங்கர்யம் தா என்று வேண்டுகிறோம். 'அர்த்தித்து வந்தோம்' - நீ தருவது திருத்தக்க செல்வம், சேவகம்.

இங்ஙனம் நோன்பு நிறைவேறுகிறது. நாம் வருத்தமற்று மகிழலாகும்.



## பாசுரம் - 26

*மாலே! மணிவண்ணா! மார்கழிநீ ராடுவான்,*
*மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்,*
*ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன,*
*பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே,*
*போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே,*
*சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே,*
*கோல விளக்கே கொடியே விதானமே,*
*ஆலி னிலையாய்! அருளேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- மாலே - திருமாலே
- மணிவண்ணா - நீலரத்னத்தின் நிறத்தையுடையவனே
- மார்கழி நீராடுவான் - மார்கழி நீராட்டத்தைச் செய்யும் பொருட்டு
- மேலையார் - முன்னோர்கள்
- செய்வனகள் - செய்யும் காரியங்களையும்
- வேண்டுவன - அதற்கு உபகரணங்கள், அவர்களுக்கு தேவையான பொருள்களையும்
- கேட்டியேல் - கேட்டருள்
- ஞாலத்தையெல்லாம் - பூமி முழுவதையும்

- நடுங்க - பயத்தால் குலுங்கும்படி
- முரல்வன - ஒலிப்பவையும்
- பால் அன்ன - பால் போன்ற
- வண்ணத்து - நிறத்தையுடைய
- உன் - உன் திருக்கையிலுள்ள
- பாஞ்சசன்னியமே போல்வன - பாஞ்சசன்னியத்தையே ஒப்பானவையான
- சங்கங்கள் - ஊதும் சங்குகளும்
- போய் - அவைகளின் ஓசைகள் போய்
- பாடு - உன்னுடைய பஜனை நடக்கிறது என்று வெகு தூரத்தில் சொல்லும் செயல்கள்
- உடையனவே - உடையவனவைகளும்
- சால - மிகவும்
- பெரும் - பெரிதான
- பறையே - பேரி முதலானதான தோற்கருவிகளும்
- பல்லாண்டிசைப்பாரே - உன் பெருமைகளைப்பாடி உன்னுடைய நினைவும், பஜனமும் உலகத்தாரிடையே பல பல ஆண்டுகளுந் திகழ்ந்து வர வேண்டும் என்று கொண்டாடுவார்களும்
- கோல விளக்கே - பலவிதமான அழகுடைய விளக்குகளும்
- கொடியே - அவரவர் செய்யும் பஜனையின் பண்பாட்டை வெளியாக்கக் கூடிய கெருடக்கொடி, அநுமந் கொடி முதலானதுகளும்
- விதானமே - பஜனை கோஷ்டிக்கு மேல்கட்டியாக கையில் எடுத்துப்போகும் பட்டுச் சம்பரமும்
- ஆலினிலையாய் - ஆலிலையில் நிலைத்திருப்பவனே, அவைகளைக் கொண்டு நாங்களும் பஜனை செய்யவேண்டும் என்று உன் திருவுள்ளமாகில்
- ஏல் ஓர் எம்பாவாய் - எங்களுக்குக் கொடு.

## கருத்துரை

இந்த நூல் எடுத்துக்கொண்ட 'மார்கழி நோன்பி'ன் விபரங்களெல்லாம் 25 பாட்டோடு முடிவடைந்தன. இந்தப் பாட்டில் 'முன்னோர்கள் இந்த நோன்பை எப்படி அனுஷ்டித்தார்கள்' என்று பழமையை மறவாவண்ணம் அதையும் விவரித்துச் சொல்லுகிறாள். 'இது பழமையைப் போற்ற'லாகும்.

இதை உற்றுநோக்குங்கால், அந்த அனுஷ்டானத்தில் முதன்மையாகக் காணப்பட்டவை சங்கு ஊதுதலும், தோற்கருவிகளை ஓசைப்படுத்தலும், கொடிகளைப் போட்டுக் கொண்டும், பல-

விதமான விளக்குகளை ஏற்றிக் கொண்டும், மேற்கட்டுக்களின் கீழ் உயர்ந்த குரலில் பல பாட்டுகளை உரத்துப் பாடிக்கொண்டு போவதும் முக்கிய அம்சங்களாகத் தோன்று கின்றன. இவள் மாற்றி அமைத்துள்ள இந்த நோன்பில் இந்திரியங்களைக் கடத்துவதற்கு ஏதுவான 'நெய்யுண்ணோம், பாலுண்ணோம்' என்பது முதலான இரண்டாவது பாட்டில் சொன்ன விரதங்களும், பகவந் நிஷ்டையும் அவருடைய ஆராதனமும் ப்ரதானமாக அமைந்துள்ளன.

"இந்த அம்சங்களோடு முன்னவர்கள் கைக்கொண்ட செயல்களையும், பல உபகரணங்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும், என்பது உன் திருவுள்ளமானால் அவைகளையும் சேர்த்துக் கொள்ளுகிறோம்" என்கிறாள். மிக ஓசைப்பட சங்கு ஊதி பறையடிப்பதும், மிக உயர்வாகக் கொடிகளை பறக்க விட்டு, ப்ரகாசமான விளக்குகளை ஏற்றிப் போவதும், பகவத் பஜனத்தில் ஈடுபடாதவர்களையும் கூவி இதில் வந்து சேர்ந்து கொள்ளுங்கள் என்று அழைக்கும் சாதுவான முறை. ஆனதால் இதுவரையில் சொன்ன நோன்பின் அங்கங்கள் குறையாமல், முன்னோர்கள் தொடர்ந்த வழிகளும் சாதுவே ஆனதால் அவைகளையும் சேர்த்துக் கொள்ளத் தட்டில்லை என்று பாடி முடிக்கிறாள்.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

பழைய காலம் முதல் நடந்துவரும் நோன்பின் கிரமமாவது - பார் முழுதும் ஒலிக்கும் முரசு, சங்கம் ஒலித்தல், பேரிகை, பஜனையொலி, பல சித்திர விளக்குகள், கொடி, தோரணங்கள் இத்யாதிகள்.



## பாசுரம் - 27

*கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா, உன்றன்னைப்*
*பாடிப் பறைகொண்டு யாம்பெரும் சம்மானம்,*
*நாடு புகழும் பரிசினால் நன்றாகச்,*
*சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே,*
*பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்,*
*ஆடை யுடுப்போ மதன்பின்னே பாற்சோறு,*
*மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்,*
*கூடி யிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.*

### பதவுரை

- கூடாரை - தர்ம மார்கத்தில் சேராதவர்களை
- வெல்லும் - வெற்றிகொண்டு இதில் சேர்க்கும்
- சீர் - சிறப்புடைய
- கோவிந்தா - உலகத்தாரைக் காப்பாற்றுபவனே
- உந்தன்னை - உன் நாமங்கள், குணங்கள், சரிதைகளை
- பாடி - துதித்து, கானம் செய்து
- பறைகொண்டு - உன்னுடைய ரக்ஷணத்தை அடைந்து
- சூடகமே - தலையில் அணியும் சூடகமும்
- தோள்வளையே - தோளின்கீழ் அணியும் வளைகளும்
- தோடே - காதணிகளும்
- செவிப்பூவே - அதற்கு சற்று மேலே போட்டுக்கொள்ளும் பூ போன்ற ஆபரணமும்
- பாடகமே - காலில் அணியும் பாடகம் என்ற ஆபரணமும்
- என்று - என்று சொல்லப்படுபவைகளும்
- அனைய - அப்படிப்பட்ட
- பல்கலனும் - பல நகைகளும் யாம் அணிவோம்
- ஆடையுடுப்போம் - புது வஸ்திரங்கள் உடுத்திக்கொள்வோம்
- அதன்பின்னே கூடியிருந்து - நாங்கள் எல்லோரும் ஒன்று கூடி
- மூட நெய் பெய்து - சோறு முழுவதும் அமிழ்ந்து இருக்கும்படியாக நிறைய நெய்யை வார்த்து
- முழங்கை வழி வார - எடுத்து உண்ணும்போது மிகுதியான நெய் முழங்கை வழியாக வழியும் படியும்
- நாடு புகழும் பரிசினால் - உலகத்தார்கள் 'உன்னை பஜித்தவர்களுக்கு எல்லா நலனும் உண்டாகும்' என்று புகழும்
- பரிசினால் - வியந்து கொடுக்கும் சன்மானமே

> யாம் பெரும் சம்மானம் - நாங்கள் பெறும் சன்மானங்களாகும்.
அந்த உன் புகழ் நித்யமாக விளங்கட்டும்
> ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

இந்தப் பாட்டில் நோன்பினுடைய முடிவு கூறுகிறாள். இதற்கு வட மொழி நூல்களில் 'வ்ரதசமாபனம்' என்று பெயர் கூறுவர். நெய்யுண்ணோம், பாலுண்ணோம் என்று தொடங்கிய விரதம் பாற் சோறு மூட நெய் பெய்து, முழங்கை வழிவார உண்டும், மையிட்டெழுதோம், மலரிட்டு நாம் முடியோம், அதாவது சரீரத்துக்கு அழகிடோம் என்று தொடங்கிய நோன்பு, 'பல்கலனும் யாம் அணி- வோம் ஆடையுடுப்போம்' என்று சரீரத்துக்கு வேண்டிய அழகுகளை எல்லாம் செய்து முடித்தும் பூர்த்தி யானதைக் கூறுகிறாள். இவ்வளவும் செய்து கொண்டவர்கள் மையிட்டு எழுதியும் மலரிட்டுக் கூந்தல் முடித்தும் அழகிட்டுக் கொள்வார்கள் என்பதும் வருவித்துக் கொள்ள வேண்டியது.

'இந்தவிரதம் இருந்தவருக்கு ஐஹிகமான, த்ருஷ்டமானது மான இந்தப் பயன்களைச் சொல்லி, பாரோர் புகழ என்று முதல் பாட்டில் தொடங்கினபடி, 'நாடு புகழும் பரிசினால்' இந்த நோன்பு கண்ணெதிரே பயன் அளிப்பது என்று நாடு உன்னைப் புகழ்ந்து இந்த நோன்பை எடுத்துக் கொள்ளும்' என்பது கருத்து.

'பரிசு'- விதம், படி. 'நன்றாக' என்பது ஸ்வஸ்தி வாசகம். 'எல்லாம் நல்லபடியாக விளங்கக் கடவது' என்றும் ப்ரார்த்தனை. 'பாற்சோறு' என்ற எழுவாய்க்கு 'உண்டு களிப்போம்' என்ற பயனிலையை வருவித்துக் கொள்ளவும்.

வழி தவறி நடக்கிறவர்கள் திருந்தி, தர்ம நிஷ்டர்களாக மாறுவதற்கு பகவான் கற்பிக்கும் வழியாகும் இது. அதாவது, சிலர் ஸ்வபாவத்திலேயே தர்மநிஷ்டர்களாகப் பிறந்து, பகவானை பூஜித்து, அதனால் பெரும் நன்மையை அடைவது. இதைக்கண்டு உணர்ந்த மற்றவர்களும் இந்த வழியில் வருவார்கள் என்று தோன்ற 'கூடாரை வெல்லும் சீர்கோவிந்தா' என்றாள். 'கோவிந்தா' என்னும் சொல்லுக்கு, கோ - பூமியை, விந்ததி - ரக்ஷிக்கிறான் என்று சொற்பொருள். சாதுக்களின் க்ஷேமநிலையைக் காட்டி, அசாதுக் களையும் அந்த நிலைமையில் இழுத்து, அவர்களையும் காப்பாற்றுகிறான் என்பது. ஸ்ரீபாகவதம் தசமஸ்கந்தம் 22-வது அத்தியாயத்தில் காத்யாயினி விரதம் அனுஷ்டித்து, வஸ்த்ர சோரம் ஆனவுடன் கண்ணனுக்கு கோவிந்த பட்டாபிஷேகம் ஆனது

ப்ரஸித்தம். ஆனதால் அந்தப் பெயரால் கோவிந்தா என்று முடிக்கிறாள்.

### *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

விரத ஸமாபனம் - இரண்டாம் பாட்டில் விலக்கிய சுகம் இப்போது ஏற்கப்படுகிறது.

பாற்சோறு உண்கின்றனர். பல அணிகலன்களைப் பூட்டிக் கொள்கிறோம் என்று குறிப்பு.

இந்நோன்பு கண்ணெதிரே பயன் அளிப்பது என்று நாடு முழுதும் உன்னைப் புகழும். இந்நோன்பைக் கடைபிடிக்கும்.

ஸ்ரீ பாகவதத்தில் 10.22 அத்யாயத்தில் காத்யாயனீ விரதம் அனுஷ்டிக்கப்படுவது சொல்லப் பெறுகிறது. அடுத்து நிகழ்வது வஸ்த்ரசோரம். அடுத்து, கோவிந்த பட்டாபிஷேகம்.

அதற்குக் குறிப்பாக 'கோவிந்தா' என்ற விளி என்கிறார்.



## பாசுரம் - 28

***கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந் துண்போம்,***<br>
***அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து, உன்றன்னைப்***<br>
***பிறவி பெருந்தனைப் புண்ணியம் யாமுடையோம்,***<br>
***குறைவொன்று மில்லாத கோவிந்தா, உன்றன்னோ***<br>
***டுறவேல் நமக்கிங் கொழிக்க வொழியாது,***<br>
***அறியாத பிள்ளைகளோ மன்பினால், உன்றன்னைச்***<br>
***சிறுபே ரழைத்தனவும் சீறி யருளாதே,***<br>
***இறைவா! நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய்.***

### பதவுரை

- கறவைகள் - கறக்கும் மாடுகள்
- பின் சென்று - பின்னாலே போய்
- கானம் சேர்ந்து - அவைகள் மேயும்படியான காட்டிடங்களை நாங்களும் அடைந்து
- உண்போம் - எங்கள் உணவுகளை அங்கேயே உண்போம்
- ஒன்றும் - சிறிதும்
- அறிவு இல்லாத - அறிதல் என்பதே சூன்யமான
- ஆய்குலத்து - இடைச்சாதியில்

- உன்றன்னை - ஸகல அறிவுகளுக்கும் அதிஷ்டான தேவதையான உன்னையே
- பிறவி பெறும் - பிறந்த ஒரு பிள்ளையாக அடையும்
- தனை - அளவு
- புண்ணியம் - புண்ணியத்தை
- யாம் உடையோம் - நாங்கள் உடையவர்களாகிறோம்
- குறை ஒன்றும் இல்லாத - எங்கள் குடியில் பிறந்துவிட்டதனால் உன்னுடைய பரத்துவத்துக்கும், சர்வசக்திக்கும் ஒருவித குறையும் வரவில்லையே, அப்படிப்பட்ட கோவிந்தா
- உன்றன்னோடு - உன்னுடைய சொரூப ஐஸ்வர்யங்களோடு, நீ ரக்ஷகன், நாங்கள் ரக்ஷிக்கப்படும் பொருள்கள் என்னும்
- உறவு - தொடர்பு
- நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது - நமக்கு இங்கு ஒழிக்க வேண்டும் என்றாலும் முடியாதது
- அறியாத பிள்ளைகளோம் - உன் உயர்ந்த பதவியும், உன் பெருமையும் அறிந்து, பழகுவதற்குத் தெரியாத சிறுவர்கள்;
- அன்பினால் உன்னை
- சிறுபேர் - உலகத்தார் பேசும் பேர்
- அழைத்தனவும் - நாங்கள் கூப்பிட்டதையும்
- சீறியருளாதே - கோபியாதே
- இறைவா - ரக்ஷகனே
- பறை - உன்னுடைய ரக்ஷணத்தை
- நீ தாராய் - இன்னும் எங்களுக்கு நெடுகிலும் கொடுத்துக்கொண்டு இரு
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

நோன்பு நோற்று, அதன் ஸமாபனம் ஆகி, சாதாரண நித்திய வாழ்க்கையில் மறுபடி இவர்கள் இறங்குகிறார்கள். ஆனால் இது முந்தின வாழ்க்கை அன்று. 'பகவானுக்கும், அவனுடைய சொரூபத்தையும் தன்னுடைய சொரூபத்தையும் அறிந்து கொண்ட சேதனர்களுக்கும் 4 சம்பந்தங்கள் உள்ளன. இவைகளை மறந்து விடாமல் நாங்கள் எங்கள் பிற்கால வாழ்க்கையை நடத்துகிறோம். நீயும் ரக்ஷணத்தைச் செய்து வா' என்று ப்ரார்த்திக்கிறாள். இதில் உத்தரக்ருத்யாதிகாரம் - பகவத் ப்ரஸாதத்தை அடைந்த சேதனன் வர்த்திக்கவேண்டிய மனோ நிலை சொல்லப்படுகிறது.

பகவானோடு சேதனர்களுக்குள்ள நான்கு தொடர்புகளாவன :

1. அவன் பிரபு. இவர்கள் அவனுடைய விபூதிகள் (ப்ரபு, விபூதி பாவம்)

2. அவன் உடையவன். இவர்கள் உடைமை (ஸ்வாம்ய, ஸ்வம் பாவம்)

3. அவன் ரக்ஷகன். இவர்கள் ரக்ஷ்ய வஸ்துக்கள் (ரக்ஷக ரக்ஷ்ய பாவம்)

4. அவன் ஆச்ரயன். இவர்கள் ஆச்ரிதர்கள் (ஆச்ரய ஆச்ரித பாவம்)

இந்த நான்கு நிலையும் விளக்கப்பட்டு, இந்த ஞானத்தோடு நாங்கள் வர்த்திப்போம் என்ற ஸங்கல்பம் இந்தப் பாட்டில் சொல்லிக் கொடுக்கப் பெறுகிறது. 'உன்தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது' என்னும் வாக்கியத்தில் இந்த நான்கு உறவுகளும் அடங்கியுள்ளன. இதில் 'நமக்கு' என்பதின் ஸ்வாரஸ்யம், 'பல லௌகிகமான காரியங்களால் எங்களுக்கு உன்னோடு உள்ள உறவை நாங்கள் மறந்து கைவிட்டாலும், நீ அவைகளை மறவாமல் எங்களைக் காப்பாற்றுவாய்' என்பது.

'கறவைகள் பின் சென்று கானஞ் சேர்ந்துண்போம்' என்பது உத்தரக்ருத்யமாக, எங்கள் ஸ்வதர்மமாகிய கறவைகளை மேய்த்தல் என்பதையே செய்வோம் என்ற ஸங்கல்பம்; அத்யாத்ம நிலையில், ஞானாச்சார்யர் கற்பித்த வழியிலே நடந்து, ஐஹிக வ்யாபாரங்களைவிட்டு, பரமைகாந்திகளாக பகவதனுபவம் பண்ணுவோம் என்பது.

கறவைகள் பின் செல்லுதலாவது, இவர்களுக்கு ஞானப் பாலைச் சொரிந்த ஆசார்யர்கள் உபதேசித்த மார்கத்தில் வர்த்தித்தல். 'கானம் சேர்ந்து' என்றதை, 'ஏகாந்தமான இடம் போய் சேர்ந்து' என்றும், 'பாரமைகாந்த்யம் உடையவர்களாகி' என்றும் இரு விதத்திலும் பொருள் கொள்ளலாம். 'உண்போம்' என்றது 'ஆத்மாவுக்கு உணவாகிய பகவதனுபவத்தைச் செய்வோம் என்றபடி.

பசுக்களை மேய்த்து அதனால் தேவதைகளுக்கு ஆஹுதி கொடுக்கத் தக்கவைகளான பால், நெய் முதலியவற்றை உண்டாக்கியும், எருமைகளை மேய்த்து அதனால் மனிதர்களுக்குப் புஷ்டியளிக்கும் பால், நெய் முதலியவற்றை உண்டாக்கியும், ஆக இப்படி யக்ஞங்களின் மூலமாக தேவதாராதனத்துக்கும், அதைச் செய்யும் மனிதர்களுக்கும் இவர்கள் பரம்பரையாக உதவியிருப்பதைப் 'புண்ணியம்' என்கிறாள். இங்கே 'அறியாத பிள்ளைகளோம்' என்பது தன்னை மட்டுமல்ல, மற்ற ஆழ்வார்களும் ஸர்வ வ்யாபியாய் எங்கும் நிறைந்திருப்பவனை, இரு விபூதிகளின் நாயகனான சரண்யனைக் "குடந்தைத் திருமாலே" என்றும், "திருக்குடந்தை ஊரா" என்றும் இன்னும் பலபடியாக அழைத்ததை சிறுபேர் என்றும் அதற்கும் அபராத க்ஷாபணம் செய்து கொள்கிறாள். கீதை 11-வது அத்யாயத்தில் அர்ஜுனன் சொல்லியதுபோல.

## விசேஷக் குறிப்பு (Dr. VNV)

நோன்பு நிறைவேறிவிட்டது. இனி வழக்கமான நித்தியப்படி வாழ்க்கை முறை. ஆயினும் சேஷபூதரான சேதனர்கள் தம் ஸ்வரூபம் உணர்ந்துகொண்டு வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும். சேதனன் பகவானிடத்தில் கொண்டிருக்க வேண்டிய நாலுவித உறவுகளைத் தெளிவிக்கிறார் ஸ்வாமி

1. *பிரபு – விபூதி*
2. *ஸ்வாமி – ஸ்வம்*
3. *ரக்ஷணம் – ரக்ஷ்யம்*
4. *ஆச்ரயணம் – ஆச்ரிதன்*

இந்த உறவு நமக்கு இங்கு ஒழிக்கமுடியாது. நிருபாதிக சேஷத்வம் இதுதான். ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரம், உத்தரக்ருத்யாதிகாரம் காண்க. சொற்களுக்கு ஸ்வாபதேச அர்த்தம் ஆழ்ந்து, ஆய்ந்து தேறிட வேண்டும். சிறுபெயர் சொல்லியழைத்தலுக்கு அபசாரக்ஷாபணம் செய்து கொள்கிறாள்.



## பாசுரம் - 29

***சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து, உன்***
***பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்,***
***பெற்றம்மேய்த் துண்ணும் குலத்திற் பிறந்து, நீ***
***குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது,***
***இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா,***
***எற்றைக்கும் மேழேழ் பிறவிக்கும், உன்றன்னோ***
***டுற்றோமே யாவோ முனக்கேநா மாட்செய்வோம்,***
***மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.***

### பதவுரை

- சிற்றஞ்சிறுகாலே - மிகச்சிறுபொழுதிலேயே
- வந்து - உன்னை அடைந்து
- உன்னை சேவித்து - உன்னை வணங்கி
- உன் பொன் தாமரை - அழகிய தாமரைப்பூ போன்ற
- அடியே - திருவடிகளையே
- போற்றும் - துதிக்கும்

- பொருள் - பயனை
- கேளாய் - செவியில் வாங்கிக்கொள்
- பெற்றம் - மாட்டு மந்தைகள்
- மேய்த்து, உண்ணும் - அதன் பயன்களால் ஜீவிக்கும்
- குலத்தில் பிறந்து - குலத்தில் நாங்கள் பிறந்தோம் ஆதலால்
- குற்றேவல் - சிறு தொழில்கள்
- எங்களைக் கொள்ளாமல் போகாது - எங்களை எப்பொழுதும் ஆட்கொள்ளும் (எங்களுக்கு குற்றேவல் மட்டும்தான் செய்யத்தெரியும்)
- நீ இற்றைப் பறைகொள்வான் அன்று காண் - நீ இந்த பிறப்பில் எங்கள் ரக்ஷணத்தைக் கைகொள்வதற்குமட்டும் அன்று
- கோவிந்தா - ரக்ஷகனே
- எற்றைக்கும் - எல்லாகாலத்திலும்
- ஏழேழ் பிறவிக்கும் - ஏழு ஏழாக எங்களுக்கு ஏற்படக்கூடிய எல்லாப் பிறவிகளுக்கும்
- உந்தன்னோடு உற்றோமேயாவோம் - உன்னைச் சார்ந்தவர்களாகவே நாங்கள் ஆவோம்
- உனக்கே நாம் ஆட் செய்வோம் - உனக்கே வயப்பட்டவர்களாக எங்களுடைய எல்லாப் பணிகளையும் செய்வோம்
- மற்றை - நீ செய்ய வேண்டியது
- நங்காமங்கள் மாற்று - எங்கள் காமங்களை பிரகிருதி வழியில் போகாமல் அத்யாத்ம வழியில் மாற்றித்தா என்கிறாள்
- ஏல் ஓர் எம்பாவாய்.

## கருத்துரை

இதுவரை நோன்பு நோற்கும் காலத்திலும், உத்தரக்ருத்யத்திலும், பகவத் அதீனத்வம் சித்திக்க வேண்டுமென்று பாடினாள். இனி, அந்நிலை எங்கே தொடங்கவேண்டும் என்பதையும், அவ்விதம் அவருடைய அதீனன் ஆதல் எதற்காக என்பதையும் இந்தப் பாடலில் விளக்குகிறாள்.

'சிற்றஞ்சிறுகாலே' என்றது, சின்னஞ்சிறிய, மிகச்சிறிய என்றபடி. நாழிகை மிகச் சிறியதான விடியற்காலையில் என்னும் பொருளோடு, வயதிலும் சிறுவயதிலேயே, அதாவது 'மனசு, புத்தி ஆகியவை உலக வியாபாரங்களில் ஈடுபட்டு, சாஸ்திராப்யாஸங்கள் செய்து, நல்லவை தீயவைகளை பகுத்தறிதல் முடியாத இளம் வயதிலேயே' என்னும் பொருளையும் அடக்கிக்கொண்டிருக்கிறது. 'சிற்றஞ்சிறுகாலே... பொருள்கேளாய்' - பகவத் பக்தியில் திடப் படுதல். அறிவு என்பது புலப்படுமுன்னே உன்னை யடைந்து

சேவிக்க வேணும். (உம்மாச்சி ஞானம்) என்கிறாள். (பொருள் - ப்ரயோஜனம்.)

'மாடு மேய்க்கும் குலத்தில் நாங்கள் பிறந்திருக்கிறபடியால் எங்களுக்குக் குற்றேவல் தான் செய்யத் தெரியும். இந்தக் குற்றேவல்களே எங்கள் ஸ்வதர்மம், அவைகளே எங்களைக் கொள்ளும்' என்கிறாள். 'வேதங்களில் சொல்லி யிருக்கும் உன்னை உபாசிக்கும் வித்யைகள் எங்களுக்குத் தெரியாது. செய்ய இயலாது. இந்த ஜன்மத்தில் மாத்திரம் எங்களை நீ ஆட்கொள்வது போதாது. இன்னும் வரக்கூடிய எண்ணிறந்த ஜன்மங்களிலும் உன்னைச் சார்ந்தவர்களாகவும், உனக்கே ஆட் செய்யும்படியும் எங்கள் ஆசைகளை மாற்றி நீ ஆட்கொள்ள வேணும். இது தான் நாங்கள் சிற்றஞ்சிறுகாலே உன்னைச் சேவித்து வேண்டும் ப்ரயோசனம்' என்று தலைக்கட்டுகிறாள்.

## *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

எல்லாம் சொல்லியாகிவிட்டது. இப்படி நாங்கள் உனக்காட் பட்டோமே, என்ன இலக்கு? இதைத் தெளிவிக்கும் பாசுரம். ஸாரமான விஷயம் ஸ்வாமி ஸாதிக்கிறார்.

'சிறு பிராயத்திலேயே, அறிவு புலப்படும் முன்பே கூட, உன்னை அடைவது என்ற விஷயத்தில் ருசி ஏற்பட வேண்டும் (தற்கால வாசகர் இதை உணர்ந்து கருத்தில் வைத்திடுக !)

நாங்கள் மாடு மேய்க்கும் இனம். மாடு மேய்த்தலாகிய சிறுதொழில் (குற்றேவல்) மட்டுமே எங்களுக்குத் தெரியும்.ஞானம் கைவருவது கடினம். வித்யைகள் எதுவும் எட்டாது. ஆனால் இந்த ஜன்மத்தில் மட்டுமல்ல, எத்தனை பிறவிகள் எடுத்தாலும் உன்னைச் சார்ந்தவர்களாகவும், உனக்கே ஆட்செய்யும்படியும் நாங்களிருக்க, எங்களை நீ ஆட்கொள்ள வேண்டும். இதைத் தவிர எங்களுக்கு வேறு ஆசைகள் இரா. நீயே அப்படி ஸங்கல்பிக்கவேண்டும் ! இதுதான் நீ தரவேண்டிய பறை, ரக்ஷணம்.

நோன்பு என்ற வியாஜத்தின் நிறைவாக சிற்றஞ்சிறுகாலை உன்னிடம் வந்து நாங்கள் கேட்பதும் இதுதான்.

(இதுவரை பரவலாக 'பறை' என்னும் சொல்லுக்கு 'கைங்கர்யம்' என பொருள் கூறப்பட்டுக் கேட்டிருக்கும் நமக்கு இந்த ஸ்வாமி 'ரக்ஷணம்' என்னும் பொருள்பட அழகாக விளக்கி யுள்ளதை நோக்குக.)



## பாசுரம் - 30

*வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனைத்,*
*திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி*
*அங்கப் பறைகொண்ட வாற்றை, அணிபுதுவைப்*
*பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன,*
*சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே,*
*இங்கிப் பரிசுரைப்பா ரீரிரண்டு மால்வரைத்தோள்,*
*செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்,*
*எங்கும் திருவருள்பெற் றின்புறுவ ரெம்பாவாய்.*

### பதவுரை

- வங்க - மரக்கலங்கள் ஓடுகின்ற
- கடல்கடைந்த - கடலைக்கடைந்த
- மாதவனை - லக்ஷ்மிகாந்தனை
- கேசவனை - எல்லோருக்கும் ஈசனானவனை
- திங்கள் - சந்திரன் போன்ற
- திருமுகத்து - அழகிய முகத்தையுடைய
- சேயிழையார் - செம்மையான ஆபரணங்களை அணிந்தவர்கள்
- சென்று - போய்
- இறைஞ்சி - மார்கழி நோன்பால் ஆராதித்து
- அங்கு - அத்திருவாய்பாடியில்
- அப்பறை - எல்லா நிலையிலும் உதவும் பகவானுடைய விசேஷரக்ஷணத்தை
- கொண்ட - தாங்கள் பெற்ற
- ஆற்றை - மார்கத்தை
- அணி - அழகிய
- புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்த
- பைம் - பசுமையான
- கமல - தாமரைமலர்களால் தொடுத்த
- தண் - குளுமையான
- தெரியல் - மாலைகளைச் செய்யும்
- பட்டர் பிரான் - விஷ்ணுசித்தன் மகளான
- கோதை சொன்ன - கோதை இயற்றிய
- சங்கத்தமிழ் - சங்கத் தமிழில் ஆகிய
- மாலை - ‘கோர்வையான
- முப்பதும் - இந்த 30 பாட்டும்
- தப்பாமே - சொல்லிலோ, பொருளிலோ பிசகில்லாமல்

- இங்கு - இவ்வுலகத்தில்
- இப்பரிசு - இந்தப் பெருமையை; இந்தத் திருப்பாவையை
- உரைப்பார் - பாடுபவர்கள்
- ஈரிரண்டு - நான்கு
- மால் - பெரிய
- வரை - மலை போன்ற
- தோள் - தோள்களையும்
- செங்கண் - சிவந்த கண்களையும்
- திருமுகத்து - அழகிய முகமண்டலத்தையுமுடைய
- செல்வத் திருமாலால் - அஷ்டைச்வர்யங்களுக்கும் இருப்பிடமான நாராயணனால்
- எங்கும் - மூவுலகத்திலும், சொர்க வைகுண்டாதி லோகங்களிலும்
- திருவருள் பெற்று - பகவானுடைய க்ருபைக்கு பாத்திரர்களாகி
- இன்புறுவர் - நித்யமான சுகத்தை அடைவர்
- எம்பாவாய்.

## கருத்துரை

முதல் பாட்டில் 'சீர்மல்கும் ஆய்பாடிச் செல்வச் சிறுமீர்காள்' என்று, உலகச் செல்வத்தில் மிகுந்தவர்களாகிய சிறுமியர்களை நோன்புக்கு அழைத்தாள். அவர்களெல்லாம் பகவானுடைய ரக்ஷணத்திற்கு இந்த நோன்பினால் ஆளாகிவிட்டார்கள் என்பதை 'அங்கப் பறை-கொண்ட' என்பதால் விளக்குகின்றாள்.

முதல் பாட்டில் அவர்கள் முக வைலக்ஷண்யம் பல படியாய் இருந்த படியால் அதைச் சொல்லாமல், 'நேரிழையீர்', 'அந்தந்த அங்கத்துக்குத் தகுந்த ஆபரணங்களை அணிந்திருப்பவர்களே' என்று அழைத்தாள். இந்தப் பாட்டில் 'திங்கள் திருமுகத்துச் சேயிழையார்', 'சந்திரன் போல் ஒளிவீசும் அழகிய முகங்களையும் மிக உயர்ந்த ஆபரணங்களையும் உடையவர்கள்' என்று சொல்லுகிறாள்.

'இழை' என்னும் சொல்லை இழைதல், நடந்து கொள்ளுதல் என்னும் பொருளில் நேரிழையீர் என்று சொன்னதற்கு. அவர-வர்களுடைய பிறந்த குடும்ப தர்மங்களை அனுஷ்டித்த வர்களென்று பொருள். அதை மாற்றி இங்கே 'சேயிழையார்' என்பதற்கு பகவானிடம் ப்ரபத்தி பண்ணி, அவன் அபய ப்ரதானத்தைப் பெற்ற ப்ரபன்ன அனுஷ்டானம் என்று பொருள்.

'ஆற்றை' என்றதனால் இந்தச் செவ்விதான ஒழுக்கத்தைக் காட்டி, அவர்கள் பெற்ற பெரும் பயனையும் சொல்லி, 'அந்த

வழியில் நீங்களும் ஒழுகுங்கள்' என்று கூறும் சொல்லாகவும்இதைக் கொள்ளலாம். தரித்திரத்தால் அடிபட்டு மிகத் துன்பங்களுக்கு ஆளாகிக் கஷ்டப்பட்ட ஒரு புலவன் நல்வினைப்பயனால் ஓர் உயர்ந்த ப்ரபுவிடம் போய்ச் சேருகிறான். அந்தப்ரபு இந்தப் புலவன் துயரத்தை யெல்லாம் மாற்றி, இவனுக்கு வேண்டிய செல்வங்களைக் கொடுத்து, இவனையும் இவன் குடும்பத்தாரையும் வாழ வைக்-கிறான். இந்தப் புலவன், தான் முன்பு வருந்தினது போல் வருந்தும் மற்றொரு புலவனைப் பார்த்து, தன் முந்தின நிலைமை யையும் அந்த ப்ரபுவினுடைய பெருமைகளையும், குணங்களையும் பரக்கச் சொல்லி "நீயும் அவனைப்போய் அடைந்தால் உனக்கு நன்மை விளையும்" என்று சொல்லி. ஆற்றுப் படுத்துகிறான். வழியில் செலுத்துகிறான்.

இவ்விதம் அமையும் நூலுக்கு 'ஆற்றுப்படை' என்று **96** ப்ரபந்த லக்ஷணங்களைக் கூறும் நூல்கள் கூறுவன. இந்த முறையில் சங்க நூல்களில் பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை என்னும் **3** நூல்களும் இருக்க, மனிதனை மனி-தனுக்கு ஆற்றுப்படுத்துவதைக் காட்டிலும், தெய்வத்துக்கு ஆற்றுப்படுத்துவது உயர்ந்ததாகும் என்று கடைச் சங்கப் புலவராகிய நக்கீரர் தெளிந்து, ஜீவன்களையெல்லாம் தன்னுடைய உபாசனா தெய்வமாகிய முருகனுக்கு ஆற்றுப்படுத்தி திருமுருகாற்றுப்படை எழுதினார். இங்கே ஆண்டாள் எல்லா ஜீவன்களையும் நாராயணன் பக்கல் ஆற்றுப்படுத்தி மார்கழி நோன்பை நாராயணனுடைய பஜனமாக்கி இந்த 33-வது வித்யையைத் தலைக்கட்டுகிறாள்.

இங்கே 'பட்டர்பிரான் கோதை' என்றது வேதங்களின் சொரூபியாக கெருடாழ்வாரே இவளை வளர்க்கும் பொருட்டு பெரி-யாழ்வாராக அவதரித்தார்; ஆதலால் பிதாவிடத்தில் எக்காலத்திலும் உண்மைப் பொருள்களாகிய வேதப்பொருள்களைக் கற்று இவள் மலர்ந்தவள் என்றும் அந்தப் பொருள்முடிபுகளாலேயே இந்த நூல் அமைந்திருக்கிறது என்பதையும் ஒலிக்கும்.

'சங்கத்தமிழ்' என்றது 'சங்க நூல்களில் பெரும்புலவர்கள் கையாண்ட சொற்களும், பொருள்களுமே இந்த நூலின் ப்ரயோகம்' என்பது. 'பைங்கமலத் தண் தெரியல்' என்பது பகவத் கைங்கர்யமே தன் சொரூபம் என்று வர்த்தித்த பட்டர்பிரான் பெருமையைச் சொல்வது.அதுவே ஸ்ரீவைஷ்ணவ சொரூபம் ஆனதால். 'தப்பாமே' என்றது 'சொல்லிலும், பொருளிலும் ஐயந்திரிபின்றி நற்பொருளைக் கொள்ளவேண்டும்' என்று வற்புறுதியது.

'பரிசு' - பணி, பண்டம். 'உரைப்பார்' - பாராயணம் பண்ணு-வார், அனுஸந்திப்பார். 'எங்கும்' என்றது சமஷ்டியான இடத்தைக்

குறிக்கும். 'இன்புறுவர்' என்றதால் இந்த நோன்பின் பயனாக ஆத்ம லாபமும், சுகமும் இவரைத்தேடி வந்தடையும் என்றபடி. 'எம்பாவாய்' என்று இந்தக் கடைசிப் பாட்டையும் தன்னுடைய ஹார்த விக்ரஹமான ந்ருஸிம்ஹனுக்கு சமர்பிக்கிறாள்.

## *விசேஷக் குறிப்பு (Dr. VNV)*

இதைப் பலச்ருதிப் பாசுரம் என்பது மரபு. முதல் பாட்டில் 'நேரிழையீர்' என்று தோழிகளை அழைத்தாள். இதில் 'சேயிழையார்' என்று குறிப்பிடுகிறாள். நோன்பின் விளைவாகச் செய்வதான, பிரபன்ன நிஷ்டையை ஆபரணமாகப் பெற்றுப் பூண்டு விளங்குகிறார்கள்.

பறைகொண்ட ஆற்றை - ரக்ஷணம் பெற்ற கிரமத்தைச் சொல்லிப் பாடி மற்றோரையும் திருத்தி இந்த முறையைக் கைக் கொள்ளத் தூண்டுகிறாள் என்கிறார். (ஆற்றுப்படை என்று தமிழ்ச் சங்கநூல்கள் நம் மனத்திற்கு வருமே !)

ஸ்ரீ ஆண்டாள் காட்டித்தரும் இந்நோன்பு 33-வது வித்யை என்று ஸ்வாமி கணித்ததை முன்பே கண்டோம். அனைத்துலகும் கையாளக்கூடிய மார்க்கமாம். ந்யாஸ வித்யையிலும் எளியது ! ஸர்வோபஜீவ்யம் ! இந்த நூல் 'சங்கத் தமிழ் மாலை' என்று அழைக்கத் தக்கது. சங்கத்தமிழ்ச் சொற்கள் ஈண்டும் நிறையக் காண்கிறோம். அத்துடன் அத்தகைய தத்துவங்களே காணப்பெறும்.

இந்த ஸ்ரீஸூக்தி நெடுகிலும் உள்ள 'ஏலோரெம்பாவாய்' என்பதை ஏல்+ஓர்+எம்பாவாய் என்று அனுஸந்தித்ததன் கருத்து: இதை என் பாவாய்; அதாவது என் ஹார்தவிக்ரஹமான ஸ்ரீந்ரு-ஸிம்ஹமூர்த்தியே, உனக்கு ஸமர்ப்பிக்கின்றேன் என்று ஸங்கல்பம். (ஏல் - ஏற்றுக்கொள், ஓர் - உகந்தருள்)

'இன்புறுவர்' என்ற பயன் ஆத்ம லாபம் பெற்றதால் தன் ஆத்ம ஸ்வரூபம் கைவரப்பெறுவர்.

இன்னும் பல சுவையான கருத்துக்கள் ஆங்காங்கே உள்ளன. எல்லாம் சொல்ல இயலாது. ஓரளவு கோடி காட்டியுள்ளேன்.

**ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்.**
**ஸ்ரீமதே ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:**



*கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்*
*சோதிமணிமாடம் தோன்றுமூர் – தீதிலா*
*நல்ல பக்தர் வாழுமூர் நான்மறைகள் ஓதுமூர்*
*வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்.*

### பதவுரை

- வில்லிபுத்தூர் - வில்லிபுத்தூராகிய
- வேதக்கோன் - பெரியாழ்வாருடைய
- ஊர் - ஊரானதால்
- கோதை பிறந்த ஊர், கோவிந்தன் வாழுமூர்;
- சோதி மணி மாடம் தோன்றுமூர் - தேஜோமயமான அழகிய இருக்கைகள் காணப்படும் ஊர்
- தீதில்லா - பாவங்களெல்லாம் விலகிய
- நல்ல பத்தர் - சுத்தாத்மாக்களாகிய நித்யசூரிகள்
- வாழும் - நின்று நிலவும்
- ஊர்
- நான்மறைகள் - நான்கு வேதங்களும்
- ஓதுமூர் - சொல்லும், அத்யயனம் பண்ணப்படும் ஊர்.

### கருத்துரை

உயர்ந்த வெண்பாக்களில் முக்கியமான விஷயம் கடைசியில் வரும் என்பது மரபு. ஆனதால் கடைசி பாகத்தை முதலில் கொண்டுவந்து பொருள் கொள்வது மரபு. இதற்கு 'இருதலை முடிந்து பொருள் கொளல்' என்பர். அந்த முறைப்படி இந்த வெண்பாவிற்குப் பொருள் கொண்டால் முன்சொன்னது ஹேதுவாகவும் பின் சொன்னது அதன் காரியமாகவும் அழகாக அமைந்து இருக்கின்றது ரஸிக்கத்-தக்கது.

'*வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்*' -

வில்லிபுத்தூர் என்ற ஊர் வேதங்களுக்கெல்லாம் தலைவனாகிய கெருடாழ்வார் பெரியாழ்வாராக அவதரித்த ஊர். அவர் அவ்விதம் அவதரித்து ஒரு மனைவியை மணந்து க்ருஹஸ்தாச்ரமத்தைத் தொடங்கினார். இது காரணமாக,

'*கோதை பிறந்த ஊர்*' -

தனக்கு வளர ஒரு வீடாயிற்றென்று ஆண்டாள் அந்த ஊரில் வந்து அவதரித்தாள். இது காரணமாக,

*'கோவிந்தன் வாழும் ஊர்'* -

மஹாபாரதம், ஸ்ரீபாகவதம், ஹரிவம்சம் முதலான பண்டை நூல்களில் சொல்லப்பட்ட வாழ்வுகளைக் காட்டிலும் விலக்ஷணமான ஒரு வாழ்வு கோவிந்தனுக்கு இந்த ஊரில் ஏற்பட்டது. இது காரணமாக,

*'சோதி மணிமாடம் தோன்றும் ஊர்'* -

வேதமும், பிராட்டியும், கோவிந்தனும் இங்கே நித்யவாசம் செய்வதால் அந்த ஊரில் இருக்கும் இருக்கைகள் எல்லாம் வைகுண்டத்தில் நித்யசூரிகள் வாசஸ்தலங்கள் போல் சோதி மணி மாடங்களாக கவியின் கண்ணுக்குத் தோன்றுகின்றன. இது காரணமாக,

*'தீதிலா நல்ல பத்தர் வாழும் ஊர்'* -

அதில் வசிப்பவர்களெல்லாம் தீது இல்லா அபஹதபாப்மாக்களான நல்ல பத்தர் - அந்தராத்மாவாகிய பக்தர்களாகக் காணப் படுகிறார்கள். அவர்கள் வாழ்வும் பக்தி மார்க வாழ்வாகவே இருக்கிறது.இது காரணமாக,

*'நான்மறைகள் ஓதுமூர்'* -

இது இரு பொருள்களில் ப்ரயோகம். அந்த ஊரில் உள்ளவர்கள் நான்கு வேதங்களையும் ஓதுகிறார்கள் என்பது முதற் பொருள். "தத் விஷ்ணோ:பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய:' என்று யஜுர் வேதம் ஸ்ரீவைகுண்டத்தைப்பற்றிப் பேசுகிறது. இவ்வாறு நான்கு வேதங்களுமே 'வைகுண்டம்', 'வைகுண்டம்' என்று ஓதும் ஊர் இதுவே என்பது இரண்டாவது பொருள்.

**ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்.**
**ஸ்ரீமதே ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:**



# மார்கழி நோன்பு

1. மார்கழி மாதத்தில் வைகுண்ட ஏகாதசியும், ஆருத்ரா தர்சனமும், பெருமாள் கோவில்களில் பகல் பத்து, இராப்பத்து உத்ஸவங்களும், சிவாலயங்களில் திருவாதிரைத் திருநாளும் வருகின்றன. விடியற் காலத்தில் பனி வீழ்ந்துகொண்டிருக்கும்போதே குளிர்ந்த நீரில் ஆறு குளங்களில் ஸ்நானம் செய்வதும், ஸ்வாமிக்கும் அபிஷேக, ஆராதனங்கள் செய்து விடியுமுன் பூஜை, நிவேதனம் செய்வதும், கோவில்களிலும், வீடுகளிலும்கூட அனுஷ்டானத்தில் இருந்து வருகிறது. மார்கழி நீராடலை ஜனங்கள் அனுஷ்டிப்பதோடு, கோவில்களிலும் மார்கழி நீராட்ட உத்ஸவம் கொண்டாடுகிறார்கள். இவைகளுக்குள்ள ஆதாரங்கள் பல.

## காலம்

2. மனிதர்களுக்குள்ள கால அளவினால் ஒரு வருஷம் என்பது, தேவதைகளுக்குள்ள அளவினால் ஒரு நாளாகும். ஒரு ஹோரைக்கு 2-1/2 நாழிகை விகிதம் ஒரு நாளை 24 ஹோரைகளாகப் பிரித்துள்ளார்கள். ஒவ்வொரு தினமும் அந்த தினத்தின் பெயருள்ள ஹோரையில் தொடங்கி, வரிசைக் கிரமமாக 24 ஹோரைகளாகி, அடுத்த தினம் பொழுது விடிகிறது. இந்த 60 நாழிகையும், பகல் 12 ஹோரையும் இரவு 12 ஹோரையுமாகும். தேவமானத்தால் உத்தராயணம் பகலாகவும், தக்ஷிணாயனம் இரவாகவும் கருதப்படுகிறது. இந்தக் கணக்குப்படி ஒரு மாதம் 2 ஹோரை அளவுள்ளதாகும். ஒவ்வொரு நாளும் விடிவதற்குமுன் உள்ள 2 ஹோரை கொண்ட 5 நாழிகை உஷக்காலம் ஆவதுபோல், தேவதைகளுக்கு மார்கழி மாதம் உஷக்காலமாகும். வைதிக நிஷ்டர்கள் விடிவதற்கு 5 நாழிகைக்கு முன், பஞ்சபஞ்ச உஷக்காலத்தில் தூக்கத்தைவிட்டு எழுந்து தேவதாத்யானங்கள் செய்துகொண்டும், காலைக்கடனைச் செய்து சூர்யன் உதிக்கும்போது உபஸ்தானம் செய்யவேண்டுமென்றும் ஆஹ்நிகங்கள் கூறுகின்றன. இந்தக் காலத்திலே, வரும் பகலிலும் இரவு நித்திரைக்குப் போகும்வரை செய்யவேண்டிய கார்யங்களை ஸங்கல்பித்துக்கொண்டு அவைகள் நன்கு நிறைவேண்டுமென்று ஈஸ்வர ப்ரார்த்தனை செய்ய வேண்டியதும் கடமையாகும். தேவமானத்தில் தை பிறந்தவுடன் விடியும் நாளுக்கு, மார்கழி 30 நாளுமே அந்த உஷக்காலமாகும். தினத்திற்கு உஷக் காலத்திற்குள்ள விசேஷங்களெல்லாம்

அமைந்து, ஆண்டுக்கு இது ப்ராஹ்ம முகூர்த்தமாதலின் இதன் விசேஷத்தையும், பரிசுத்தத்தையும், உயர்வையும், வியந்து "மாஸானாம் மார்கசீர்ஷோஹம்" என்று கீதை 10-வது அத். 35-வது ச்லோகத்தில் கண்ணன் கூறினான். எல்லாக் கார்யங்களுமே அவற்றைத் தொடங்கும், செய்யும் காலத்தின் மேன்மையாலும் பலத்தாலும் பெரும்பயன் தருவன. இந்த முப்பது தினங்களிலுமே ப்ரஹ்ம ஸம்ருத்தி நிறைந்திருக்கிறது. ஆனதால் பகவத்பஜன, தேவதாராதன, ஜப, தப, க்ரந்தபடனாதிகளுக்கு இது மிகச் சிறந்த காலமாகக் கொள்ளப்பெற்று, இதில் ஒவ்வொரு தினமும் வரும் உஷக்காலம் அதனினும் சிறந்ததாகவும் ஏற்றமுடையதாகவும், எல்லா நற்காரியங்களுக்கும் அங்கீகரிக்கப் பெற்றிருக்கிறது. மூர்த்தி, தீர்த்தம், க்ஷேத்ரம் என்று போற்றப்பெறும் மூன்றோடு காலத்தின் உயர்வும் சேர்ந்து நற்பயன் தருதலின் எல்லா க்ஷேத்ரங்களிலும் மார்கழி மாதத்தில் விசேஷ உத்ஸவங்கள் கொண்டாடுகிறார்கள்.

## கெர்ப்போட்டம்

3. மேலும், தனுர் ராசியில் பூராட நக்ஷத்திரத்தில் தொடங்கி சூர்யன் ஸஞ்சரிக்கும் ஸுமார் 13-1/2 நாட்களுக்கு கெர்ப்போட்ட நாட்கள் என்று பெயர். இந்த தினங்களில் வானிற்காணும் மேக நிலைகளைக் கொண்டுதான் வருகிற வருஷத்தில் எந்தெந்த மாதத்தில் எம்மட்டில் மழை பெய்யுமென்பது முன்னரே நிதானிக்கப்பெறுகிறது. இந்தக் காலம் மார்கழி 13-ம் தேதி முதல் 27-ம் தேதி வரை இருக்கும். அதில் ஆனிக்கு 1-1/2, ஆடிக்கு 2-1/2, ஆவணிக்கு 2-1/4, புரட்டாசிக்கு 2, ஐப்பசிக்கு 2-1/4, கார்த்திகைக்கு 2, மார்கழிக்கு 1 என்று நாட்களைப் பிரித்துக்கொடுத்து, இந்த தினங்களில் வானில் மேகங்கள் இருக்கும் நிலைக்கு ஏற்றபடி வருகிற வருஷத்தில் கால மழை விபரத்தைத் தெரிந்துகொண்டு, அதன்படி உழவர்கள் என்னென்ன பயிர் செய்வது என்று தீர்மானித்துக்கொள்வார்கள். கிராமங்களில் மந்தை முதலான வெளியிடங்களில் வயதான குடியானவர்கள் இரவு முழுவதும் கண் விழித்துக் கொண்டு கர்ப்போட்டத்தைப்பார்த்து வருங்கால மழையைத் தீர்மானிப்பது தமிழ்நாட்டில் எல்லோரும் அறிந்த விஷயம். இது மேஹராஜனுடைய உஷக்கால ஸங்கல்பம்.

4. எல்லா உபநிஷத்துக்களும் பசுவாக அர்ஜுனனைக் கன்றாக ஊட்டவிட்டு கோபால நந்தனன் கீதாம்ருதத்தைக் கறந்து கொடுத்ததும் இந்த மாதத்தில்தான். ஈஸ்வரன் கோவில்களில்

திருவாதிரைத்திருநாள் சுக்ல பக்ஷ சப்தமி முதல் பௌர்ணமி முடிய ஒன்பது தினங்களில் நடக்கும்போது அதன் நடு நாளாகிய ஏகாதசி வைகுண்ட ஏகாதசியாக அமைந்திருப்பது சைவ, வைணவ சமயத்தினர் இருவரும் போற்றி உகக்க வேண்டிய ஒரு அபூர்வ பொருத்தம். அன்றுதான் ஸ்ரீ பகவத் கீதையும் சஞ்சயரால் திருதராஷ்ட்ரனுக்குச் சொல்லப்பட்டு உலகத்திற்கு பிரஸித்த-மானது. கண்ணன் அர்ஜுனனைக் கருவியாகக்கொண்டு அவன் கையம்பு மழையால் அஸத்துக்களான அரசர்களையும், அவர்கள் ஸைந்யங்களையும் அழித்தொழித்து பூபாரத்தை நீக்கி தர்மத்தை மறுபடி ஸ்தாபித்ததும் இந்த மாதத்தில்தான்.

## நோன்பு

5. தவம், விரதம் என்பன சிறிது வித்யாசத்துடன் நோன்பு என்றும் சொற்பொருளைக் குறிப்பன. மார்கழி மாதத்தில் முன்னோர்கள் கைக்கொண்டு நோற்ற நோன்புகள் (1) மார்கழி நீராடல் (2) விசேஷ தேவ பூஜை (3) பகவன் நாம பஜனை (4) க்ரந்த பாராயணம் முதலியன. இவற்றுள் முக்கியமானது மார்கழி நீராடல் என்று தெரி-கிறது. இதற்கு அம்பாவாடல், தைந் நீராடல், தவத்தைந் நீராடல், பாவைய நீராடல் என்றும் பெயர்கள் சங்க கால முதல் பிரஸித்தி பெற்றிருக்கின்றன. பரிபாடல் என்னும் தொகை நூலில் ஆசிரியர் நல்லந்துவனார் வையையைப்பாடும் பதினோராம் பாட்டில் 74 முதல் 92 அடிகளில் அடியிற்கண்டபடி பாடுகிறார்.

*கனைக்கு மதிர்குரல் கார்வான நீங்கப்*
*பனிப்படு பைதல் விதலைப் பருவத்து*
*ஞாயிறு காயா நனிமாறிப் பிற்குளத்து*
*மாயிருந் திங்கண் மறுநிறையாதிரை*
*விரிநூ லந்தணர் விழவு தொடங்கப்*
*புரிநூ லந்தணர் பொலன்கல னேந்த*
*வெம்பா தாக வியனில வரைப்பென*
*வம்பா வாடாலினாய் தொடிக் கன்னியர்*
*முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்*
*பனிப்புலர் பாடிப் பருமண லருவியி*
*னூதை யூர்தர வுறைசான்ற வேதியர்*
*நெறிநிமிர் நுடங்கழல் பேணியசிறப்பிற்*
*றையன் மகளி ரீரணி புலர்த்தா*
*வையை நினக்கு மடைவாய்த் தன்று*
*மையாடலாடன் மழபுலவர் மாறெழுந்து*

*பொய்யாடலாடும் புணர்ப்பி னவரவர்*
*தீயெரிப் பாலுரு செறிதவமுன் பற்றியோ*
*தாயருகா நின்று தவத்தைந்நீ ராடுத*
*னீயுரைத்தி வையை நதி.*

இதன் பொருள் "கருத்த வானம் இடியோசை நீங்கப் பனி மிகுதலால் குளிரால் நடுங்குதலை யுடைய முன்பனிப் பருவத்தில் சூர்யன் காயாததும் கடைசியாக சொற்ப மழையுடையதுமான மார்கழி மாதத்தில் சந்திரன் களங்கத்தோடு நிறைந்தவனாகும் திருவாதிரை நாளில் வேத பிராமணர்கள் விழாவைத் தொடங்கவும் ஆகமம் உணர்ந்த பிராமணர்கள் பூஜைக்குவேண்டிய பாத்திரங்கள், திரவியங்களைச் சேகரித்துக்கொண்டு வரவும் பெருமையுடைய பூமண்டலம் வெப்பத்தால் தவிக்காமல் குளிரக்கடவது என்று, சடங்கின் முறையறிந்த பார்ப்பன மூதாட்டியர் நோற்கும் முறையைக் காட்டிக்கொடுக்க அதன்படி அம்பா வாடலைச்செய்யும் கன்னி-யர்கள் பனியோடுகூடிய விடியற்காலையில் நீராடிப் பருத்த மணலில் ஓடும் நீர்க்காற்று வீசுவதால் கரையில் சாஸ்திரோத்தமாக வேத-பிராமணர்கள் அக்னியைவளர்த்து அதில் ஆகுதிகளைக் கொடுத்து வரும் சிறப்பையுடையதாக அதன்கண் பெண்கள் சென்று தம் ஈர ஆடைகளைக் காயவைத்துக் கொண்டிருக்க அந்த அக்னியில் ஆகுதி செய்யும் *மடைவைகையே உனக்குத் தகுதியுடைய தாயி-ருந்தது" (*மடை = தேவதைகளுக்குப் படைப்பது) 'வையை நதியே ! இந்த கன்னியர்கள் அவரவர் தாய்மாரின் கிட்டே நின்று தவத்தைந் நீராடுதல் கவிகள் வருணனைகளிற் சொல்வது போல் நெருப்பின் மத்தியில் நின்று முன் செய்த தவத்தானாயதோ சொல்க' என்பதாகும்.

**6**. இந்த விரத்தைக் கொண்டாடுவதை ஸ்ரீபாகவதம் 10-வது ஸ்கந்தம் 22-வது அத்யாயம் சொல்லுகிறது.

1. *ஹேமந்தேப்ரதமே மாஸிநந்தவ்ரஜ குமாரிகா:*
   *சேருர் ஹவிஷ்யம் புர்ஜானா:*
   *காத்யாயன் யர்ச்சனவ்ரதம்*

2. *ஆப்லுத்யாம்பஸி காளிந்த்யா ஜலாந்தே சோதயேருணே*
   *க்ருத்வா ப்ரதிக்ருதிம் தேவீம் ஆனர்ச ந்ருப ஸைகதீம்*

3. *கந்தர் மால்யை: ஸுரபிபிர் பலிபிர் தூபதீபகை:*
   *உச்சா வசைதுசோபஹாரை: ப்ரவாள பலதண்டுலை:*

4. *காத்யாயனி மஹா மாயே மஹாயோகின் யதீஸ்வரி*
   *நந்த கோபஸுதம் தேவி பதிம் மேகுருதே நம:*

5. *இதி மந்த்ரம் ஜபந்த்யஸ்தா: பூஜாம் சக்ரு: குமாரிகா:*
*ஏவம் மாஸம் வ்ரதம் சேரு: குமார்ய: கிருஷ்ண சேதஸ:*

6. *பத்ரகாளீம் ஸமானர்சு பூயான் நந்தஸுதப்பகு:*
*உஷஸ்யுத்தாய கோத்ரை: ஸ்வைரஸ்யோன்யா பத்த பாஹவ:*

இதன் பொருள் - ஹேமந்தருதுவின் முதல் மாதத்தில் நந்தனுடைய ஆயர்பாடியிலுள்ள கன்னிகைகள் ஹவிஸ்ஸை உணவாகக் கொண்டு காத்யாயனியை பூஜிக்கும் விரதத்தை அனுஷ்டித்தார்கள். அருணோதயத்தில் யமுனை நதியில் நீராடி நீரின் கிட்டே மண-லினால் தேவியின் உருவத்தைச் சமைத்து அர்ச்சித்தார்கள். மணமுள்ள புஷ்ப சந்தனங்களால் அர்ச்சித்தும் தூபதீபங்கள் காட்டியும் பலிகள் உபகாரங்களாகச் சிவந்த பழங்களும் அரிசிகளும் கொடுத்தார்கள். அவர்கள் செய்த ஸ்தோத்திரம் மஹாமாயையின் சொரூபியும் மஹாயோகினியும் எல்லாவற்றிற்கும் மேலானவளுமான காத்யாயனி தேவியே உனக்கு நமஸ்கரிக்கிறேன். நந்தகோபன் குமாரனை எனக்குப்பதியாகச் செய். இந்த மந்திரத்தை ஜபிப்பவர்-களாய்க் கன்னிகைகள் பூஜை செய்தார்கள். இவ்விதம் கிருஷ்ணனையே மனதில் உடையவர்களாக பூஜை செய்தார்கள். ஒரு மாதம் விரதம் அனுஷ்டித்தார்கள். நந்தபுத்ரன் பதியாக ஆக வேண்டு மென்று பத்ரகாளியை ஆராதித்தார்கள். தினந்தோறும் யமுனையில் நீராடப்போகும் போது கிருஷ்ண நாமத்தை உரத்துப் பாடிக்கொண்டும் ஒருவரையொருவர் கைகோர்த்துக்கொண்டும் சென்றார்கள்.

7. தைந்நீராடுதலை தவத்தைந்நீராடுதல் என்றது பெரும் பயனைத் தரும் ஒரு அனுஷ்டானம் (தவம்) ஆக இந்த நீராட்டம் கருதப் பெற்றது என்பதைக் குறிக்கும். பரிபாடலிலும் இதற்கு தவத்தைந்நீராடல் என்றே பெயர் காணுகிறது. "தாயருகானின்று தவத்தைந் நீராடுதல்" இதுபோல் "அம்பாவாடலின் ஆய்தொடிக் கன்னியர்" என்னும் பிரயோகத்திற்குத் தாயருகே நின்று ஆடுதலால் அம்பாவாடல் எனப் பெயராயிற்று என்பர் உரைகாரர். ஆயினும் ஸ்ரீ பாகவத சம்பிரதாயத்தைக் கொண்டு தேவியை நோக்கி நோற்கும் ஆடல் எனினும் அமையும்.

8. இவரி பிங்கலந்த நிகண்டில் பெண்மக்கள் 3-வது வயதில் பொம்மைக் கல்யாணம் செய்வதும் 5 முதல் 9 வயது வரை உள்ளன்போடு மன்மதனைக் குறித்து நோன்பைச் செய்வதும் பனி மிகுந்த நீரில் மூழ்கிப் பாவையாடலைச் செய்வதும் என்று கன்னிகைகளின் விரதங்கள் குறிக்கப்பெறுகின்றன.

*பேணும் சிறப்பிற் பெண் மகவாயின்*
*மூன்றாமாண்டிற் குழமண மொழிதலும்*
*ஐந்தின் முதலாவொன்பதின் காறும்*
*ஐங்கணைக் கிழவனை ஆர்வமொடு போற்றலும்*
*பனிநீர் தோய்தலும் பாவையாடலும் (சூத்திரம்-1369)*

பனி நீர் தோய்தல் என்றதனால் பனிப்பர்வமாகிய மார்கழி, தை மாதங்களில் இந்த நோன்பு நோற்கப்பெற்றது என்பது தெளிவாகும்.

9. இந்த நீராட்ட நோன்பையே இன்னும் மலையாள தேசத்தில் ஆதிரைத் திருநாள் என்று கொண்டாடுகிறார்கள். பெண்டிர் விடியற் காலத்தில் கூட்டம் கூட்டமாகச் சென்று நீரில் மூழ்கி ஆடிப்பாடியும் திருவாதிரைக்கு ஒரு வாரம் முன் தொடங்கி திருவாதிரையோடு திருவிழாக் கொண்டாட்டத்தை முடிக்கிறார்கள். கடைசி நாளில் அவர்கள் புதிய ஆடையாபரணங்கள் அணிந்து, சர்க்கரை சேர்ந்த விசேஷப் பாயஸம் ஒன்றைச் செய்து உண்கிறார்கள்.

*கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா, உன்றன்னைப்*
*பாடிப் பறைகொண்டு யாம்பெரும் சம்மானம்,*
*நாடு புகழும் பரிசினால் நன்றாகச்,*
*சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே,*
*பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்,*
*ஆடை யுடுப்போம் அதன்பின்னே பாற்சோறு,*
*மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்,*
*கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.*

என்னும் பாட்டில் இது ஆண்டாள் பாடியுள்ள ஒரு மிகப் பழமையான அனுஷ்டானமென்பதை விளக்குகிறது.

10. ஸ்ரீ பாகவதத்தில் ‘பெண்கள் கிருஷ்ணன் புகழை இரைந்து பாடிக் கொண்டும் கைகோர்த்துக் கொண்டும் போனார்கள்’ என்பதாலும், மார்கழி மாதம் விடியற் காலத்தில் இன்னும் தமிழ் நாட்டில் பஜனை கோஷ்டிகள் செல்வது கிராமங்களில் தாதன் சேமக்கலங் கொட்டிக் கொண்டும் சங்கூதிக் கொண்டும் பாடிக்கொண்டும் தெருக்களில் வருவதும், ஒரு கையில் விளக்கெடுத்துக்கொண்டும் இன்னொரு கையில் மணியைவைத்து அடித்துக்கொண்டும் தெருக்கள் வழியே போவதும் நாட்டில் மிகப்பழமையான வழக்கமென்பதை

*மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்,*
*மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்,*
*ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன,*
*பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே,*

*போல்வன சங்கங்கள் போய்ப்பாடுடையனவே,*
*சாலப் பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே,*
*கோல விளக்கே கொடியே விதானமே,*
*ஆலினிலையாய்! அருளேலோ ரெம்பாவாய்.*

என்னும் பாடல் விளக்குகிறது.

**11.** பத்ம புராணத்தில் ஸ்ரீ பாகவத மஹாத்ம்யத்தைச் சொல்லு-கையில், மார்கழி மாதம் சுக்லபக்ஷ நவமி முதல் பௌர்ணமி முடிய உள்ள ஏழு தினங்கள் ஸ்ரீ பாகவதத்தைப் பாராயணம் செய்து நற் பயனைப் பெறுவதற்கு உயர்ந்த தினங்கள் என்று குறிப்பிடுகிறார்.

## நோக்கங்களும் பயன்களும்

**12.** இனிப் பரிபாடலில் "வெம்பாதாகுக வியனிலவரைப்பென" என்றதால் மழை நன்கு பெய்து பூமி வெப்பமின்றிக் குளிர்தல் நோக்காக இவ்வாடல் தொடங்கப்பெற்றதாயினும், மேலே சொன்ன 11-வது பாடலில் 116 முதல் 121 அடிகளில்

*கழுத்தமை கைவாங்காக் காதலர்ப்புல்ல*
*விழுத்தகை பெறுகென வேண்டுதுமென்பாரும்*
*பூவீழரியிற் புலம்பப் போகா*
*தியாம் வீழ்வா ரேம மெய்துக வென்பாரும்*
*கிழவர் கிழவிய ரென்னா தேழ்காறு*
*மழவீன்று மல்லற்கேண் மன்றுகவென்பாரும்.*

என்று அவர்கள் வேண்டும் வரன்களைச் சொல்லுகிறார். இதன் பொருள்: "கழித்திற் போட்ட கையை எடுக்காத காதலரை யாம் மணக்க வீறு பெற வேண்டும் என்பவரும், பூவில் விழுந்த வண்டு போல எம்மைப் புலம்பவிட்டுப் போகாமல் நாமடையும் கணவர் பெருமையுடையரா யிருத்தல் வேண்டு மென்பவரும், எம் கணவரும் யாமும் கிழவர், கிழவியர் எனப்படாமல் நிலையுறுதலை உடைய இளமையை இத்தவம் தர செல்வத்தோடு நிலைபெறுக என்பவரும்" என்கிறார். காத்யாயனீ ஸ்தோத்ரத்தின்படி நந்தகோபன் ஸுதனைத் தமக்கு புருஷனாகப் பெற்றால் இம்மூன்றும் கைகூடுதல் ஸித்தம் என்பது கருதத்தக்கது.

இவைகளால் கன்னிகைகள், வருகிற ஆண்டில் நல்ல மழை பெய்து நாடு செழிக்க வேண்டு மென்றும், தங்களுக்கு நல்ல கணவர் கிடைக்க வேண்டுமென்றும், எல்லாச் செல்வத்துடனும் நீண்ட காலம் கணவருடன் கூடி நல் வாழ்வு வாழ வேண்டுமென்றும் இந்த நோன்பை நோற்றார்க ளென்பதும், அதே காலத்தில் விசேஷ

விழாக்களும் ஆராதனங்களும் தெய்வங்களுக்குச் செய்யப்பட்டன என்பதும் கிடைக்கிறது. இவைகளெல்லாம் திருப்பாவையிலும், திருவெம்பாவையிலும் குறிக்கப்பெறுகின்றன. இதுபோல் ஜைனர்-களுக்குள்ளும் ஒரு திருப்பாவை நூல் வழங்கி வந்ததென்றும், அவர்களும் மார்கழி நோன்பை நடத்தி வந்தார்களென்பதும் தெரிய வருகிறது. அவர்கள் நோன்புக்கும் இவைகளே நோக்கமாவன.

## திருப்பாவை

**13.** ஸ்ரீ ஆண்டாள் இயற்றிய திருப்பாவையும் இந்த நோன்பைக் கன்னிகைகள் நோற்கவேண்டு மென்கின்றது. இது பிங்கலத்தில் ஒன்பதாவது ஆண்டில் கன்னிகைகள் "பனி நீர் தோய்தலும் பாவையாடலும்" என்பதற்கேற்ப அமைந்துள்ளது. "நெய்யுண்ணோம் பாலுண்ணோம்" முதலான விரதங்கள் "ஹவிஷ்யம் புஞ்ஜானா:" என்னும் ஸ்ரீ பாகவத வாக்கியத்தை அனுசரிக்கிறது. "தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து" என்பது "வெம்பாதாகுக வியன் நிலவரைப்பு" என்பதைச் சுட்டுகிறது. "தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித்தொழுது வாயினாற்பாடி மனத்தினால் சிந்திக்க" என்பது "ஆப்லுத்யாம்பஸி காளிந்த்யா" என்பதிலும் "கந்தைர்மால்யை சுர்பிபிபலிபிர் தூபதீபகை: உச்சாவசை: சோபஹார: ப்ரவாள பலதாண்டுலை" என்பதையும் "இதி மந்த்ரம் ஜபன்த்யஸ்தா: பூஜாம் சக்ரு: குமாரிகா:", "ஏவம் மாஸம் வ்ரதம் சேரு: குமார்ய: கிருஷ்ண சேதஸ:" என்பதையும் சுட்டுகிறது. இது-போல் எல்லா நூல்களிலும் உள்ள ஒவ்வொரு குறிப்பையும் ஆண்டாள் திருப்பாவை தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பது கருதற்பாலது. பழமையிலிருந்து புதுமை முளைத்தெழுந்த பண்பாடு.

**14.** இனி நோன்பின் பயனை ஆண்டாள் விவரித்திருக்கும் அழகு தனிப்பட்டு நிற்கிறது. இவைகளைக் கூட்டிப் பார்க்கில் "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று தொடங்கி "பாடிப்பறை கொண்டு யாம் பெரும் சம்மானம்" என்று தொடர்ந்து "அங்கப்பறை கொண்டவாற்றை" என்று முடிக்கிறாள். இதன் பயன் 27-ம் பாட்டில் சொன்ன பல்கலன் அணிதலும், ஆடையுடுத்தலும் அதன் பின்னே பாற் சோறு உண்டலும் இவ்விதம் கூடியிருந்து குளிர்தலும் என்பது நூலின் உபக்ரம, உபசம்ஹார, மத்ய விவரண சாஹித்ய விதிகளுக்குப் பொருத்தமாகும். ஆதலின், பண்டைய நூல்கள் சொன்ன பயனே இந்நோன்பின் பயனென்பதும் திருப்பாவையில் தெளிவாகும். ஆனாலும், மூர்த்தி ஸ்வரூபமாகிய

நாராயணனை நோக்கியே இந்த நோன்பு நோற்கத்தக்கது என்பது ஆண்டாளுடைய உள்ளக்கிடக்கையாகும். ஆதலால் முதற்பாட்டில் பரத்திலுள்ள நாராயணனையும், இரண்டாவது பாட்டில் வ்யூக ரூப-மாகப் பரமன் பாற்கடலில் பையத்துயிலும் மூர்த்தியையும், மூன்றாவது பாட்டில் வாமனனாகி த்ரிவிக்ரமனான விபவ ரூபத்-தையும் குறித்து பரத்தில் நினைவும், வ்யூகத்தில் சொல்லும் உடையவர்களாய், விபவத்தைப் பாடி, பகவானை மனத்தில் எப்படி பாவித்துக்கொண்டிருக்கிறோமோ அந்தப் பாவைக்குச் சாற்றி நீராடவேண்டும் என்று மன, மொழி, செயல்களால் இது பகவா-னுடைய ஆராதனமே என்பதைத் தெளிவுபடுத்துகிறாள். மழை பெய்வதற்கென்றும், தத்தமக்கு நல்ல கணவர் கிடைக்க வேண்டு-மென்றும், கன்னியர் பல நூற்றாண்டுகளாக அநுஷ்டித்துவந்த மார்கழி நோன்பை மனுஷ்ய ஜீவசாமான்யமும் நோற்கத்தக்க தாக்கி, அது மோக்ஷபர்யந்தமான பயனைத் தரத்தக்கதென்றும், ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தின் முக்கியமான உண்மைகள், முடிவுகள், தத்துவங்களை யெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் பெருமையுடைய ஒரு நூலை ஆலமர வித்துபோற் பாடியுள்ள திறன் ஸ்ரீ ஆண்டாளின் தனிச் சிறப்பாகும்.

15. திருக்குறளில் முதல் அதிகாரமாகிய கடவுள் வாழ்த்தில் முதலாவது குறள் முழு முதற்கடவுளது உண்மை கூறி, மீத ஒன்பது பாக்களால் சரணாகதி ஒன்றே பிறப்பின் பயனைத் தருவது என்பதை வற்புறுத்துகிறது. இரண்டாவது அதிகாரமான வான் சிறப்புக்குப் பொருள் காணத் தொடங்கிய பரிமேலழகர் "அஃதாவது, அக்-கடவுளதாணையான் உலகமும் அதற்குறுதியாகிய அறம் பொரு-ளின்பங்களும் நடத்தற்கேதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல்" என்று கடவுள் வாழ்த்துக்கும் வான் சிறப்புக்கும் தொடர்பு கூறுகிறார். இதை அநுஸரித்தே கடவுளது உண்மையையும், அவன் நாராயணன் என்பதையும் மனத்துக்கும், சொல்லுக்கும், வழிபாட்டுக்கும் அவனுடைய பர, வ்யூஹ, விபவங்கள் இலக்காவன என்பதை விவரித்த ஸ்ரீ ஆண்டாள் 4-வது பாடலில் வான் சிறப்பு கூறுகிறாள். சூர்யனும் மழையும் கண்கண்ட தெய்வங்களாதலின் ஸ்ந்த்யோபாஸனத்தில் ஸூர்ய மண்டலத்தின் நடுவே இருக்கும் நாராயணனையே நாம் த்யானிப்பதுபோல் மேகமண்டல ரூபியாய் இருக்கக்கூடிய நாராயணனையே த்யானித்துப்பாடுகிறாள். இதில் "ஆழிமழைக் கண்ணா !" என்பது கோதைத் தமிழே ! உப்பு மிகு-தலால் ஒன்றுக்குமுதவாத ஆழி (கடல்) நீரை ஸர்வஜீவ உப-

ஜீவியாகிய மழை நீராக ஆக்கித் தருவதற்குக் கண் (இடம்) ஆக உள்ளவனே ! என்று மேக ரூபமான நாராயணனை விளிப்பதாகும். இதில் நாராயணனுடைய இழிந்தோரை மேலோராக்கும் பதித பாவனத்வமும் (மாற்றாரை மாற்றழித்தலும் - உப்பு நீரை உப்பழித்தல்) வென்று பகை கெடுக்கும் பெருமையும் (பகையாகிய உப்பைக் கெடுத்து நன்னீராக்கித் தருதல்) இன்னும் பல உத்தம குணங்களும் விளங்குவன. சார்ங்கமுதைத்த சரமழை அஸுர, ராக்ஷஸ சக்திகளை யெல்லாம் வென்று, கொன்று, அடித்துக் கொண்டு போவது போல், மழைபெய்த நீர், வறட்சி, வியாதி, எச்சில், அசுத்தம் முதலியவைகளை அடித்துக்கொண்டு போய் உலகத்தைப் பரிசுத்தமாக்குவதும், 'முல்லையைக் குறிஞ்சியாக்கி, மருதத்தை முல்லையாக்கிச் சொல்லரும் நெய்தல் தன்னைச் சோர்வரும் மருதமாக்கிக்' கீழ் உள்ளவர்களுக்கும் மேல் பதங்கள் கிடைக்கும் படியாகச் செய்வதும் தெளியக்கிடக்கின்றன. மழையின் இன்றி-யமையாமையைத் "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு துப்பாயதூஉம் மழை" என்னும் குறளாலும், அஃதின்றி தெய்வங்களுக்கும் வழிபாடில்லை என்பதை "சிறப்பொடு பூசனை செல்லாது வானம் வறக்கு மேல் வானோர்க்கு மீண்டு" என்னும் குறளிலும் பாடிக் கடைசிக் குறளால்

*நீரின் றமையாதுலகெனின் யார் யார்க்கும்*
*வானின் றமையா தொழுக்கு.*

உலகத்தார் நல்லொழுக்க வழியே எல்லா தர்மங்களும் நிற்றலின் இம்மழை நீரின்றி அவ்வொழுக்கமும் நில்லாது என்று தலை-கட்டுகிறார். இவைகளை உற்றுநோக்குங்கால் அக்கினியே ஸர்வ வியாபியாகவும் ஸர்வோபஜீவியாகவுமிருக்கிற பரப்ரஹ்ம ஸ்வரூபம் என்று ஸர்வவ்யாபக ஸ்தாபனம் செய்த தத்துவத்திற் கெதிரே, நீருக்கே இந்த ஸர்வவியாபகத்வமுண்டு என்னும் நாராயணார்த்த ஸ்வாரஸ்யத்தை இந்தத் தத்வம் எடுத்துரைப்பது போல் காண்கிறது.

**16**. இவ்விதம் பரத்வ நோக்கத்தோடு மார்கழித் திருநாளைச் கொண்டாடுதல் எல்லோரையும் கர்ம, ஞான, பக்தி, ப்ரபத்திகளின் வழியே ஒழுகச்செய்து மோக்ஷ பர்யந்தமான பயனைத்தரும் என்று பொருள் கொள்ளினும் தகும். மேலும், அர்த்தபஞ்சகங்களின் தத்வங்களை ஆண்டாள் அமைத்துப்பாடும் அழகு, மேலே கண்ட பயனை இந்நூல் தரவல்லது என்பதை வலியுறுத்துகிறது. முதல் **5** பாடல்களால் பகவத் ஸ்வரூபத்தைப் பாடினாள். **6** முதல் **15** பாடல்களால் பகவானை மறந்து, அவனை அடைவதற்குச் செய்ய

வேண்டிய பிரயத்தனங்களையும் மறந்து, மாயையினால் ப்ரக்ருதி நிஷ்டையில் உறங்கிக்கிடக்கும் ஜீவன்களை எழுப்பினாள். 16 முதல் 20 பாட்டுகளில் ஸம்ஸாரக் கடலில் மூழ்கி தன்னை மறந்துகிடக்கும் ஜீவன்களை மறந்து, பகவான் தன்னை ஆச்ரயித்த நித்ய முக்தர்களிடையே மயங்குபவனாய் உறங்கிக்கிடப்பதை உணர்ந்து அவனை எழுப்பினாள். 21 முதல் 25 பாடல்களில் இப்படி உறங்கிக் கிடக்கும் ஜீவன்களை ரக்ஷிக்கவேண்டிய கடமை அவனுடைய தென்று அவனுக்கு இடித்துக் கூறி கர்ம, ஞான, பக்தி, ப்ரபத்திகளால் அவனை அடைந்து 'என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறை கொள்வான்; இன்றுயாம் வந்தோம், இரங்கேலோ ரெம்பாவாய்' என்று மனுச் செய்கிறாள். 26 முதல் 30 பாட்டுக்களில் இந்த நிஷ்டை, விரதம், அனுஷ்டானங்களின் பயனைச் சொல்கிறாள். இதன்படி முதல் 5 பாட்டால் ஈஸ்வரஸ்வரூபமும், 6 முதல் 15 பாடல்களால் ஜீவ ஸ்வரூபமும், அதன் தூக்கமாகிய விரோதி ஸ்வரூபமும், 16 முதல் 20 பாட்டுக்களால் பகவத் ஸ்வரூபமாகிய ரக்ஷகத்வமும், 21 முதல் 25 பாடல்களால் உபாயமாகிய ப்ரபத்தியும் 26 முதல் 30 பாடல்களால் அதன் பயனாகிய மோக்ஷ ப்ராப்தியும் சொல்லப் பெறுகின்றன. இவைகளை அடியில் கண்ட ச்லோகமும் பாட்டும் முறையே விளக்குவன.

*நீளாதுங்க ஸ்தநகிரி தடீஸுப்த முத்போத்ய க்ருஷ்ணம்*<br>
*பாரார்த்யம் ஸ்வம் ஸ்ருதி ஸதஸிரஸ்ஸித்த மத்யாபயந்தீ,*<br>
*ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகிளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே*<br>
*கோதாதஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்துபூய:*

*பாதகங்கள் போக்கும் பரமனடி காட்டும்*<br>
*வேதம் அனைத்துக்கும் வித்தாகும் - கோதை தமிழ்*<br>
*ஐயைந்து மைந்தும் அறியாத மானுடரை*<br>
*வையம் சுமப்பது வம்பு.*

> வையம் - மனித சரீரமாகிய உயர்ந்த வண்டி

> வம்பு - புதுமை

**ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம் !**



## நாச்சியார் திருமொழி

1. மார்கழி நோன்பு என்னும் பெயரால் சென்ற 1956-ம் வருடம் ஆரம்பத்தில் வெளியிட்ட ஓர் சிறு நூலின் தொடர்ச்சியாக இது வெளியாகிறது. 3 பதிகங்களால் ஆன திருப்பாவையில் மார்கழி நோன்பு என்னும் தலைப்பின் கீழ் சிறிது அனுபவித்தோம். அவைகளைத் தொடர்ந்து 14 பதிகங்களில் 143 பாடல்களாலான நாச்சியார் திருமொழி இணைந்திருக்கும் மாண்பை எண்ணுவாம்.

2. ஆண்டாள் பூமிப்பிராட்டியின் அவதாரம். வராஹ சரமச்லோகமாகிய விதையை வராஹ ரூபியாகிய பகவான் பூமிப்பிராட்டி யிடத்தில் விதைக்க அது ஒரு கொடியாக முளைத் தெழுந்தது. அக்கொடிதான் ஆண்டாள். பூமியினுடைய பரிபூர்ண ஸத்வம் இவளிடத்தில் நிரம்பியிருந்ததற்கு இவள் அணிந்த மாலை இவள் சரீர ஸ்பரிசத்தால் அதிக மணம் பெற்றுத் திகழ்ந்ததும் அதையே பகவான் விரும்பியதும் சாக்ஷியாகும். பூமியின் குணம் கந்தம், வாஸனை. சூர்ப்பனகைப் படலம் 57-வது பாடலில் சீதையைச் சொல்லும்போது 'மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே போல்வாள்' என்று சீதைக்கு உபமான வஸ்துவாக ஒரு கொடியைக் கம்பன் பேசுகிறான். இதற்கு உண்மைப்பொருள் பூதேவியிடத்தில் வராஹ சரமச்லோகமாகிய விதையை விதைக்க அதிலிருந்து முளைத்தெழுந்த ஓர் கொடியென்று கொள்ளற்பாலது. ஸ்ரீஆண்டாள் சீதையினும் பன்மடங்கு அழகிலும், கற்பிலும் அதிசயித்து நிற்பவளாதலின் ஆலங்காரிகள் விதிப்படி இவளே சீதைக்கு உபமானப் பொருளாய் அமையத்தக்கவள் என்று கவிச்சக்கரவர்த்தி இவளை உபமானமாகக் கூறினான். விபவத்தில் ராமனாக வந்த சரண்யன் சீதையை மணந்தான். அவனால் ஆராதிக்கப்பெற்ற தெய்வமாகிய ஸ்ரீரங்கநாதன் அர்ச்சாசமாதியிலிருந்து கிளம்பி வந்து ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாளை மணந்தான். அர்ச்சையைக் கிளப்பித் தன்னிடம் வரச்செய்யும் பக்தியும் கற்பும், அழகும் எத்தகையவாய் இருப்பன என்பது உய்த்துணரத் தக்கது. மணியென்னும் சொல்லுக்கு அழகு என்றும், ஒசையென்றும், இரத்தினம் என்றும் கூடப் பொருள்கள் உண்டு. அந்த விதை இம்மூன்றின் தன்மையையும் கூட உடையதாய் இருந்தது என்று கொள்ளத்தக்கது. வஞ்சி என்பதற்கு தர்ம தேவதை என்னும் பொருளும், பெண் என்னும் பொருளும் இந்தக் கொடிக்கு அமைந்தனவே.

3. பகவதாராதனத்தை ஸ்வதர்மத்தாலும், ஸ்வகர்மத்தாலும் செய்ய வேண்டும் என்பது சாஸ்திரங்களின் துணிபு. இவ்வித தர்மமும், கர்மமும் பூமிதேவிக்கு அமைந்துள்ளவை. அவை பகவானிடம் இடைவிடாத அநந்ய பக்தி செய்வதும் ஆறு ருதுக்களாலும் அவனை ஸேவிப்பதும் ஆகும். அந்த பக்தியாலும் சேவையாலும் அவன் மகிழ்ச்சி கொண்டவனாய் இவளுக்கு அருள்வது இவள் பெறும் பயன். இவைகளே இவள் பாடிய 173 பாட்டுக்களின் ஸாரமாகும்.

4. 'மாஸானாம் மார்கசீர்ஷோஹம்' என்று தானே மாதங்களில் மார்கழியாக இருக்கின்றேன் என்று சரண்யன் பணித்த பிரகாரம் அவனை பக்தி செய்யத் தொடங்குங்கால் அவனது ரூபமாகிய மார்கழி மாதத்தில் தன் நோன்பைத் தொடங்கினாள். ஆண்டாள் கோபியருடன் 30 பாடல்களால் அவன் நீர்மையில் ஆடி எங்கும் புகழ் பெற்று இன்புறும் நிலையில் கன்னிகா ஸ்த்ரீ வர்கங்களைத் திருத்திப் பணிகொண்டு நாராயணனுடைய (பறை) ரக்ஷணத்தை எல்லோரும் பேசும்படி செய்தாள். இது ஹேமந்த ருதுவின் முதல் மாதமாகிய மார்கழியில் நோற்ற பண்பு.

5. இனி தை பிறக்கிறது. நாச்சியார் திருமொழி தொடங்குகிறது. 'தையொரு திங்களும்' என்னும் தொடக்கம் ஹேமந்த ருதுவின் இரண்டாவது மாதத்தைக் குறிக்கிறது. அடுத்த அடியில் மாசி முன்னாள் சிசிரருது வந்துவிடுகிறது. இந்தப் பதிகம் காமனைத் தொழுவதாகும். அதில் 'மற்றை நங்காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்' என்று மார்கழி நோன்பில் வேண்டியவாறே பகவான் இரங்கி இவளுக்கு அருள் செய்கிறான். ஆதலின், 'மனிதப்பிற-வியில், பிறந்த யாருக்கும் நான் வாழ்க்கைப்படேன், கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள் என்னும் இப்பேறு எனக்கருள்வாய்' என்று பலபடியாகத் தன்னை பகவானிடம் சேர்க்கும்படி காமனை வேண்டுகிறாள். 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டாய் மன்மதனே' என்று தன் உறுதிப்பாட்டை மன்மதனுக்கு விளக்குகிறாள்.

6. இவள் தமிழ் மகளாய்ப் பிறந்தமையின் தமிழ்ப்பெண் இலக்க-ணத்தை யொட்டித் தன் சரிதையையும் செயலையும் கவிதையையும் நடத்துகிறாள். பிங்கலந்த நிகண்டில் 1369 ம் சூத்திரம்,

*பேணும் சிறப்பிற் பெண்மகவாயின்*
*முன்றாமாண்டிற் குழமண மொழிதலும்*
*ஐந்தின் முதலாவொன் பதின்காறும்*

*ஐங்கணைக் கிழவனை ஆர்வமொடு போற்றலும்*
*பனி நீர் தோய்தலும் பாவையாடலும்*

என்று பெண்மகளைப் பேணும் சிறப்பு விதிக்கப்பட்டுள்ளது. இதற் கேற்ப பனி நீர் தோய்ந்த பிறகு ஐங்கணைக் கிழவனாகிய மன்மதனை ஆர்வமோடு போற்றி வேண்டுகிறாள்.

7. இனி இரண்டாம் பத்தில் சிசிரருதுவின் இரண்டாவது மாதமாகிய பங்குனி மாதம் வந்து விடுகிறது. தை மாதம் ஒரு பாதத்தில் முடிவானது போல் 'காமன் போதருகாலமென்று பங்குனி நாள் கடை பாரித்தோம்' என்னும் குறிப்பால் வசந்தத்தை எதிர்பார்த்து அதில் காமன் செய்யும் சேஷ்டைகள் மானிடர்பால் தனக்கு நோக்கில்லாதிருக்கும்படி சிசிரருதுவிலேயே அவனை ஆராதித்து வேண்டிக் கொண்ட குறிப்பு சொல்லப் பெறுகிறது. உடனே காமன் போதருகாலம் வருகின்றது. அது வசந்த ருது. இதில் 'சிற்றில் சிதையேல்' என்னும் பிரார்த்தனை பகவானிடத்தில் செய்யப் பெறுகிறது. இதன் ஸ்வாரஸ்யம் தன் சரீரத்தையே ஆன்மா குடியிருக்கும் சிறுவீடு என்றும் இது மனிதர்க்கு அர்ப்பணமாகில் மண்ணின் திறத்தையே மறுபடி அடையும் என்றும் ஆன்மாவையும் அதன் வழியிழுத்து பிறப்பின் பயனற்றதாக்கும் என்றும் அது பகவானுக்கு அர்ப்பணமாகில் தூய நற்பதவியெய்தி ஆன்மாவுக்கும் உயர்பதவி அளிக்கும் என்னும் துணிபால் எங்களை உன் பொருளாக நீ ஏற்றுக்கொள் அப்போதுதான் எங்கள் சிறுவீடுகளாகிய சரீரங்கள் சிதைந்து மண்ணாகாது நல்வாழ்வு எய்துவனவாகும் என்று வேண்டுகிறாள். இங்கே சிற்றில் என்பது இடவாகுபெயராய் அதில் வாழும் ஆன்மாவையும் குறிக்கும். உடற் செய்கைகள் வழியே உயிர் மேன்மை பெறக்கடவதாதலின் இவ்வுடலும் உயிரும் சிதையாது உயர் பதவி பெற உன்னுடையவையாக ஆக்கிக்கொள் என்று வேண்டுகிறாள். அவனிடம் தாங்கள் மையல் கொண்டிருப்பதைப் பலபடியாலும் தெரிவித்து 'எங்களை மையல் ஏற்றி மயக்க உன் முகம் மாய மந்திரந்தாங்கொலோ' என்றும் நீ எங்களுக்கு எவ்வித தீங்கிழைத்தாலும் 'உன்றன்மேல் உள்ளம் ஓடி உருகலல்லால் ஊரோடம் ஒன்றும் இலோம் கண்டாய்' என்றும் இன்னும் பலபடியாகப் பேசி 'எம்மைப் பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால் இந்தப் பக்கம் நின்றவர் என் சொலார்' என்று முடித்துத் தம்மைக் கைவிடக் கூடாது என்று வேண்டுகிறாள்.

8. 3, 4, 5 பதிகங்களில் பகவத் கிருபையும் அவனைக்கூடும் குறிப்பும் குயிலைத் தூதுவிடும் உபாயமும் பேசப்பெறுகின்றன.

மார்கழி நோன்பின் பயனாக தன் 30-ம் நாளில் ஸ்ரீ பாகவத்தில் கோபியர் ஆடைகளைக் கண்ணன் கவர்ந்து அவர்களுக்குத் திரும்பக்கொடுத்து உதவிய ரகஸ்யத்தை இவள் காலமும் இடமும் மாற்றி வசந்தத்தில் அவன் துகிலையெடுத்துச் செல்ல, அவைகளைத் தரும்படி கோபியர்கள் வேண்டுவதாக மூன்றாம் பதிகத்தில் நிர்வகிக்கிறாள். 4ம் பதிகம் பேசும் கூடலிழைத்தல் தமிழ் நாட்டின் மிகப்பழைய மரபு. மணலைப் பரப்பி அதன் பக்கத்தில் உட்கார்ந்து, கண்ணை மூடிக்கொண்டு தான் நினைத்த காரியம் கைகூடுமாவென்று அறிவதற்காக மணலிற் சுழி போடுவதும் கண்ணைத் திறந்து பார்த்தால் சுழியின் இருதலையும் கூடியிருந்தால் அக்காரியம் கைகூடுமென்றும் கூடாவிட்டால் கைகூடாதென்பதும் அதன் குறிப்பு. இப்படிப் பத்துக் கூடலிழைத்தாள், பத்தும் கூடி-விட்டது. உடனே 5ம் பதிகத்தில் குயிலைத் தூது விடுகிறாள். அத்-தூதும் பலித்துவிட்டது.

9. 6, 7 பதிகங்கள் ஆனி, ஆடி மாதத்திய கிரீஷ்ம ருதுவின் செயல்களைச் சொல்வனவாகும். தன்னை ஆயன் மணந்ததாக இவள் கனவு கண்டு, அதன் வழி தனக்கு அவன் பதியானான் என்ற த்ருட சித்தத்தோடு 7-வது பதிகத்தில் அவனோடு நெருங்கி உறவு கொண்ட பாஞ்சசன்னியத்தை அவன் அனுபவம் எப்படி இருக்கும் என்று எனக்குச் சொல் என்று வினாவுகிறாள். இத்தோடு கிரீஷ்ம ருது முடிவடைகிறது.

10. 8ம் பதிகம் வர்ஷ ருதுவில் தொடங்குகிறது. விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்கள் குழுமுகின்றன. அவைகளைத் தூதுவிடுகிறாள். 9, 10 பதிகங்கள் வர்ஷ ருதுவின் 2-ம் மாதமாகிய புரட்டாசி மாதத்தைப் பேசுகின்றன. கோடற்பூக்களும், தோன்றிப் பூக்களும் மலரவும், மயில்கள் தோகைவிரித்தாடவும், மழையே மழையே என்று விளிக்கவும், இந்த கார்காலத்தின் குறிப்புகளை அவை சொல்லுகின்றன. இதற்கும் சரண்யன் கைவரானாகி 11-வது பதிகத்தில் திருவரங்கத்தம்மானைக் குறிக்கொண்டு, 'தன்னை அடைந்தாரைக் கைவிடேன்' என்று அவன் பேசியுள்ள வார்த்தை-களில் 8, 10-வது பாடல்களில் வற்புறுத்தி 9-வது பாடலில் ருக்மணியைக் கைவிடாதிருந்ததான செயலையும் காட்டி வேண்டுகிறாள்.

11. இனி 12 முதல் 14-வது பதிகங்கள் சரத் ருதுவைக் குறிக்கின்றன. இதற்கு ஆகரம் ஸ்ரீ பாகவதம் 10-வது ஸ்கந்தத்தில் 20, 21 அத்யா-யங்களில் கண்ணன் வேணுகானம் செய்வதும் கோபிகளோடு கூடி விளையாடுவதும் சரத் ருதுவில் என்று குறிக்கப்பெற்றுள்ளது.

12 முதல் 14-வது பதிகங்கள் இந்த லீலையையே பேசுவதால் இதை சரத் ருதுவின் நிகழ்ச்சிகள் என்பது கொள்ளற்பாலது. 12-வது பதிகம் 7-வது பாடலில் 'வண்ணம் திரிவும் மனங்குழைவும் மானமிலாமையும் வாய் வெளுப்பும் உண்ணல் உறாமையும் உள் மெலிவும்' என்ற விரகச் சின்னங்கள் கோபியர் கண்ணனை அடையக் கொண்ட ஆர்வத்தைக் குறிக்கிறது. 13-ம் பதிகம் 5-ம் பாடலின் பிற்பகுதி 'தழையின் பொழில் வாய் நிரைப் பின்னே நெடுமாலூதி வருகின்ற குழலின் துளை வாய் நீர் கொண்டு குளிர முகத்துத்தடவீரே' இதில்'குழலூதி வருகின்ற' என்னும் நிகழ்காலம் ஸ்ரீ பாகவத்தில் சரத் ருதுவில் சொன்ன வேணுகானத்தை அனுகரிக்கிறது நோக்கத்தக்கது. இனி சரத் ருதுவின் முடிவில் ப்ருந்தாவனத்தில் பகவானை இவள் தேடிக் கண்டதாக 14-ம் பதிகம் முடிகிறது. இங்கே ஸ்ரீபாகவதத்தில் தசமஸ்கந்தம் 21-வது அத்யாயத்தில் கோபிகள் கண்ணனைப் பரந்தாமனென்றுணர்ந்து ஒருவர்க் கொருவர் அவனைக் குறித்துப் பேசிக் கொள்வதையனுகரிக்கிறது.

12. மேற்கூறியவற்றால் 'ஸ்வர்கமயதம் அப்யர்ச்ய சித்திம் விந்ததி மானவா:' என்னும் கீதை வாக்கியம் நிரூபிக்கப்பெறுகிறது. 6 ருதுக்களாலும் பயன் தருவது பூதேவியின் (கர்ம) செயலாகும் ஸ்வபாவமாகும். இவ்வாறு ருதுக்களின் பயன்களையும் ஸ்வகர்மாவாக பகவானுக்கு அர்ப்பித்தலே நாச்சியார் திருமொழியாகும். இது ஹேமந்தம் தொடங்கி சரத் ஈறாக நடைபெற்றது. பருவஞ்செய்யும் பருவக்கன்னியின் பணியாகும்.

இனி வாரணமாயிரப் பதிகத்தைக் குழமண மொழிதலாகவும் 3ம் பதிகத்தைப் பாவையாட்டாகவும் கொண்டு, மேலே காட்டப்பட்ட பிங்கல சூத்திரத்திற்கண்ட நால்வகை நோன்புகளையும் இவள் நிறைவேற்றியுள்ளாள் என்பதும் அறியத்தக்கது.

**ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்**

**ஸ்ரீமதே ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:**



தார்மிக ரத்ன ப்ரதீப ஸ்ரீ உ.வே. **N.R. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்** (1886-1966) தஞ்சை ஜில்லா நீடாமங்கலத்தில் 23.9.1886ல் (விய வருடம் புரட்டாசி 6-ம் நாள்) பிறந்தார். இவர் தம் ஏழாவது வயதில் கவிச்சக்ரவர்த்தி கம்பனின் கம்பராமாயணத்தின் அறிமுகம் ஒரு பெரியவரின் ஆசியுடன் கிடைக்கப் பெற்று அவ்விளம் வயதிலேயே அந்நூலை முழுவதும் மனனம் செய்தார்.

சங்கத் தமிழ் வளர்த்த மதுரையில் வழக்கறிஞராக இருந்த இவர் வேதமும், வடமொழியும் கற்று நல்ல புலமை பெற்றிருந்தார். சுமார் நாற்பதாண்டுகள் மதுரை தமிழ்ச் சங்க செயலராகவும், சில காலம் சமஸ்க்ருத அகாதமியின் தலைவராகவும் பணியாற்றினார். மும்மொழிகளிலும் இவர் ஆய்ந்து எழுதிய கட்டுரைகள் பல பத்திரிகைகளில் வெளிவந்துள்ளன. சிறந்த வைணவச் செம்மலாகத் திகழ்ந்த இவர் பொருள் நயத்துடனும், நகைச்சுவையுடனும் சொற்பொழிவாற்றுவதில் வல்லவர்.

திருப்பாவைக்கு ஆன்றோர்கள் பலரும் அரிய உரைகள் அருளியுள்ள போதிலும், சங்க நூல்களில் பெரும்புலவர்கள் கையாண்ட சொற்களும், பொருள்களும் 'கோதைத் தமிழில்' நிறைந்து காணப்படுவதால் 'திருப்பாவை ஒரு சங்கத்தமிழாலான வைணவ இலக்கியம்' என்பது இவர் கருத்து. இந்நோக்கில், வைணவக் கோட்பாடுகளினின்றும் சிறிதும் வழுவாமல் இவருடைய **'சங்கத் தமிழ் மாலை'** என்னும் இவ்வனுபவவுரை ஒரு புதிய கண்ணோட்டத்தில் எழுதப்பட்டுள்ளது.